# கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

நா. தனலெட்சுமி
(பதிவு எண்.1742)

**நெறியாளர்**

**பேராசிரியர்.சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப் பண்பாட்டு மையம்**

## அழகப்பா பல்கலைக்கழகம்

**(தேசியத் தர நிர்ணயக் குழுவின் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**நவம்பர் - 2021**

# கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

நா. தனலெட்சுமி
(பதிவு எண்.1742)

**நெறியாளர்**

**பேராசிரியர்.சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப் பண்பாட்டு மையம்**

## அழகப்பா பல்கலைக்கழகம்

**(தேசியத் தர நிர்ணயக் குழுவின் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**நவம்பர் - 2021**

**முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை,** எம்.ஏ.,எம்.ஃ.பில்,பி.எட்,பி.எச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்,
தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**'கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை'** என்னும் தலைப்பில் திருமதி **நா. தனலெட்சுமி** அவர்கள் பகுதிநேர முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இவ்ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தமிழ்ப் பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை)**
**நெறியாளர்.**

**நா. தனலெட்சுமி, (பதிவு எண்.1742)**
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**'கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை'** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(நா. தனலெட்சுமி)**

**ஆய்வாளர்.**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை**, எம்.ஏ.,எம்.ஃபில்,பி.எட்,பி.எச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்,
தமிழ்ப் பண்பாட்டு மையம,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003.

# நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப் பண்பாட்டு மையத்தில் **"கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை"** என்னும் தலைப்பிலான முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும் மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வின் நெறியாளராகவும் எனது தோழமையாகவும் இருந்து ஊக்கம் அளித்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்கு உதவிய தமிழ்ப் பண்பாட்டு மையப் பேராசிரியர் மற்றும் இயக்குநர் **முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை** அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றிகள் என்றும் உரியன.

இத்தலைப்பில் ஆய்வு செய்வதற்கு அனுமதி நல்கிதோடு, தம்முடைய நூல்களையும் கொடுத்துதவிய **கவிஞர் தங்கம் மூர்த்தி** ஐயா அவர்களுக்குச் சிறப்பான நன்றிகள் பல. ஆய்விற்குத் தேவையான தரவுகளைத் திரட்ட உதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும் நன்றிகள் பல.

தமிழ்ப் பண்பாட்டு மைய உதவிப்பேராசியர் கா.கணநாதன், முனைவர் பட்ட ஆய்வாளர்கள், அலுவலகப் பணிபுரியும் பா.ஐஸ்வர்யா, சே.விஜயாள், சே.கார்த்திகா ஆகியோருக்கும் மனமாந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு செய்ய ஊன்றுகோலாய் இருந்த என் தாயார் **நா.சீதாலட்சுமி,** நினைவில் வாழும் என் தகப்பனார் **ப. நாகராஜன்** உற்ற துணையாய்த் திகழும் என் கணவர் **பா. ஆனந்த்,** என் மகன் **ஆ. விஜய் ஸ்ரீதர்** மகள் **ஆ. ஜெயஸ்ரீ** ஆகியோருக்கும் தூண்டுகோலாக இருந்த சகோதரர் **நா. பாலசுப்பிரமணியன் - சுபா** இணையருக்கும். சகோதரிகள் **சு.சரஸ்வதி, நா.கோமதி** ஆகியோருக்கும் பட்டமங்கலம் ஸ்ரீராமஜெயம் வித்தியாலயத்தின் உரிமையாளர் **திருமதி கற்பகம்** அவர்களுக்கும் அன்பிற்கினிய நன்றி.

என்னை எப்போதும் நல்லாற்றுப் படுத்தும் என் இனிய தோழமைகளுக்கும் என்னுடன் பணிபுரியும் ஆசிரியப் பெருமக்களுக்கும் என் நலன் விரும்பும் அத்துணை நல் நெஞ்சங்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

**நா.தனலெட்சுமி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.வா.வி.எ.நி. | - | அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள் |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| எ.ப.நா. | - | என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து |
| க.ந.கா. | - | கவிதையில் நனைந்த காற்று |
| சூ. | - | சூத்திரம் |
| த.சி.த.த. | - | தங்கமே சிங்கைத் தமிழுக்கில்லை தட்டுப்பாடு |
| த.மூ.க. | - | தங்கம் மூர்த்தி கவிதைகள் |
| தே.தே. | - | தேவதைகளால் தேடப்படுபவன் |
| நூ. | - | நூற்பா |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பொ.பெ.ம. | - | பொய்யெனப் பெய்யும் மழை |
| ம.கை. | - | மழையின் கையெழுத்து |
| மு.பூ.ரோ. | - | முதலில் பூத்த ரோஜா |

## முன்னுரை

படைப்பிலக்கியவாதி தனது கால அறவியல், அரசியல் முதலியவற்றில் தோ்ந்த உணா்வோடு ஈடுபட்டால்தான் பெருமைக்குரிய படைப்புகளை உருவாக்க முடியும். ஏனெனில் படைப்பிற்கு உலக வழக்கே அடிப்படையாக அமையும். இங்ஙனம் உலக வழக்கையே அடிநாதமாகக் கொண்டு புதுக்கவிதை படைத்துவரும் கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகளுக்கு இலக்கிய உலகில் குறிப்பிடத்தக்க இடமுண்டு. புதுக்கவிதை, ஹைக்கூ எனக் காலத்திற்கேற்ற கவிதை வடிவங்களைப் படைத்துள்ள கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் காணலாகும் இலக்கியக் கொள்கை பற்றி ஆய்வு செய்வது திறனாய்வு உலகிற்குப் பெரிதும் பயன் நல்கும்.

### ஆய்வுத் தலைப்பு

இருபதாம் நூற்றாண்டில் வாழும் கவிஞா்கள் வரிசையில் தமக்கெனத் தனி முத்திரை பதித்தவர் கவிஞா் தங்கம் மூர்த்தி. அவா் தம் கவிதைப் படைப்புகளை ஆய்வு செய்யும் நிலையில் **“கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

### ஆய்வு நோக்கம்

கவிஞன் என்பவன் மிகச்சிறந்த காலக்கண்ணாடி. கவிஞன் தன் முன்னோர்கள் வாழ்ந்த காலத்துப் பெருமைகள், தான் காணும் உலகின் உன்னதங்கள், இவ்வுலகில் தான் காண விழையும் மாற்றங்கள் என்ற முப்பரிமாணங்களையும் தன் கவிதையின் பாடுபொருளாக அமைத்துக் காட்டி அழகு பார்ப்பவன். அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டின் தகைமை சால் தமிழ்க் கவிஞா் குழாத்தில் தனிமுத்திரை பதித்து வரும் கவிஞா் தங்கம் மூர்த்தியின் படைப்புகளை ஆராய்வதன் வழி அவா்தம் படைப்பிலக்கியங்களின் தனித்தன்மையை வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வின் கருதுகோள்

கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகள் பல்வேறு வடிவங்களில் பல்வேறு பொருண்மைகளில் பாடப் பெற்றுள்ளன. எனவே அவா் தம் படைப்புகளை ஆராய்வதன் வழி அவர் தம் படைப்பிலக்கியக் கொள்கையை உருவாக்க முடியும் என்பது ஆய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வு எல்லை

கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்புகளான முதலில் பூத்த ரோஜா, மழையின் கையெழுத்து, கவிதையில் நனைந்த காற்று, என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து, பொய்யெனப் பெய்யும் மழை, கவிதை வெளியினிலே, அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள், தங்கமே சிங்கைத் தமிழுக்கில்லை தட்டுப்பாடு, தேவதைகளால் தேடப்படுபவன் என்னும் ஒன்பது நூல்கள் இவ்வாய்வின் எல்லை ஆகும்.

## ஆய்வு மூலங்கள்

கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்புகள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுவதால் அவரது படைப்புகளாகிய ஒன்பது நூல்கள் முதன்மை ஆதாரங்களாக (Primary Sources) எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன. புதுக்கவிதை குறித்து வெளிவந்த நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், திறனாய்வு நூல்கள் போன்றவை துணைமை ஆதாரங்களாகக் (Secondary Sources) கொள்ளப் பெற்றுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

தமிழ்க் கல்விப் புலச்சூழலில் ஏராளமான புதுக்கவிதைப் படைப்புகள் ஆராயப்பெற்றுள்ளன. இதில் தேவதேவன் கவிதைகள் அழகியல் நோக்கு - கே.கண்ணன் (1987) மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பெ. தூரன் கவிதைத்திறன் - வெ. சத்திய மூர்த்தி (1990) அழகப்பா பல்கலைக்கழகம், கவிஞர் பழனிபாரதியின் படைப்புகள் ஓர் ஆய்வு பெ.ஜெயக்குமார் (2000) பாரதிதாசன் பல்கலைக்கழகம். கே.சீவபாரதி கவிதைகள் - ஓர் ஆய்வு - பெ. சந்திரசேகரன் (2002) பாரதிதாசன் பல்கலைக்கழகம், யூமா வாசுகியின் கவிதைகள் ஒரு பார்வை - ஜெ. காந்திமதி (2003) பாரதிதாசன் பல்கலைக்கழகம், கவிஞர் வைரமுத்துவின் கவிதைகளில் சமுதாயக் கருத்துக்கள் - ஆ. சேசுராஜன் (2003) பாரதிதாசன் பல்கலைக்கழகம். சல்மா கவிதைகள் ஓர் ஆய்வு - ம. அருள்மணி (2004) பாரதிதாசன் பல்கலைக்கழகம். கவிஞர் மு. மேத்தாவின் கவிதைகளில் சமூக அவலங்கள் - ஏ.ஆர் திலகவதி (2004) பாரதிதாசன் பல்கலைக்கழகம், அப்துல் ரகுமான் கவிதைகளில் சமுதாயப் பிரச்சனைகள் - ஆ. நளினி சுந்தரி (2004) பாரதிதாசன் பல்கலைக்கழகம், முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை - ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ் (2018) அழகப்பா பல்கலைக்கழகம் ஆகிய ஆய்வேடுகளும், டாக்டர். ச. விஜயலட்சுமியின் தமிழ்க் கவிதைகளில் பெண்ணுரிமை (2002), பேரா.ச.இராமச்சந்திரனின்

தமிழ்க்கவிதையின் புதிய போக்குகள் (2009), என்னும் நூல்களும் ஆய்வு முன்னோடிகளாக அமைந்துள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

படைப்பாளரின் படைப்புகளைத் தொகுத்தும் பகுத்தும் விளக்கும் நிலையில் பகுப்பியல் மற்றும் விளக்கவியல் ஆகிய அணுகுமுறைகள் இவ்வாய்வின் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வேடு முன்னுரை முடிவுரையுடன் நான்கு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. அவையாவன:

1. **தங்கம் மூர்த்தியின் இலக்கிய வடிவக் கொள்கை**
2. **தங்கம் மூர்த்தியின் இலக்கிய உள்ளடக்கக் கொள்கை**
3. **தங்கம் மூர்த்தியின் இலக்கிய உத்திகள்**
4. **தங்கம் மூர்த்தியின் படைப்பாக்க நெறியில் மரபும் புதுமையும்**

**இயல் ஒன்று**

தங்கம் மூர்த்தியின் இலக்கிய வடிவக் கொள்கை என்பது முதலாவது இயலாகும். உயிருக்கு உடல் போல இலக்கியத்திற்கு வடிவம் இன்றியமையாதது. படைப்பாளர் எண்ணத்தில் உதிக்கின்ற கருத்து வெளிப்பட வடிவம் தேவைப்படுகின்றது. எனவே கவிஞர் தம் கருத்து வெளிப்பாட்டிற்குக் கையாண்டுள்ள கவிதை வடிவங்கள் குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**இயல் இரண்டு**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் இலக்கிய உள்ளடக்கக் கொள்கை என்பது இரண்டாவது இயல் ஆகும். தங்கம் மூர்த்தியின் கவிதைகள் தனி மனித வாழ்வியல் மற்றும் சமூகம் என்னும் இரு நெறிகளில் காணப்பெறுகின்றன. எனவே, இவற்றை அடிப்படையாகக் கொண்டு தங்கம் மூர்த்தியின் படைப்புகளின் உள்ளடக்கத்தை இயற்கை, காதல், குடும்பம், சமூகம், தன்னுணர்வு என்னும் ஐந்து நிலைகளில் ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**இயல் மூன்று**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் இலக்கிய உத்திகள் என்பது மூன்றாவது இயல் ஆகும். படைப்பாளன் தனது உணர்வை வாசகன் உய்த்துணர்ந்து இன்பம் அடைவதற்குரிய ஒரு வலிமையான கருவியாக உத்தியைக் கையாளுகிறான். படிப்போர் என்பதற்காக மட்டுமின்றி படைப்பின் உருவம் மற்றும் உள்ளடக்கத்தை இணைக்கின்ற பாலமாகவும் உத்தி அமைகிறது. எனவே கவிஞர் தங்கம் மூர்த்தி அவர்கள் தம் படைப்புகள் சிறக்கக் கையாண்ட உத்திமுறைகள் குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**இயல் நான்கு**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பாக்க நெறியில் மரபும் புதுமையும் என்பது நான்காவது இயலாகும். காலத்திற்கும் சூழலுக்கும் தக்கவாறு இலக்கியம் தன்னை தகவமைத்துக் கொள்ளும். காலச் சூழலுக்கு ஒவ்வாத இலக்கிய மரபுகள் தேய்ந்து மறைவதும் தேவையின் அடிப்படையில் புதிய இலக்கிய நெறிகள் தோன்றி வளர்வதும் இலக்கிய உலகில் இயல்பாக நிகழ்வனவாகும். அவ்வகையில் கவிஞர் தம் மரபு போற்றும் பான்மையும் புதுமை காணும் பெற்றியும் அவர்தம் இலக்கியக் கொள்கையை உணரச் செய்வதாக அமையும். எனவே கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் காணலாகும் மரபு, புதுமை ஆகிய இரு கூறுகளையும் ஆராய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் இடம் பெற்றுள்ளன. இதனையடுத்து ஆய்வுக்குத் துணையாக அமைந்த நூல்களின் பட்டியல், பின்னிணைப்புகள் போன்றவை இடம்பெற்றுள்ளன.

# பொருளடக்கம்

## இயல் - 1

## தங்கம் மூர்த்தியின் இலக்கிய வடிவக்கொள்கை

மரபுக் கவிதைகளின் இலக்கணங்களை மீறி, கவிஞன் தன் உள்ளத்து உணர்வுகளுக்குக் கருத்துச் செறிவு ஊட்டி, புதுமைப் போக்கில் படைக்கும் இலக்கியம் புதுக்கவிதை எனும் உருவம் பெறுகிறது. இருபதாம் நூற்றாண்டில் படைப்பாளர்களால் பெரிதும் கையாளப் பெற்ற ஓர் இலக்கிய வடிவம் புதுக்கவிதை ஆகும். இத்தகு புதுக்கவிதையையே தம் கவிதை வடிவாகத் தேர்வு செய்த கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதை வடிவக் கொள்கை குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### வடிவம் - சொல்லும் பொருளும்

வடிவம் என்ற சொல்லிற்குத் திவாகரம், மேனி, உரு, மெய், நிறம்[1] என்று பொருள் உரைக்கின்றது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி "உள்ளடக்கத்திற்குத் தகுந்த புற அமைப்பு, உருவம், உடல், அழகு, செம்மை, நேர்த்தி"[2] என்று விளக்கம் அளிக்கிறது.

இதன்வழி உள்ளடக்கத்திற்குத் தகுந்த புறநிலை அமைப்பு உருவம் என்பது புலனாகும்.

### கவிதை - புதுக்கவிதை சொல்லாட்சி

மக்களின் வாழ்வியல் நிலைகளையும் இயற்கை நிகழ்வுகளையும் மற்றும் தான் வாழும் சமுதாயத்தில் நிலவும் சூழல்களையும் தன் கற்பனைத் திறனுடன் கலந்து கவிஞன் படைக்கும் இலக்கிய மெருகேறிய பாக்கள் கவிதை ஆகும்.

புதுக்கவிதை என இன்று வழங்கப்படுவது தொடக்க காலத்தில் இருந்து பலராலும் பல பெயர்களால் வழங்கப்பட்டு வந்துள்ளது. "உரைப்பா, உரைவிடு பா, உரைகவிதை, வசன கவிதை, இலகு செய்யுள் அல்லது இலகு கவிதை, கட்டற்ற கவிதை, யாப்பற்ற கவிதை, விடுநிலைப்பா, புதிர்க்கவிதை, நவகவிதை, சீர்திருத்தக் கவிதை, யாப்பு மீறிய கவிதை, புரட்சிக் கவிதை, விலங்குகள் இல்லாத கவிதை, திறந்தவெளிக் கவிதை, பேச்சு நிலைப்பா, பழகு தமிழ்க் கவிதை, மின்னற் கவிதை, மீறல் கவிதை, மனம் உணர் கவிதை, நறுக்குக் கவிதை"[3] என்று புதுக்கவிதைக்குப் பல பெயர்கள் சுட்டப்படுகின்றன.

புதுக்கவிதை, "வசன கவிதை, விடுநிலைப்பா, கட்டற்ற கவிதை எனப் பல பெயர்களால் தொடக்க காலத்தில் அழைக்கப் பெற்று 1980-களில் புதுக்கவிதை எனும் பெயரில் நிலைகொண்டுள்ளது"[4] என்பர் முனைவர் பாக்கியமேரி.

பழக்கத்தில் உள்ள நிலையில் இருந்து சிறிதளவோ முற்றிலுமோ மாறுபட்டுத் தோன்றுவது புதுமை எனப்படும். வழிவழியாக மரபு கெடாது யாப்பிலக்கணத்தோடு பொருந்தி வரும் கவிதைகளில் இருந்து மாறுபடும் கவிதைப்படைப்பு தான் புதுக்கவிதை ஆகும். புதுக்கவிதைகள் உருவத்தால் மட்டுமன்றி உள்ளடக்கம், உத்தி முறைகள் ஆகியவற்றாலும் புதுமை உடையனவாகும்.

புதுக்கவிதைகள் சுருங்கக் கூறல், விளங்க வைத்தல் என்னும் கவிஞனின் ஆற்றல்களையும் நோக்கில் புதுமையையும் சிந்தனையில் தெளிவையும் கற்பனை நயத்தையும் வாழ்வின் நடப்பியல் உண்மை சுட்டும் போக்கையும் கவிஞனின் மனிதநேயப் பண்பையும் சமுதாய அக்கறையையும் தன்னகத்தே கருத்துகளாகக் கொண்டுள்ளன. அதனால்தான், புதுக்கவிதை வடிவம் என்பது கத்தி முனையில் நடப்பதைப் போன்றது. புதுக்கவிதை பாட முயல்வோன், பொருளை நேரடியாக அணுகுதல், தேவையில்லாத ஒரு சொல்லையும் பயன்படுத்தாது இருத்தல், இறுக்கமான யாப்பு முறைகளை விட்டு இசை நயத்தைப் பின்பற்றுதல் என்னும் நெறியைப் பின்பற்றுதல் வேண்டும் என்பர். கவிஞர் மு.மேத்தா புதுக்கவிதை குறித்து,

**இலக்கணச் செங்கோல்**
**யாப்புச் சிம்மாசனம்**
**எதுகைப் பல்லக்கு**
**மோனைத் தேர்கள்**
**தனிமொழிச் சேனை**
**பண்டித பவனி**
**இவை எதுவும் இல்லாத**
**கருத்துக்கள் தம்மைத் தாமே**
**ஆளக் கற்றுக்கொண்ட**
**புதிய மக்களாட்சி முறையே**
**புதுக்கவிதை**[5]

என்றுரைப்பது புதுக்கவிதையின் இலக்கணத்தையும் இயல்பையும் நன்கு புலப்படுத்தும்.

**புதுக்கவிதை - பரிணாம வளர்ச்சி**

தமிழ் இலக்கிய உலகில் புதுக்கவிதைக்கு முன்னோடியாகக் கருதப்படும் மகாகவி பாரதியார் காலத்தில் 'தேசபக்தி' எனும் பொருளில் தொடங்கிய கவிதையின் பயணம், மணிக்கொடி காலத்தில் ந.பிச்சமூர்த்தி, தருமு சிவராமு, பசுவய்யா முதலான கவிஞர்களால் புதிய எல்லைகளைத் தொட்டு வளர்ந்து வந்துள்ளது. புதுக்கவிதையின் வடிவத்தையும் அது மரபுக் கவிதையிலிருந்து எப்படி மாறுபட்டுள்ளது என்பதையும் சொல்ல வந்த கவிஞர் வைரமுத்து,

**புதுக்கவிதை எனும் போர்வாள்**
**இலக்கண உறையிலிருந்து**
**கவனமாகவே**
**கழற்றப்பட்டிருக்கிறது.**[6]

என்றுரைப்பர். மேலைச் செய்திகளின் வழி, பண்டைய பா வடிவங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு புதிய பாவடிவமே புதுக்கவிதை என்பது புலனாகும்.

"கவிதைக் கலையில் ஒரு வகை மாற்றம் நிகழ வேண்டும் என்பது பலரது வேட்கையாக இருந்தது. இதனால் உருவ அமைப்பை விடக் கருத்து வெளிப்பாட்டிற்கு முதன்மை தர வேண்டும் என்ற குரல் ஓங்கியது. எனவே புதுக்கவிதை பிறந்தது."[7] என்னும் கூற்றுகள் புதுக்கவிதையின் தோற்றத்திற்குரிய காரணிகளைக் குறிப்பிடும்.

**புதுக்கவிதை வடிவங்கள்**

பாரதியின் வசன கவிதைகள் வடிவத்தில் உரைநடையாகவும் பொருளில் கவிதையாகவும் அமைந்திருப்பதைக் கண்டதாலும் அமெரிக்கக் கவிஞர் வால்ட் விட்மனுடைய வசன கவிதைத் தாக்கத்தாலும் உரைநடை வடிவத்திலேயே கவிதை அமையலாம் எனக் கவிஞர்கள் துணிவு பெற்றனர். ஆயினும் அது முழுமையான உரைநடை அன்று. உரைநடையின் எளிமை, தெளிவு, பேச்சுத் தன்மை, நேரடித் தன்மை ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, உரைநடையின் வாக்கிய அமைப்பில் செறிவு செய்து கவிதைக்குரிய வடிவம் உருவாக்கப்படுகிறது. சில கவிதைகள் யாப்பிலக்கண வற்புறுத்தல் இல்லாத எளிமையான எதுகை, மோனை, இயைபுத் தொடைகள் கொண்டுள்ளன. சில கவிதைகள் நாட்டுப்புறப்பாடல் சந்தங்களைப் பெற்றுள்ளன. சில கவிதைகள் ஆசிரியப்பா வடிவத்தை நெகிழ்ச்சி செய்து வடிவமைந்துள்ளன. ஞானக்கூத்தன் அறுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தச் சந்தங்களைச் சிற்சில மாற்றங்களுடன் புதுக்கவிதைக்குப் பயன்படுத்தியுள்ளார். பெரும்பாலான

புதுக்கவிதைகள் உரைநடை வடிவில் கருத்துக்கும் உணர்வுக்கும் ஏற்றவாறு வரி அமைப்பைப் பல்வேறு விதமாக அமைத்துப் படைக்கப்பட்டவை. எடுத்துச் சொல்லும் முறையும் வரி அமைப்பில் ஏற்படும் நிறுத்தங்களும் புதிய படிமங்களும் குறியீடுகளும் கவிதையின் தொடக்கம், முடிவு ஆகிய அமைப்புகளும் பொருள் போக்கை, உணர்வுப் போக்கைத் தடுக்காத ஒலி நயங்களும் புதுக்கவிதையின் வடிவாக ஏற்கப்பட்டுள்ளன.

யாப்பிலக்கணத்தை மீறியது புதுக்கவிதை என்றாலும், புதுக்கவிதைக்கும் இலக்கணம் எழுதப் பெற்றுள்ளது. சரவணத் தமிழன் என்பவர் யாப்பு நூல் என்பதில் இதற்குரிய இலக்கணத்தைக் குறிப்பிடுகிறார். யாப்பு நூல் புதுக்கவிதை குறித்து 6 நூற்பாக்களில் உரைக்கின்றது.

**புதுப்பா ஓரடி பெறுமே**[8]

**அசைப்பா தளைப்பா புதுப்பா திரைப்பா**
**இசைப்பா ஒளிப்பா அறுபா தமிழ்ப்பா**[9]

**மரபுப் பாட்டெனும் முன்னமை பாக்களின்**
**அசை எழுத்து ஒழுங்கும் தொடையும் கருத்தை**
**விரும்பும் வீச்சில் சொல்லத் தடுத்தலின்**
**அரும்பும் பாவலர் அமைத்தது புதுப்பா**[10]

**உருவக உத்திகள் புதுப்பா வேறு**
**திரிபுறு பாடலாம் உரைப்பா வேறு**[11]

**கொடுமையை எதிர்த்துக் கொதிக்கும் நெஞ்சம்**
**கடுமையைக் காட்டச் சிறந்தது புதுப்பா**
**அயற்சொல் குறைத்துப் பாலியல் தவிர்த்தால்**
**முயற்சி சிறந்து முற்றுப்பெறுமே.**[12]

**அசையொழுங் குடைத்தபுதுப்பா எதுகையை**
**வசையெனக் கருதினும் அடிவரை யறையாய்**
**மோனைச் சொற்களில் முறித்து மடியலாம்.**[13]

மேலை நூற்பாக்கள் புதுக்கவிதைக்கான அடி அமைப்பு, பாவகையுள் புதுப் பாவின் இடம், புதுப்பாவிற்கான இலக்கணம், உரைப்பாவிலிருந்து புதுப்பா வேறுபடும் விதம், புதுப்பா இயற்றும்போது தவிர்க்க வேண்டியவை, புதுப்பாவின் அடிவரையறையைக்

கட்டமைக்கும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய விதிமுறைகள் எனப் புதுக்கவிதைக்குரிய இலக்கணத்தைக்குறிப்பிடுகின்றன.

சரவணத் தமிழனைத் தொடர்ந்து இராசேந்திரனின் ‘புதுக்கவிதை இலக்கணம்’(2004) என்ற நூலும் உறுப்பியல், கவிதை இயல், ஒழிபு இயல் என்னும் மூன்று இயல்களில் புதுக்கவிதைக்குரிய இலக்கணத்தை எடுத்துரைக்கின்றது. இந்நூலில் இரா. இராஜேந்திரன் புதுக்கவிதையின் வகைமையை

**வகையின் அடிப்படை வடிவம் ஆகும்**[14]

என்று கூறுகிறார்.

“காலந்தோறும் உருவத்தாலும் உள்ளடக்கத்தாலும் மாற்றம் பெற்று வரும் தமிழ்க் கவிதை மரபில் புதுக்கவிதை தோன்றியதும் ஒரு மரபேயாகும். தமிழ்க்கவிதை வரலாற்றில் மாற்றம் என்பதே மரபாக வருகின்றது. வளர்ந்து வரும் சமுதாயத்தின் உணர்வுக்கும் மாறிவரும் காலத்தின் தேவைக்கும் ஏற்றவகையில் உருக்கொண்டு வளர்ச்சி பெறுதலே இலக்கியத்தின் இயல்பு”[15] அவ்வகையில் புதுக்கவிதையை வடிவங்களின் அடிப்படையில்,

**அடித்தொடர் பாவே கருத்துக் கோவையே**
**தொடர்நிலைப் பாவே சித்திரப் பாவே**
**குறும்பா தன்னொடு பொதுவென வரூஉம்**
**கவிதை வகையே மூவிரண் டாகும்**[16]

என்று வகைப்படுத்துவர் இரா.இராசேந்திரன். இதன்வழிப் புதுக்கவிதை, அடித்தொடர்பா, கருத்துக்கோவைப்பா, தொடர்நிலைப்பா, சித்திரப்பா, குறும்பா, பொதுப்பா என ஆறு வகைப்படும் என்பது புலனாகும்.

இது மட்டுமன்றி இன்றைய புதுக்கவிதைகள் ஹைக்கூ (துளிப்பா) சென்ரியு (நகைத் துளிப்பா) லிமரைக்கூ (இயைபுத் துளிப்பா) எனப் பல வடிவங்களில் எழுதப்படுதல் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு புதுக்கவிதையின் உருவ வளர்ச்சி பல்வேறு நிலைப்பாடுகளைக் கொண்டுள்ளது. புதுக்கவிதை அமைப்பில் மரபுக்கவிதைகளின் வடிவம் இருந்தாலும் ஹைக்கூ போன்ற புதுப்புது வடிவ அமைப்பு வெளிநாட்டுக் கவிதை அமைப்பிலிருந்து தோன்றியது என்பதில் ஐயமில்லை. தமிழ்க் கவிதையின் வளர்ச்சிக்குப் புதுக்கவிதை ஆதாரமாய் அமைந்தாலும் அதன் உள்ளடக்கம் மரபுக் கவிதையின் மரபில் இருந்து

மாறவில்லை. இதனைப் புதுக்கவிதையின் வரலாற்றை ஆராயும்போது தெளிந்து உணர முடிகிறது.

கவிஞர் தங்கம் மூர்த்தி அவர்கள் பெரும்பாலான கவிதைகளைக் குறும்பா வடிவிலும் (ஹைக்கூ) அடித்தொடர் பாவிலும் எழுதியுள்ளார். பல அடிகள் தொடர்ந்து வந்து ஒரு கருத்து முற்றுப் பெற்றால் அது அடித் தொடர்பா ஆகும். அடித்தொடரே-வாக்கியமே பாவாக வருவது அடித்தொடர்பா ஆகும். கவிஞரின் படைப்புகளிலேயே மிகச்சிறிய கவிதையாக ஓரடியில் ஒரு சொல் மட்டுமே நின்று மூன்று அடிகள் கொண்டதாக,

**தத்துவங்கள்**
**பிறக்கின்றன**
**மயானங்களில் (ம.கை.ப.84)**

என்று மிக எளிமையாக ஒரு வாழ்க்கைத் தத்துவத்தைக் கவிஞர் இப்பாவால் விளக்கியுள்ளார். அடித்தொடர்ப் பாவில் இருசீர் அடிகள் மிகுந்து வரும் என்பதை, இருசீர் அடியே மிகுந்து வருமே.[17] என்னும் நூற்பா விளக்கும். சான்றாக

**விலங்குகளை மனிதராக்கினார்**
**மனிதர்களைக் கடவுளாக்கினார் (அ.வா.வி.எ.நி.ப.55)**

எனக் கம்பராமாயணக் கருத்தை சுருக்கமாக இரண்டு அடித்தொடர்பாவால் படைத்துக் காட்டியுள்ளார்.

மூன்று அடித்தொடர் பாவாக,

**துடைக்கத் துடைக்க**
**உன் நினைவுகள்**
**ஒட்டடையாய் (மு.பூ.ரோ.ப.50)**

என்ற கவிதை அமைந்துள்ளது.

நான்கடி அடித்தொடர்பாவாக,

**திருமண வீட்டின்**
**பன்னீர் தெளிப்பில்**
**கலந்திருக்கலாம்**
**காதலின் கண்ணீர் (எ.ப.நா.ப.28)**

என்ற கவிதை கவிஞரது ‘என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து’ என்னும் நூலில் அமைந்துள்ளது.

ஐந்தடி அடித்தொடர்பாவிற்கு,

**எங்கள் ஊரில்**
**ரோடு போட்டார்கள் -**
**நல்ல மழை**
**எங்கள் ஊரில்**
**ரோடு போடவில்லை (த.மூ.க.ப.115)**

என்னும் கவிதையும்,

ஆறடி அடித்தொடர்பாவிற்கு

**“கைகளை**
**வெளியே நீட்டாதீர்கள்”**
**அறிவிப்புப் பலகை**
**அவசியம் -**
**பேருந்துகளில் மட்டுமல்ல**
**அரசாங்க அலுவலகங்களிலும் (த.மூ.க.ப.103)**

என்னும் கவிதையும் சான்றாக அமைந்துள்ளன.

ஏழு அடி அடித்தொடர்பாவாக,

**தேசம்**
**ஒரு கவலை**
**இல்லாமல்**
**இருக்க வேண்டுமெனில்**
**இருகுவளை**
**இல்லாமல்**
**இருக்க வேண்டும். (பொ.பெ.ம.ப.24)**

என்ற கவிதை அமைந்துள்ளது.

**வெய்யிலில்**
**பதுங்கி**

**மழையில்**

**ஒதுங்கி**

**வெப்பமும்**

**ஈரமும் அற்றதாய்**

**வீணானது**

**வாழ்க்கை (எ.ப.நா.ப.27)**

என்பது எட்டு அடி அடித்தொடர்பாவாக அமைந்துள்ளது.

கருத்துக்கோவைப்பா என்னும் பாவகையின் இலக்கணத்தை,

**பொருந்தும் ஒன்றைத் தலைப்பாய் எடுத்துக்**

**கருத்துப் பல தொடுப்பது கோவை ஆகும்.**[18]

என்பர் இரா. இராசேந்திரன்.

கூறப்போகும் கருத்திற்குப் பொருத்தமான சொல்லையோ தொடரையோ தலைப்பாக வைத்து அதன் கீழ்ப் பல கருத்துகளைக் கோ(ர்)வையாக அடுக்கிச் சொல்வது கருத்துக் கோவைப்பா ஆகும். கருத்துக்கோவைப் பாவானது சில கருத்துக்கோவைப்பா, பல கருத்துக் கோவைப்பா, ஒரு பொருள்மேல் பல அடுக்கிய கோவைப்பா என்று மூன்று வகைப்படும்.[19] கவிஞரின் 'என் பண்டிகை நாட்குறிப்பிலிருந்து' என்ற நூலில் உள்ள,

**அது**

**எனக்கான வணக்கம் அல்ல**

**என்று தெரியும்.**

**ஆனாலும்**

**புன்னகைத்தேன்**

**வணங்கினேன்**

**கை குலுக்கினேன்.**

**புன்னகையும்**

**வணக்கமும்**

**கைகுலுக்கலும்**

**அவனுக்கானதல்ல என்று**

**அவனுக்கும் தெரியும் (எ.ப.நா.ப.63)**

என்ற கவிதை சில கருத்துக் கோவைப் பாவிற்குச் சிறந்த சான்றாகும்.

சில கருத்துக் கோவைப் பாவின் மேல் எல்லையாகிய ஐந்து கருத்துக்களைக் கடந்து செல்லின் அது பல கருத்துக் கோவைப் பா ஆகும்.[20] மீறின் என்று பொதுவாகக் கூறியுள்ளதால் இதன் மேல் எல்லைக்கு வரையறை இல்லை என்று கூறலாம். மேலும் பல கருத்துக்கோவைப் பாவில் பெரும்பான்மையாக முப்பது அடியினும் அமையுமோர் கருத்தே.[21] என்பதால் கருத்துக் கோவைப் பாவில் வரும் கருத்துகளில் ஒரு கருத்து மட்டுமே 30 அடி வரையிலும் வருதல் உண்டு என்பதை அறிய இயலும். 'உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை'. ஆகையால், அடுத்து அடி இகந்து வரினும் கடிவரை இன்றே.[22] என்றுரைப்பதன்வழி கருத்துக் கோவைப் பாவின் ஒரு கருத்தின் மேல் எல்லையாகிய 30 அடியினை மீறி ஒரு கருத்து வந்தாலும் அதனை விலக்குதல் இல்லை என்பதும் மேல் எல்லை மட்டும் கூறவே கீழ் எல்லை ஓரடி முதல் வரும் என்பதும் உள்ளுறையாய்ப் பெறத்தக்கது. கருத்துக் கோவைப் பாவில் முதலில் வந்த ஒரு கருத்து அதே பாடலில் மீண்டும் வருதலும் உண்டு.[23] இதற்கு

**காகங்கள் என்றால்**
**எனக்குப் பிடிக்கும்**
**கிளிகள் என்றால்**
**எனக்குப் பிடிக்காது (பொ.பெ.ம.ப.34-36)**

என்னும் கவிதை சான்றாகும். இதில் ஒரே கருத்தை இரண்டு முறை கூறி, இவ்விரண்டு கருத்துகளுக்குக் காரணங்களும் கற்பிக்கிறார்.

ஒரு பொருள் பற்றிய ஒரு கருத்தினைப் பலவகையாக விரித்துக் கூறி விளக்குவது ஒரு பொருள் மேல் அடுக்கிய கருத்துக் கோவைப் பா ஆகும். 'சிகரங்கள் தேடும் சிறகுகள்' எனும் தலைப்பில் அமைந்த,

**உற்சாகப் பறவை**
**கொஞ்ச நாட்களாய்**
**உறங்கிக் கொண்டே இருக்கிறது.**
**அதிக அலைச்சலால்**
**அசதியாய் இருக்குமோ..**
**இரை தேடல் தோல்வியால்**
**விரக்தியோ…..**

**கவலை மேகம்**

**திசைகளை மறைத்ததோ..**

**உட்கார்ந்த கிளைகளில்**

**முட்களால் தொல்லையோ…**

**நட்பெனும் காற்றில்**

**நச்சு கலந்ததோ…(த.மூ.க.ப.83)**

என்னும் கவிதை அடுக்கடுக்காய் உற்சாகம் தொலைவதற்கான சூழல்களைப் பலவிதமாகச் சுட்டிக்காட்டி ஒரு பொருள்மேல் அடுக்கிய கருத்துக் கோவைப்பாவிற்கு ஏற்ற சான்றாக அமைந்துள்ளது.

இவ்வாறமைந்த கருத்துக் கோவைப் பாக்களின் ஈற்றுச் சொல் அமையும் விதம் கொண்டு, பெயரீற்று ஒரு பொருள்மேல் அடுக்கிய கருத்துக் கோவைப்பா, வினையீற்று ஒரு பொருள்மேல் அடுக்கிய கருத்துக் கோவைப்பா என இருவகைப்படுத்தப்படுகின்றன. ‘ஆனந்தம் ஆனந்தமே’ எனும் தலைப்பில் உள்ள,

**அம்மா**

**பொய்க் கோபத்தால்**

**அடிக்க வருகையில்**

**Foe;ijfSld;**

**tpisahz;L**

**தோற்றுப் போவதில்**

**இன்னொருவரின்**

**துயரம் தீர்க்க**

**இம்சைப்படுவதில்**

**விருந்தினருக்கு**

**உணவிட்டுப்**

**பட்டினி கிடப்பதில்**

**இராத்திரியில் எழுப்பி**

**தூரத்து நண்பர்கள்**

**தொல்லை தருவதில்**

**Miraha; thq;fpa nghUis**

**Miraha;g; Ngrp ahNuDk;**

**வாங்கிப் போகையில்**

**நண்பர்கள் சேகரிக்க**

**சேகரித்த புத்தகத்தை**

**ஓசியிட்டு நட்டப்படுவதில்**

**உருப்பட மாட்டாய்**

**என்று வீட்டினர்**

**உரிமையோடு அர்ச்சிப்பதில் (த.மூ.க.பக்.51-52)**

என்னும் கவிதையில் ஒவ்வொரு கருத்தும் வினையில் முடிந்து உள்ளதால் இது வினை ஈற்று ஒரு பொருள் மேல் அடுக்கிய கருத்துக்கோவைப் பா ஆகும். பெயர் ஈற்று ஒரு பொருள் மேல் அடுக்கிய கருத்துக்கோவைப் பாவிற்குத் 'துன்பம் நேர்கையில்' எனும் தலைப்பில் அமைந்த கவிதை சான்றாகும். அது பின்வருமாறு

**வெளிச்சம்**

**பூக்கும்**

**புத்தகங்கள்.**

**,jak;**

**tULk;**

**,ir.**

**njhiytpy;**

**rphpf;Fk;**

**நிலா.**

**Jauk;**

**Jilf;Fk;**

**தோழர்கள்.**

**gpupak;**

**Cl;Lk;**

**பிள்ளைகள்.**

**,itfs;**

**இல்லாமல் போயிருந்தால்**
**இல்லாமல் போயிருப்பேன்**
**என்றோ நான். (எ.ப.நா.ப.41)**

இதில் அனைத்து ஈற்றுச் சொற்களும் பெயர்ச் சொற்களாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

கருத்துக் கோவையில் ஒரே கவிதையில் பெயர் ஈறும், வினை ஈறும் கலந்து வருவதும், போல, போன்ற என்னும் உவமஉருபுகள் ஈறாய் வருவதும் உண்டு. 'ஒரு காதலின் வரைபடம்' என்னும் தலைப்பில் உள்ள கவிதையில்,

**தலைமேல் அழகாய் மேகக் கும்பல் - உன்**
**விழிகள் எனக்கு வேடந்தாங்கல்.**

**அலைகள் அடிக்கடி கரையை மோதும் - உன்**
**அழகில் மயக்கம் அத்தனை மோகம்.**

**இரவின் தனிமை என்னைக் கொல்லும் - நீ**
**இருந்தால் அங்கே இனிமை வெள்ளம்.**

**இரவல் தந்தாய் இதயம் எனக்கு - என்**
**இதழ்களில் எழுதடி கூட்டல் கணக்கு.**

**பருவச் சிறகை விரித்துப் பறந்தேன் - உன்**
**பார்வைக் காற்றில் மோதி விழுந்தேன்.**

**வருசக் கணக்காய் செத்துக் கிடந்தேன் - ஒரு**
**வார்த்தை சொன்னாய் வானில் பறந்தேன். (த.மூ.க.ப.91)**

எனப் பெயரீறும் வினையீறும் விரவி வந்துள்ளன.

ஆட்டோக்காரனின் அறிவிப்பு பற்றிய செய்தியைக் கூறும் இடத்தில்,

**திரும்பி வரும் வழியெல்லாம்**
**அவன் குரல்**
**ஒலித்துக்கொண்டே இருந்தது.**
**அவனது மரணத்தை**
**அவனே அறிவிப்பதை போல். (எ.ப.நா.பக்.36-38)**

என்பதில் ‘போல’ என்ற உவமஉருபு ஈறாய் வந்துள்ளது.

ஒரு பொருள் மேல் அடுக்கிய கருத்துக் கோவைப்பா, ஈற்றில் பொருளை முற்றுவிக்கும் சுரிதகத்தைப் பெற்று வருதலும் உண்டு.[24] மரபுக்கவிதையில் ஒன்றான கலிப்பாவில் வரும் சுரிதகம் பொருள் முற்றுப் பெற வைக்கிறது. இதனைச் “சுழியம் எனப் பெயர் சுரிதகமாகும்.”[25] என்று காக்கைப்பாடினியம் கூறுகின்றது. பிற வகைப் பாக்கள் ஒரே உறுப்பாக அமைவதைப் போல் இல்லாமல், கலிப்பா 1.தரவு 2.தாழிசை 3.அராகம் 4.அம்போதரங்கம் 5.தனிச்சொல் 6.சுரிதகம் என்னும் ஆறு உறுப்புகளைப் பெற்று வரும். இவற்றுள் சுரிதகம், பாடலில் சொல்லப்பட்ட கருத்துகளுக்கு முடிவுரை போல் அமையும்.

‘என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து’ எனும் நூலில்,

**கொலுசுச் சத்தத்தில்**
**முதுகுப் பக்கத்தில்**
**உள்ளங்கை ஈரத்தில்**
**உதடுகளின் ஓரத்தில்**
**கன்னத்து மச்சத்தில்**
**கருவிழியின் ஆழத்தில்**
**எங்கேனும்**
**கிடைத்தேனா**
**நான். (எ.ப.நா.ப.55)**

எனும் கவிதையில் இறுதியில் வரும் மூன்று அடிகள் சுரிதகம் ஆகும். முதலில் ஒரே விதமான ஆறு கருத்துகளை அடக்கி அக்கருத்துகள் எதற்காகக் கூறப்பட்டன என்ற காரணத்தை இறுதி அடிகளில் முற்றுப்பெற வைத்துக் காட்டப்பட்டுள்ளது.

**தொடர்நிலைப்பா**

பல அடித் தொடரில் ஒரு கருத்தைச் சொல்லும் பா, தொடர்நிலைப் பா ஆகும். இதனை,

**அடித் தொடர் பலநின்று ஓர்கருத்து இயம்பின்**
**தொடர்நிலைப் பாவெனத் தெளியப் பெறுமே.**[26]

என்னும் இலக்கணம் விளக்கும். மேலும் அடித்தொடர்ப்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா இவற்றிற்கிடையே ஒற்றுமை, வேற்றுமைகள் உண்டு.

அடித்தொடர் பாவிற்கும் தொடர்நிலைப்பாவிற்கும் வேறுபாடு என்னை எனின், அடித்தொடர்ப்பாவில் ஓர் அடித்தொடர் மட்டுமே இருக்கும். தொடர்நிலைப்பாவில் ஒன்றுக்கு மேற்பட்ட பல அடித் தொடர்கள் இருக்கும். கருத்துக் கோவைப்பாவிற்கும் தொடர்நிலைப் பாவிற்கும் வேறுபாடு என்னவெனில், கருத்துக் கோவைப் பாவில் பல கருத்துகள் இருக்கும். எனவே கவிதை இடையறவுபடும். தொடர்நிலைப் பாவில் ஒரு கருத்து மட்டுமே இருக்கும். எனவே இது இடையறாது செல்லும். தொடர்நிலைப் பாவும் இருசீர்அடித் தொடர், முச்சீர் அடித்தொடர், நாற்சீர் அடித்தொடர் என மூவகைப்படும்.

**பகை கொள்வதில்லை**
**பழக்கடை ஈக்களும்**
**சாக்கடை ஈக்களும் (பொ.பெ.ம.ப.31)**

என்னும் கவிதை முச்சீரடிப்பாவிற்குச் சான்றாகும்.

சீர்கள் அமைவு தம்முள் விரவி அமைந்த,

**நிலங்களில்**
**ஐவகை உண்டு.**
**குறிஞ்சி,முல்லை, மருதம், நெய்தல்,**
**பாலை என**
**நிலங்களில் ஐவகை உண்டு.**
**ஆறாவது வகை நிலம்**
**இந்தக் காணி நிலம்.**
**மலையும் மலை சார்ந்த இடமும்**
**மகாகவியும் மகாகவி சார்ந்த இடமும்**
**காணிநிலம் (அ.வா.வி.எ.நி.ப.38)**

என்ற இக்கவிதை ‘காணி நிலம்’ எனும் தலைப்பில் அமைந்துள்ளது. ஒரு சீரடி, இரு சீரடி, முச்சீரடி, நாற்சீரடி என அனைத்தும் விரவி வந்து பாடலை அழகுறச் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

மேலும் முழுமையாக முச்சீரடியில் அமைந்த பாடலாக கருவறை-கல்லறை இவற்றின் ஒற்றுமை- வேற்றுமை புனையும் கவிதை அமைந்துள்ளது.

**ஒன்று மொட்டுகளின் கூடு**
**ஒன்று சருகுகளின் வீடு**
**ஒன்று விடியலுக்கான இருட்டு**

**ஒன்று அஸ்தமன இருட்டு**

**ஒன்று வருக வணக்கம்**

**ஒன்று நன்றி வணக்கம். (அ.வா.வி.எ.நி.ப.81)**

எனப் பாடல் முழுமையும் முச்சீரடியால் வந்துள்ளது.

தொட்டில்-கட்டில் இவற்றை ஒப்புமைப்படுத்தி,

**இது ஒருவர் வாழும் ஆலயம்.**

**இது இருவரும் வீழும் போர்க்களம்.**

**இது தாய் செய்த ஏற்பாடு**

**அது தாயாகும் ஏற்பாடு.**

**இது அன்பில் குழைந்த சந்தனம்**

**அது ஆசை நதிகளின் சங்கமம்.**

**இது இரண்டு முறை ஆடலாம்**

**அங்கு இறுதி வரை கூடலாம் (அ.வா.வி.எ.நி.ப.82)**

என்பதில் முதலடி முதல் ஈற்றடி வரை அனைத்தையுமே நாற்சீரடிகளாக அமைத்துப் பாடியுள்ளார்.

**குறும்பா**

குறும்பா எனப்படும் ஹைக்கூ கவிதையின் இலக்கணத்தை, இரா.இராசேந்திரன் தமது புதுக்கவிதை இலக்கணம் என்னும் நூலில்,

**ஜப்பான் நாட்டு மரபு வழிப்பட்ட**

**இலக்கணம் கொண்டு வருவது குறும்பா**

**அஃதிவண் நுவலாது தமிழில் காணும்**

**அமைப்புக் கொண்டே நுவல் கின் றேனே.**[27]

என உரைத்து. குறும்பாவின் இலக்கணத்தை,

**ஒருசீர் இருசீர் முச்சீர் அடியாய்**

**மூன்றடி தன்னை அளவாக் கொண்டு**

**வருவது தானே அப்பா ஆகும்.**[28]

எனக் குறிப்பிடுவர். குறும்பாவினுள் ஒரு சீர், இரு சீர், முச்சீர் அடிகளாக வரும் என அதன் ஈரடி முதலில் ஓர்கருத் தமையும்.[29] எனவும்

**இறுதி அடியே**

**அதிர்வைத் தந்து கருதியது முடிக்கும்.**[30]

எனவும் உரைப்பர்.

குறும்பாவின் பொருண்மை வகைகளாக,

**இயல்பே கற்பனை உண்மை முரணே**

**நகையே திருப்பம் அங்கதம் ஆய்வே**

**விடுகதை அமைப்பொடு கூறிய பிறவும்**

**கருதியது முடிக்கும் பான்மைத்தென்றே**

**ஆய்ந்தோர் தாமே ஆய்ந்துரைத் தனரே.**[31]

என்று உரைப்பர். இதன்வழி குறும்பா கற்பனை, உண்மை, முரண், நகைச்சுவை, திருப்பம், அங்கதம், ஆய்வு, விடுகதை போன்ற கருத்துகளை வெளிப்படுத்துவனவாகவும், கூறப்படாத வேறு பொருண்மைகளிலும் அமையும் என்பதும் புலனாகும். குறும்பாவின் இலக்கணப்படி அசை ஒழுங்கு பெற்று வருதல் அப் பாக்களின் இயல்பு எனவும், அவை முறையே 5-7-5 என அசைகளைக் கொண்டு அமையும்; மூன்று அடி வரையறையின் விலக்காக சில பாக்கள் நான்கடி பெற்று வரினும் அவற்றையும் கொள்க என்பர்.

இவ்விலக்கணங்கள் கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பில் அமைந்து வந்துள்ளமையைப் பின்வரும் பகுதி விளக்கும்.

**குழந்தைகளும்**

**கும்பிடுகிறார்கள்**

**பலூன்களுக்காக. (பொ.பெ.ம. ப.43)**

**உப்பு வயல்களில்**

**அலைகள் உழுதன**

**மனிதர்களைப் புதைத்தோம் (பொ.பெ.ம. ப.42)**

என்பன ஒரு சீர் அடியால் வந்த குறும்பாக்கள்.

இவற்றில் முதல் இரண்டு அடிகள் ஒரு கருத்தைச் சொல்ல இறுதி அடி படிப்பவர்களின் மனதில் ஒரு அதிர்வை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளமை குறிக்கத்தக்கது. இனி குறும்பாவின் கருத்து வெளிப்படும் வகைமைகளுக்குச் சான்றாக,

**செடிகளுக்கு**

**நீர் ஊற்றினேன்**

**பூக்களாய்ச் சிரித்தன. (பொ.பெ.ம.ப.47)**

என இறுதி அடி இயல்பாய் அமைந்துள்ளமையும்,

**தலைசாய்த்து**

**நதிக்கு நன்றி கூறின**

**கரையோர மரங்கள் (த.மூ.க. ப.33)**

என இறுதி அடி கற்பனையாய் அமைந்து கருத்தை முடித்துள்ளமையும்,

**வாசலில் நாய்கள்**

**வாலாட்டின**

**உள்ளே -**

**குரைக்கும் சத்தம் (த.மூ.க.ப.82)**

என்பது குறியீடாக அமைந்து கருத்தை முடித்துள்ளமையும்,

**அழகாய்ப் பேசுகின்றன**

**பறவைகள் -**

**உளரும் மனிதர்கள். (ம.கை.ப.25)**

என இறுதி அடி முரணாயும்

**விமானப் பணிப்பெண்**

**இறங்கி நடந்தாள்**

**பறந்தனர் பலர். (ம.கை.57)**

என நகைச்சுவையாகவும்

**வேலைவாய்ப்பகங்களில்**

**வாய்ப்பளிக்கிறார்கள்**

**புதுப்பிக்க (ம.கை.ப.41)**

என இறுதி அடி திடீர் திருப்பமாகவும்

**மருத்துவமனையில்**

**ஆரோக்கியமாய்**

**கொசுக்கள் (த.மூ.க.ப.90)**

என்பதில் இறுதி அடி அங்கதச்சுவையிலும்

**இரை தின்னப்**
**பயந்தன எறும்புகள் -**
**யானைக் கோலம் (மு.பூ.ரோ.ப.36)**

என இறுதி அடி விடுகதையாகவும்

**பிரச்சார இரைச்சலில்**
**கேட்பதே இல்லை**
**வயிறுகளில் அழுகை (பொ.பெ.ம.ப.50)**
**ஆசை வார்த்தை கேட்டு**
**அதிர்ச்சியில் இறந்தான்**
**கோவண வாக்காளன் (பொ.பெ.ம.ப.53)**

என்பதில் சமூக அவலமும் அமைந்து கருத்தை முடித்துள்ளமை குறும்பா கருத்தமைவிற்குச் சிறந்த சான்றுகளாகும்.

**பொதுப்பா**

இது இந்த வகைப் பா என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப் பாவிற்கும் பொதுவாய் நிற்பது பொதுப்பா ஆகும். இதற்குச் சான்றாகக் 'கவிதையில் நனைந்த காற்று' என்னும் நூலில் 'காற்று' என்ற தலைப்பில் அமைந்த கவிதையில்,

**சாந்தோம்**
**கடற்கரைக்கு அருகில்**
**இரண்டு**
**கலங்கரை விளக்கங்கள் (க.ந.கா.ப.20)**

எனத் தொடர்நிலைப் பாவாகத் தொடங்கி,

**வகுப்பறைக்குள் கடந்தால்**
**வாடைக்காற்று**
**தெருக்களில் நடந்தால்**
**தென்றல் காற்று**

**வீட்டுப்பாடம் கொடுத்தால்**
**வெப்பக் காற்று (க.ந.கா.ப.25)**

என இடையில் ஒரு பொருள்மேல் அடுக்கிய கருத்துக் கோவைப் பாவாக வந்து,

**உலவும் காற்றை**
**விலை கொடுத்து**
**வாங்கும் நாள்**
**விரைவில் வரும்.**
**காசேதான் கடவுளடா**
**என்னும் நிலைமாறும்**
**காற்றே தான் கடவுளடா**
**எனும் நிலை வரும் (க.ந.கா.ப.27)**

என இறுதியில் தொடர்நிலைப் பாவாக முடிந்துள்ளது. இவ்வாறு பல பாக்கள் விரவி வரும் பொதுப்பா வடிவில் பல கவிதைகள் கவிஞரால் பாடப்பெற்றுள.

**அளவியற்பா**

அளவியற்பா லிமரிக் எனக் கருதப் பெறுகிறது. 'ஐந்தடியைத் தனக்குரிய அளவாகப் பெற்று, மூன்றாவது நான்காவதாக வரும் இரு அடிகளும் இருசீர் அடியாகவும் மற்ற மூன்று அடிகளும் (1,2,5 அடிகள்) முச்சீர் அடியாகவும் வந்து இவ்விரு சீர் அடிகளும் முச்சீரடிகளும் இயைபுத் தொடையினைப் பெற்று வருவது அளவியற்பா ஆகும்[32]

மேலும் அளவியற் பாவில் வரும் மூன்றாவது நான்காவது அடிகள் இரண்டும் வேறு இயைபினைப் பெற்று வந்தாலும் அது ஏற்றுக் கொள்ளப்பெறும் என்பதை,

**இடையடி இரண்டும்**
**இபையு வேறு பெறினும் வரையார்[33]**

என்பர் இரா.இராஜேந்திரன். அவ்வாறே

**அளவியற் பாவே தம்மியைபு பெற்றே**
**அடியிகந்து வரினும் கடிவரை யின்றே.[34]**

என அடியிகந்து வருவதாகக் கூறுவது, அடியின் சீர் மிகுதலும், அடியின் எண்ணிக்கை மிகுதலும் ஆகும். அளவியற் பாவிற்குக் கவிஞரின்,

**நூலகம் போயிருந்தேன்**
**அங்கிருந்த அனைவரும்**
**படித்துக் கொண்டிருந்தார்கள்.**
**அவள் மட்டும் தான்**
**புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள் (த.மூ.க.ப.105)**

என்ற கவிதை சான்றாகும்.

இதுகாறும் கவிஞரின் அடிவரையரை அமைப்பிலான கவிதைகள் ஆராயப் பெற்றன. இனி அடி வரையறையின்றி அமைந்த கவிதைகள் விளக்கப் பெறும்.

கவிஞரின் படைப்புகள் சிற்றெல்லையாக இரண்டு அடியில் தொடங்கி 259 அடிகள் வரை அமைந்துள்ளன. மகாத்மா காந்தி குறித்து இரண்டு அடிகளில்,

**எளிமையும் வலிமையும் நிறைந்த ஒரு குரல்**
**எல்லோருக்கும் எளிதில் புரியும் திருக்குறள் (அ.வா.வி.எ.நி.ப.69)**

எனவுரைப்பது இதற்குச் சான்றாகும்.

இயற்கை வருணனை, சமூகப்பார்வை, சுற்றுப்புற சுகாதாரம், அரசியல் சூழல், மனித வாழ்வியல் போக்கு, காதல் போன்ற கருத்துகளை மூன்று அடிகளில் அமைத்துள்ளார். அரசு அலுவலகங்கள் இயங்கும் முறையை

**நான்கு கால்களும்**
**பல கைகளுமாக**
**அரசாங்க மேசைகள் (ம.கை.ப.51)**

என்று மூன்று அடிகளில் உரைப்பர். அரசியல்வாதிகளின் பச்சோந்தி நிலையை,

**தேர்தல் வாழ்க!**
**குனிந்து கும்பிடுகிறார்கள்**
**குடிசைகளையும் (பொ.பெ.ம.ப.50)**

என்றும் வாழ்வியல் அவலத்தை,

**படுக்கையில் விழுந்தவுடன்**
**பதறியபடி பார்க்க வந்தார்கள்**
**கடன் தந்தவர்கள் (பொ.பெ.ம.ப.48)**

என்றும் ஹைக்கூ வடிவிலும் படைத்துள்ளார்.

நான்கு அடிகளில் வாழ்க்கை குறித்தும் காதல், தனிமை, மரணம் போன்ற பொருண்மைகளிலும், சிங்கப்பூரை நிர்மாணித்த லீ குவான் யூ பற்றியும் கவிதை படைத்து உள்ளார்.

சான்று

**நல்லவன் என்று**
**நாலு பேர் சொல்ல**
**படாத பாடு**
**பட வேண்டியிருக்கிறது (எ.ப.நா.ப.86)**

5 அடிகளில் இளங்கோவடிகள் குறித்தும், சமூக அவலம், வாழ்வியல் போன்ற நோக்குகளில் கவிதை படைத்துள்ளார். 'அந்த வானவில்லுக்கு 8 நிறங்கள்' என்னும் நூலில்,

**கோவலனின் கன்னத்தில்**
**காலம் அடித்த அடிகள்**
**நெடுஞ்செழியன் ஆட்சியில்**
**நீதிதேவதை அடித்த அடிகள்**
**இதுதான் இளங்கோவடிகள் (அ.வா.வி.எ.நி.ப.55)**

என்றுள்ள, சிலப்பதிகாரம் படைத்த இளங்கோவடிகள் குறித்த இக்கவிதை சிறந்த சான்றாகும். அரசு அலுவலகங்களில் இலஞ்சம் நீக்கமற நிறைந்திருப்பதை, வாழ்வியல் உண்மையை,

**"கைகளை**
**வெளியே நீட்டாதீர்கள்"**
**அறிவிப்புப் பலகை**
**அவசியம் -**
**பேருந்துகளில் மட்டுமல்ல**
**அரசாங்க அலுவலகங்களிலும். (த.மூ.க.ப.103)**

**அதிரும் பறை ஒலியும்**
**அதிர்வேட்டுச் சத்தங்களும்**

**அருகிருப்போர் புகழுரையும் கேட்டு**
**சிரித்துக்கொண்டார்-**
**செத்துக் கிடந்த**
**தாத்தா (எ.ப.நா.ப.31)**

என்னும் 6 அடிக் கவிதைகள் விளக்கி நிற்கின்றன.

8 அடிகளில் நவயுகப் பெண்கள், சமூக நிலை, வாழ்க்கை நெறிகள், இயற்கை வருணனை, காதல் என்ற பொருண்மையில் கவிதைகள் எழுதியுள்ளார். சான்றாக

**காரில்**
**ஸ்கூட்டரில்**
**லூனாவில்**
**சைக்கிளில்.....**
**நடப்பதே இல்லை நம் பெண்கள்**
**உண்மைதான்**
**"வண்ணச் சீறடி**
**மண்மகள் அறிந்திலள்" (த.மூ.க.ப.106)**

**ஆலய வாசலில்**
**இருமருங்கிலும்**
**வரிசையில்**
**அமர்ந்திருந்த**
**யார் ஒருவரும்**
**சாமி என்று**
**அழைக்கவே இல்லை.....**
**சாமியைப் பார்த்து. (எ.ப.நா.ப.50)**

என்னும் கவிதைகள் இன்றைய பெண்களின் வாழ்வியல் நிலையையும் போலி பக்தி நிலையையும் பதிவு செய்துள்ளன.

**போராடாமல்**
**கொடி பிடிக்காமல்**
**பஸ்ஸை மறிக்காமல்**
**பட்டினி கிடக்காமல்**
**சம்பள உயர்வைச்**

**சரியாய்ப் பெறுவது**
**மந்திரிகளும்**
**எம்.பிக்களும்**
**எம்.எல்.ஏக்களும் தான் (தமூக. ப.103)**

என்னும் 9 அடிக்கவிதை மக்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டை எள்ளல் சுவையில் விளக்குகிறது.

பாரதி படைத்துக் காட்டிய புதுமைப்பெண்ணை நினைவுறுத்துவதோடு, பெண்கள் தங்களைக் காத்துக்கொள்ள வேண்டிய நெருக்கடி நேரங்களில் தங்களின் பற்களையும், கூரிய நகங்களையும் ஆயுதமாகக் கொண்டு போராட வேண்டியது அவசியம் என்ற அண்ணல் காந்தியடிகளின் கருத்தை (பொ.பெ.ம.ப.39) 9 அடிப்பாவால் விளக்குகின்றார்.

பெண்கல்வி இன்றியமையாதது என்று அனைவரும் கருதுகையில் சில இடங்களில் பெண்களுக்குத் திருமணம் நிகழ்ந்தபின் அவர்கள் கற்ற கல்வி பொருளற்றுப் போவதாய், வீண் பொழுது போக்குப் பெருமைக்கும் மளிகை, பால் கணக்கு எழுதவும், ராசி பலன் அறியவும் எனப் பயனற்றுப் போவதை (தமூகப.108) 10 அடிப்பாவில் பாடுகின்றார்.

கடலின் இயல்பினை மனிதர்களுடன் ஒப்பிடும் நிலையில்,

**சேறும் சகதியும்**
**அலையும் நுரையும்**
**சுழலும் சத்தமுமாக**
**நெருங்க நெருங்க**

**அசிங்கமும்**
**அபாயமுமாய் இருக்கிறது**
**கடல்.**

**அழகாய் இருப்பதெல்லாம்**
**தூரத்துப் பார்வைக்குத்தான்**
**……………………………….**
**மனிதர்களும் கூட (பொ.பெ.ம.ப.58)**

என மனிதர்களின் அகமுகத்தினை 11 அடிகளில் சித்திரித்துள்ளார்.

**போதி மரங்களை**
**வெட்டிக் கொண்டிருந்தார்**
**கௌதம புத்தர்.**
**பதறிப்போய்**
**கரம்பற்றிக் காரணம் கேட்டேன்.**
**மரங்களுக்குக் கீழே**
**வேர்கள் இருக்கலாம்**
**பார்கள் இருக்கலாமா…..**
**போதி மரங்கள்**
**போதைப் பூக்களைக்**
**கொட்டுவதை விட**
**அதை வெட்டுவதே நல்லது (த.சி.த.த.ப.33)**

என அரசாங்கமே குடிப் பழக்கத்தை ஊக்குவிக்கும் செயலைப் புத்தரின் வாயிலாகக் (12 அடி) கண்டிக்கிறார்.

அரசாங்க அதிகாரிகளின் மெத்தனப் போக்கை (பொ.பெ.ம. ப.40) சமய, மத ஒற்றுமையின் அவசியத்தை 13 அடிக் கவிதைகளின் வழி விளக்குகிறார்.

**தேவாலயத்துக்**
**கற்கண்டோ**

**பள்ளிவாசல்**
**சர்க்கரையோ**

**பெருமாள் கோவில்**
**பொங்கலோ**

**எதுவென்றாலும்**
**இனிப்பாய் இருக்கிறது.**

**அதில்**
**அன்பைக் கலந்தால்**
**அமுதமாகிறது.**

**மதத்தைக் கலந்தால்**
**விஷமாகிறது (எ.ப.நா.ப.88)**

இயற்கையை வருணிக்க, பணியின் முக்கியத்துவத்தை விளக்க, காதலியைப் பிரிந்த துயர்நிலையைக் கூறிட 14 அடிகளில் பாடல் புனைந்துள்ளமை ‘என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து’ என்னும் நூலில் அமைந்துள்ளது. சான்று பின்வருமாறு:

**வெப்பம் தணிக்கும்**
**உன்**
**நிழல் இல்லை.**
**விழிகளை வருடும்**
**உன்**
**விரல் இல்லை**
**தெப்பம் கிடக்குது**
**மனதினிலே**
**என் தெய்வமில்லாமல்**
**அது மிதக்கவில்லை**
**துக்கம் வழியுது**
**கண்களிலே**
**தூக்கமில்லாமல்**
**உன் கனவுமில்லை. (எ.ப.நா.ப.56)**

காதலியின் நினைவுகள், கண்ணாடித் தொட்டியில் வாழும் மீன்கள், மகாகவி பாரதி பற்றிய பொருண்மைகளைப் பதினைந்து வரிகளில் கவிதையாக்கியுள்ளார்.

**உனக்கான கவிதையை**
**இன்னமும் நான் எழுதவில்லை**
**…………**
**……….**
**எங்களின் வாழ்க்கையிலும்**
**எப்போதும் வரலாற்றிலும்**
**வாழ்ந்து கொண்டிருக்கிறாய் நீ**
**அதற்கு மேலென்ன (தமூக. ப.44)**

என்பது பாரதி குறித்த 15 வரிக் கவிதையாகும்.

16 அடிகளில் அழகு-1 (த.மூ.க.ப.29) கடல் மீன்கள் (அவாவி.ப.113) எனும் தலைப்புகளில் கவிதை புனைந்துள்ளார்.

17 அடிகளில் அழகு-2 (தமூக. ப.32) காதலியின் நினைவு (எ.ப.நா.39) ஆகியவற்றைக் கவிதையாக்கியுள்ளார்.

19 அடிகளுக்கு 'என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து' என்ற நூலில் 'துன்பம் நேர்கையில்' என்ற தலைப்பில் உள்ள கவிதை சான்றாகும்.

இருபது அடிகளில் அரசியல், மரங்களின் பயன்கள், விண்மீன்கள், விவசாயம், வாழ்க்கையின் பயங்கள் என்பன போன்ற பொருண்மையில் கவிதைகள் எழுதியுள்ளார். சான்றாக,

**பன்னீர் மரங்களுடன்**
**கவிஞர்கள் சிலர்**
**கைகுலுக்கிக் கொண்டிருந்தார்கள்.**
**பக்தர்களும் நோயாளிகளும்**
**வேப்ப மரங்களை**
**வழிபட்டுக் கொண்டிருந்தார்கள்.**
**சந்தன மரங்களை**
**வீரப்பனின் உறவினர்கள்**
**விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.**
**அறிஞர்கள் சிலர்**
**போன்சாய் மரங்களைப்**
**புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.**
**வந்தவர் அனைவரையும்**
**வரவேற்ற நம்மை**
**யாரும் கண்டுகொள்ளவில்லை என்று**
**வருத்தப்பட்டு நின்றன**
**வாழை மரங்கள். (எ.ப.நா.ப.78)**

என மரங்களின் பெருமையைப் பாடியுள்ளார்.

21 அடிகளில் அரசியல், கல்வியின் பெருமை, நிகழ்காலம், உற்சாகத்தின் அவசியம் என்பன போன்ற பொருண்மைகளில் பாடியுள்ளார். 'தங்கம் மூர்த்தி கவிதைகள்' நூலில் கண்ணுடையர் என்போர் எனும் தலைப்பில்,

**நிலா ஆசிரியை**
**இல்லாத வானத்தில்**
**இருளே நிறைந்துள்ளது.**
**………….**
**……………**
**கல்வி தீண்டாத**
**மனிதர்களைக்**
**காலம் மன்னிப்பதில்லை. (த.மூ.க.ப.70)**

எனக் கல்வியின் இன்றியமையாமையைப் பாடியுள்ளார்.

23 அடிகளில் கோடையின் கொடூரம் (த.மூ.க.ப.60) இயல்பான காதல் என்பதன் அர்த்தம் (த.மூ.க.ப.62) படிதாண்டா கனவுகள் (த.மூ.க.ப.73) கணவன் மனைவி மன வேறுபாடு(பொ.பெ.ம.ப.30) பிறரைப் பள்ளத்தில் தள்ளத் துடிக்கும் வீணர்களின் நிறைவேறாத எண்ணம் (எ.ப.நா.ப.34) எலும்புக்கு வாலாட்டும் நாயின் குணத்தோடு திரியும் அற்ப மனம் கொண்ட வீணர்களின் இயல்பு (எ.ப.நா.ப.35) ஆகியன பற்றிக் கவிதை எழுதியுள்ளார்.

அன்பிற்காக வாழ்வில் தோற்றுப் போவதில் கிடைக்கும் இன்பத்தை 'ஆனந்தம் ஆனந்தமே' (த.மூ.க.ப.53) எனும் தலைப்பில் 24 அடிப் பாவால் விளக்குகிறார்.

'நதிகளின் மாநாடு' எனும் தலைப்பிலான கவிதை 25 அடிகளில் அமைந்துள்ளது. இதில் யமுனை, வைகை, காவிரி, கங்கை, தாமிரபரணி போன்ற நதிகள் தம்மைப் பற்றியுரைப்பதாகக் கவிதை புனைந்துள்ளார்.

26 அடிகளில் 'ஆயுதங்களின் மாநாடு' எனும் தலைப்பிலும் (க.ந.கா.ப.128) காலத்தின் நித்தியத் தன்மை பற்றி 'காலம்' எனும் தலைப்பிலும் (எ.ப.நா.ப.75) கவிதைகள் அமைந்துள்ளன.

**சான்று:**

**கந்தலானாலும்**
**கசக்கிக் கட்டுவதில்லை**
**……………**
**…………….**
**காலந்தோறும்**

**இளமையாய்**

**காலம் மட்டுமே**

**இருக்கிறது (எ.ப.நா.ப.75-76)**

27 அடிகளில் காதல், அரசியல், சமூகம், சுய அலசலின் அவசியம் போன்ற பொருண்மைகளில் கவிதை புனைந்துள்ளார்.

**சான்று:**

**நண்பனே!**

**போதும்**

**……**

**……**

**போலி கௌரவம்**

**பேணி வளர்த்தது போதும்.**

**…………..**

**போதும் நண்பனே போதும்**

**என்ன அலசி என்ன கிடைத்தது**

**உன்னை அலசு. (த.மூ.க.பக்.92-93)**

வறுமையில் வாடும் நடைபாதைவாசிகள் (த.மூ.க.ப.84) சுகாதாரக்கேடு (த.மூ.க.ப.87) அசல் நகல் இவற்றுக்கு இடையேயான யுத்தம் (த.மூ.க.ப.97) குடும்பத் தலைவனின் சுமையும் வலியும் (த.மூ.க.ப.46) குருவியின் வருகை (த.மூ.க.ப.61) போன்ற பல்வகைப் பொருண்மைகளில் 28 அடிகளில் கவிதைகள் புனைந்துள்ளார். சான்றாக 'தேசத்தின் சோக நிழல்கள்' எனும் தலைப்பில்,

**விலாசமுள்ள**

**வீடுகளில் வாழவில்லை**

**அவர்கள்**

**விசாலமான வீதிகளின்**

**முகவரிகள்**

**…………..**

**………….**

**அவர்கள்**

**நம் சுதந்திர தேசத்தின்**
**சோக நிழல்கள் (த.மூ.க.ப.84-85)**

என்பதில் நடைபாதையையே தம் வசிப்பிடமாகக் கொண்ட வறியவரின் நிலை கூறப்பட்டுள்ளது.

29 அடிகளில் 'என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து' நூலில் கவிஞரின் பன்முகத்தன்மையை (எ.ப.நா.ப.82-83) ஆசிரியர், முதல்வர், தாளாளர், கவிஞர், பேச்சாளர் எனப் பட்டியலிட்டுள்ளார்.

முப்பது அடிகளில் 'மிகை' (த.மூ.க.ப.95) பற்றியும், மனித இயல்பில் நிகழ்ந்த மாற்றம் (பொ.பெ.ம.பக்.32-33) பற்றியும் கவிதை இயற்றியுள்ளார்.

**மிருகங்களோடு**
**பழகினான்**
**மனிதன்**
**…………..**
**………….**
**மிருகத்தனங்களும்**
**வந்துவிட்டன.**
**இயந்திரங்களோடு**
**பழகினான்**
**மனிதன்.**
**……………..**
**……………..**
**இயந்திரத்தனங்களும்**
**வந்துவிட்டன.**
**இயற்கையோடு**
**பழகினான்**
**……………….**
**……………….**
**செயற்கைத்தனங்களும்**
**வந்துவிட்டன.**
**மனிதன்**
**பழகவேயில்லை**

**இன்னொரு**

**மனிதனிடம் (பொ.பெ.ம.பக்32-33)**

'இளைப்பாற்றி' என்னும் தலைப்பிலுள்ள கவிதை 32 அடிகளில் அமைந்துள்ளது.

**அம்மா இருக்கிறாள்**
**ஆயினும்**
**வழியும் கண்ணீரை நானே**
**துடைத்துக் கொள்கிறேன்.**
**மனைவி இருக்கிறாள்**
**……………………**
**பிள்ளைகள் இருக்கிறார்கள்**
**…………………**
**உறவினர்கள் இருக்கிறார்கள்**
**………………….**
**நண்பர்கள் இருக்கிறார்கள்**
**என் பணிகளின் பாரத்தைப்**
**பூக்கள் சுமக்கும்**
**………………..**
**இயற்கையின்**
**வளர்ப்பாய்**
**வாழ்கிறேன் நானும் (த.மூ.க.பக்.48-49)**

33 அடிகளில் 'நானும் நண்பர்களும்' (த.மூ.க.பக்.27-28) குப்பையை அகற்றுபவள் (எ.ப.நா.பக்.84-85) என்னும் தலைப்புகளில் கவிதை யாத்துள்ளார்.

'பொய்யெனப் பெய்யும் மழை' நூலில் குழந்தையும் தெய்வமும் (பொ.பெ.ம.பக்.37-38) என்னும் கவிதையை 34 அடிகளில் பாடியுள்ளார்.

35 அடிகளில் 'பொய்யெனப் பெய்யும் மழை' நூலில் சாதி வேற்றுமையைக் கண்டித்துப் (பொ.பெ.ம.பக்.22-23) பாடியுள்ளார்.

36 அடிகளில் பூக்கள் மற்றும் (எ.ப.நா.பக்.19-20) வாழ்வியல் முரண்களைப் பற்றியும் (எ.ப.நா.பக்.21-22) 37 அடிகளில் காதலியின் கனிவான அன்பினால் தன் காயங்கள் தீர்வதையும் (எ.ப.நா.பக்.46-47) பாடியுள்ளார்.

கடிதம் எழுதும் முறை அருகிவிட்டமை (த.மூ.க.பக்.64-65) தொலைக்காட்சிப் பெட்டியின் ஆதிக்கம் குடும்பத்தாரிடம் பிரதிபலித்தல் (த.மூ.க.பக்.80-81) நாய்களின் நயமான செயல் மற்றும் மனிதனின் கீழான குணங்கள் (த.மூ.க.பக்.113-114) போன்றவற்றை 38 அடிகளில் பாடியுள்ளார்.

முப்பத்தொன்பது அடிகளில் தமிழ்மொழியின் தன்னிகரில்லாப் பெருமைகளை அடுக்கி (பொ.பெ.ம.பக்.69-70) மாலையெனக் கோர்த்துள்ளார்.

'மலர்களின் மாநாடு' எனும் தலைப்பில் மலர்கள் இயற்றும் தீர்மானங்களை நாற்பது அடிகளில் வரிசைப்படுத்திப் (க.ந.கா.பக்.126-127) பாடியுள்ளார்.

'என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து' நூலில் ஒரு தந்தையின் பாசப் பிணைப்பைப் பற்றி நாற்பத்திரண்டு அடிகளில் (எ.ப.நா.பக்.15-16) காட்சிப்படுத்தியுள்ளார்.

மழையினால் மறந்து போன மரணம் பற்றி 44 அடிகளில் (எ.ப.நா.பக்.53-54) விவரித்துள்ளார்.

46 அடிகளில் நடிகர் திலகம் சிவாஜி கணேசனுக்கு மரியாதை செலுத்திப் (எ.ப.நா.பக்.59-61) பாமாலை சூட்டியுள்ளார்.

காதலியின் மன வேறுபாட்டையும் (எ.ப.நா.பக்.17-18) பெட்ரோல் நிரப்பும் பணியில் உள்ள பெண்ணின் வாழ்க்கையையும் (எ.ப.நா.பக்.42-43) 47 அடிகளில் சித்திரித்துள்ளார்.

காதலின் பல பக்கங்களையும், காதலைத் தண்டிக்கும் சூழல்களையும் (த.மூ.க.பக்.53-58) 50 அடிகளில் கண்டித்துப் பாடியுள்ளார்.

தற்காலக் கல்வி முறையின் அவலத்தைச் சாடி (பொ.பெ.ம.பக்.55-57) 51 அடிகளில் கவிதை எழுதியுள்ளார்.

54 அடிகளில் காகங்களையும் கிளிகளையும் அவற்றின் இயல்பால் ஒப்பிட்டும் (பொ.பெ.ம.பக்.34-36) தலைமுறை காக்கத் தவறிய, வாழ்வின் தவறான போக்கைக் கண்டித்தும் (தமூக..பக்.66-68) எழுதியுள்ளார்.

கல்வித்துறையின் நெறியற்ற கொள்கைகளை 'மூச்சுத் திணறும் சரஸ்வதி தேவி' என்னும் தலைப்பில் 56 அடிகளில் (க.ந.கா.பக்.118-120) பாடியுள்ளார்.

பா ரதத்தின் சாரதியாம் பாரதியின் பெருமைகளைப் பட்டியலிட்டு 'பாட்டுத் தலைவனுக்கு……' என்னும் தலைப்பில் (த.மூ.க.பக்.77-79) 57 அடிகளில் கவிமாலை சார்த்தியுள்ளார்.

61 அடிகளில் 'அறிவொளி'த் திட்டத்தின் சிறப்புகள் (த.மூ.க.பக்.41-43) பற்றிப் பாடியுள்ளார்.

64 அடிகளில் மழலைச் செல்வத்தின் மாண்புகளை வரிசைப்படுத்திப் (அ.வா.வி.எ.நி.பக்.187-190) பாடியுள்ளார்.

66 அடிகளில், தானியில் (ஆட்டோ) சென்று செய்தி அறிவிப்பவனின் வாழ்வியலைக் (எ.ப.நா.பக்.36-38) காட்சிப்படுத்தியுள்ளார்.

69 அடிகளில் தேதிகள் ஒவ்வொன்றின் சிறப்பினையும் போற்றிப் (த.மூ.க.பக்.34-37) பாடியுள்ளார்.

83 அடிகளில் ஒரு மாறுபட்ட கற்பனைக் காட்சியாகச் சூர்ப்பனகை தன்னுடன் ஒரு சுற்றுப்பயணம் வந்ததாகக் (க.ந.கா.பக்.140-143) கவிதை யாத்துள்ளார்.

85 அடிகளில் சிவகாசி ஜெயலட்சுமியின் செயல்களைச் (பொ.பெ.ம.பக்.63-67) சித்திரித்துள்ளார்.

133 அடிகளில் 'தமிழ் நம் வேர்' எனும் தலைப்பில் (க.ந.கா.பக்.104-110) நம் தாய்மொழியின் பெருமைகளைப் போற்றியுள்ளார்.

தான் பெரிதும் வணங்கும் பாட்டுத்தலைவன் பாரதி பற்றி (க.ந.கா.பக்.32-38) 135 அடிகளில் புகழஞ்சலி செலுத்தியுள்ளார்.

138 அடிகளில் தமிழர் தம் பண்பாட்டைச் சிறப்பிக்கும் பொங்கல் திருநாள் குறித்துப் (க.ந.கா.பக்.111-117) பாடியுள்ளார்.

140 அடிகளில் பாட்டுக்குக் கோட்டை கட்டிய பட்டுக்கோட்டைக்கு ஒரு எளிய பொன்னாடை எனும் தலைப்பில் (க.ந.கா.பக்.84-89) ஒரு கவிதையும், தான் பிறந்த புதுக்கோட்டை நாகரத்தின் புகழ் பற்றி (க.ந.கா.பக்.153-159) ஒரு கவிதையும் பாடியுள்ளார்.

149 அடிகளில் 'கவிதையில் நனைந்த காற்று' எனும் நூலில் 'தாயகப்பற்று' என்னும் தலைப்பில் (க.ந.கா.பக்.133-139) பாடல் புனைந்துள்ளார்.

168 அடிகளில் மழலைப் பருவம் குறித்து ‘காலங்களில் வசந்தம்’ எனும் தலைப்பில் (க.ந.கா.பக்.73-82) பாடல் புனைந்து குழந்தை நமக்குக் கடவுள் தந்த பரிசு என மனம் குதூகலிக்கிறார்.

178 அடிகளில் ‘காகிதம் ஒரு ஆயுதம்’ எனும் தலைப்பில் (க.ந.கா.பக்.145-152) பத்திரமாகப் போற்றப்படுகின்ற பத்திரம் பற்றிப் பாடியுள்ளார்.

‘பணம்’ குறித்து 189 அடிகளில் (க.ந.கா.பக். 51-59) கவிதை புனைந்துள்ளார்.

‘வில்லில் இருந்து கணை - வெளிப்படும் வேளை’ பற்றி 206 அடிகளிலும் (க.ந.கா.பக்.95-103) ‘மலரினும் மெல்லிய காதல்’ பற்றி 213 அடிகளிலும் (க.ந.கா.பக்.10-18) கவிதை புனைந்துள்ளார்.

233 அடிகளில் ஐம்பூதங்களில் ஒன்றான காற்றின் இன்றியமையாமை பற்றிக் (க.ந.கா.பக்.20-30) கவி யாத்துள்ளார்.

மனிதனை மற்ற உயிரினங்களிடமிருந்து வேறுபடுத்தும் ஆறாம் அறிவைப் பெருக்கிக்கொள்ள உதவும், எழுத்தறிவு பெற உதவும் ‘புத்தகம்’ பற்றி மிக நீண்ட தொடர் நிலைப்பாவாக (க.ந.கா.பக்.61-72) 259 அடிகளில் படைத்துக் காட்டியுள்ளார். கவிஞரின் படைப்புகளிலேயே மிக அதிகக் கருத்துச் செறிவையும் அடி எண்ணிக்கையையும் கொண்ட பாடல் இது என்பதால் ‘புத்தகம்’ பற்றிய கவிதை தனித்துவம் பெற்றுத் திகழ்கிறது.

## தொகுப்புரை

- இருபதாம் நூற்றாண்டில் படைப்பாளர்களால் பெரிதும் கையாளப்பட்ட ஒரு புதிய இலக்கிய வடிவம் புதுக்கவிதை ஆகும். இப்புதுக்கவிதை வடிவத்திலே கவிஞர் தங்கம் மூர்த்தி தம் படைப்புகளை உருவாக்கியுள்ளார்.
- புதுக்கவிதை அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா, சித்திரப்பா, குறும்பா, பொதுப்பா என்னும் ஆறு வகைகளில் அமையும் என்பர் இலக்கணிகள்.
- கவிதையின் தொடக்கம், முடிவு ஆகிய அமைப்புகளும் உணர்வு-பொருள்போக்கைத் தடுக்காத ஒலி நயங்களும் புதுக்கவிதையின் கூறுகளாக உள்ளன.
- தங்கம் மூர்த்தியின் கவிதைகள் குறும்பா (ஹைக்கூ), தொடர்நிலைப்பா, பொதுப்பா என்னும் வடிவங்களில் காணக்கிடக்கின்றன. மேலும், அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா போன்ற வடிவங்களில் மிகுதியான கவிதைகள் அமையப்பெற்றுள்ளன.
- சமூக அவலங்களை எடுத்துரைக்கும் கவிதைகளைக் கருத்துக்கோவைப்பாவடிவிலும், சமூகத்திற்குக் கூறவேண்டிய கருத்துகளைப் பொதுப்பாவடிவிலும் எடுத்துரைத்துள்ளார்.
- காதலை மூன்று அடிகளில் சுருங்கக் கூறியவர் 'மலரினும் மெல்லியது' எனும் தலைப்பில் காதலைப்பற்றி 213 அடிகளில் மிக விரிவாக, பல்வேறு கோணங்களில், காதலைக் கரும்பாகவும், கணிப்பொறியாகவும், அதி நவீன அலைபேசியாகவும் காண்கின்றார். காதல் என்பது அதுவே நோயாகவும், அந்நோய்க்குத் தானே மருந்தாகவும் விளங்குவதையும் காதலைச் செல்வத்துள் எல்லாம் தலையாய செல்வமாகவும் பாவநதிகளையும் புனிதப்படுத்தும் சீவநதியாகவும் உருவகித்து உரைக்கின்றார்.
- சமூகத்தில் நிலவும் அவலங்களை விளக்குவதற்கு 206 அடிகளால் ஆன தொடர்நிலைப் பாவைக் கையாண்டுள்ளது கவிஞரின் வடிவக் கையாளுகையைப் புலப்படுத்தும். மேலும் இயற்கையை மனிதர்கள் சீரழித்து வரும் நிலை கண்டு வருந்தி ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய காற்றைப் பற்றி 233 அடிகளில் தொடர்நிலைப்பா எழுதியுள்ளார்.

- கவிஞர் தங்கம் மூர்த்தி இரண்டு அடி முதல் 259 அடி வரை கொண்ட கவிதைகளைப் புனைந்து புதுக்கவிதைக் கவிஞர்களிடமிருந்து சற்று மாறுபடுகிறார். கூறவந்த கருத்திற்கேற்ப வடிவத்தையும் அடிகளையும் கையாளுதல் என்பது தங்கம் மூர்த்தியின் கவிதை வடிவக் கொள்கையாக உள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. முனைவர். ச.வே.சுப்பிரமணியன், தமிழ் நிகண்டுகள், தொகுதி - 1. ப.152.
2. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி, முதல் பாகம், ப.181.
3. முனைவர் மா.கோவிந்தராசு, புதுக்கவிதைக் கட்டமைப்பு, ப.39.
4. முனைவர் பாக்கியமேரி, தமிழ் இலக்கிய வளர்ச்சி, ப.455.
5. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, ப.44.
6. முனைவர் சுபாசு, எது புதுக்கவிதை, ப.21.
7. ந.வீ.செயராமன், புதுக்கவிதையியல், பக்.26 - 27.
8. சரவணத் தமிழன், யாப்பு நூல், நூற்பா. 35.
9. மேலது 59.
10. மேலது 138.
11. மேலது 139.
12. மேலது 140.
13. மேலது 141.
14. இரா.இராசேந்திரன், புதுக்கவிதை இலக்கணம், நூற்பா. 62.
15. ந.வீ.செயராமன், புதுக்கவிதையியல், ப.10.
16. இரா.இராசேந்திரன், புதுக்கவிதை இலக்கணம், நூற்பா. 65.
17. மேலது 68.
18. மேலது 69.
19. மேலது 70.
20. மேலது 72.
21. மேலது 73.
22. மேலது 74.
23. மேலது 75.
24. மேலது 78.

## இயல் இரண்டு

## தங்கம் மூர்த்தியின் இலக்கிய உள்ளடக்கக் கொள்கை

,yf;fpa tbtq;fspy; Kjd;ikahdJ nra;As; tbtk;.  ,J fhyj;jpw;Nfw;gj; jd;id khw;wpf; nfhz;Nl te;Js;sJ. 20-Mk; E}w;whz;bd; nra;As; tbtkhfg; GJf;ftpij tpsq;FfpwJ.  ,g;GJf;ftpij gilj;j GJikf; ftpQh;fSs; ftpQh; jq;fk; %h;j;jpf;Ff; Fwpg;gplj;jf;f ,lKz;L.  ,th;jk; ftpijg;gilg;Gfspy; fhzyhFk; ghLnghUs; nfhs;if Fwpj;J ,t;tpay; tpsf;FfpwJ.

### GJf;ftpijapd; ghLnghUs;

தற்காலத்திய புதுக்கவிதைகளின் பாடுபொருள் இயற்கை, காதல் என்பதைக் கடந்து, சமுதாய நிகழ்வுகள், எதிர்காலத்தில் படைப்பாளி காண விழையும் சமுதாயம் பற்றிய கற்பனை இவற்றின் கலவையாகவே அமைகின்றது. அவ்வகையில் புதுக் கவிதையின் உள்ளடக்கம் அமையும் முறைகுறித்து, 1. பாடப்படாத பாடுபொருள் என்று எதையும் ஒதுக்கி வைத்து விடாமல், சமூகத்தின் வெளிச்சப் பகுதிகளை மட்டும் அல்லாமல் இருண்ட பக்கங்களையும் உணர்ந்தபடி பாடுதல். 2. சமூகத்தின் மாற்றங்கள், சிக்கல்கள் அனைத்தையும் உள்ளடக்கங்களாக உள்வாங்கிக் கொள்ளல்[1] என்றுரைப்பர் மா.கோவிந்தராசு.

இதன்வழி கவிஞனின் பாடுபொருள் அவன் வாழுகின்ற சமூகம் பற்றியதாகவும் அவன்கால அரசியல், பொருளாதாரம் என்பன போன்ற அனைத்தையும் களனாகக் கொண்டு அமையும் என்பதும் புலனாகும். கவிஞர் தங்கம் மூர்த்தியும் தான் வாழும் சூழல், சமூக அவலநிலைகள் மற்றும் அவற்றில் காணவிளையும் மாற்றங்கள் என்பன போன்றவற்றைக் களனாகக் கொண்டு கவிதைகள் படைத்துள்ளார். இவர்தம் பாடுபொருளை இயற்கை, காதல், குடும்பம், சமூகம், தன்னுணர்வு என்னும் பகுப்பிற்குள் அடக்க இயலும்.

**அ) இயற்கை**

**காற்று**

இயற்கையைப் பாடாத கவிஞர்களில்லை கவிஞர் தங்கம்மூர்த்தி அவர்களும் இயற்கையின் இயல்பு குறித்தும் இயற்கையின் சீற்றத்தால் நிகழ்ந்த மாற்றம் குறித்தும் கவிதைகள் புனைந்துள்ளார். ஐம்பெரும்பூதங்களில் ஒன்றாகிய காற்று குறித்து,

**காற்று**
**கண்ணுக்குத் தெரியாத**
**வருடல்.**
**கடற்கரையில் உலவும்**
**கடவுள்.**
**நதிகளைத் தாலாட்டும்**
**தாய்மை.**
**உயிர்களின்**
**மூல முகவரி. (க.ந.கா.ப.23-24)**

என்று போற்றியுரைப்பர்.

இவ்வுலகம் காற்று, நீர், நெருப்பு, நிலம், வானம் என்னும் ஐம்பூதங்களால் ஆனது. இதில் ஏதேனும் ஒன்று இல்லை என்றாலும் உலகம் இயங்காது. அவ்வாறே நம் உடல் இயக்கமும் ஆகும். இதனையே, 'அண்டத்திலுள்ளது பிண்டத்தில் என்பர் சட்டைமுனிச் சித்தர். அத்தகைய இன்றியமையாத காற்றைப் பற்றிப் பாடவந்த கவிஞர்,

**காற்றைப் போல் தான்**
**மாணவர்களும்**
**சுற்றி இருப்பவர்களால் தான்**
**கெட்டுப் போகிறார்கள். (க.ந.கா.ப.22)**

என்றுரைப்பார். இதில் சுற்றுச்சூழலால் காற்று மாசுபடுவதைப் போல, தன்னைச் சுற்றியிருக்கும் நண்பர்களாலும் சமூகத்தாலும் தான் மாணவர்கள் மனம் மாறுகிறார்கள், தடம் மாறுகிறார்கள் என ஆதங்கப்படுகிறார்.

காற்றின் பல்வேறு பெயர்களை மாணவர்களின் செயல்களோடு ஒப்பிட்டு,

**தெருக்களில் நடந்தால்**
**தென்றல் காற்று**
**வீட்டுப்பாடம்**
**கொடுத்தால்**
**வெப்பக் காற்று**
**மதிப்பெண்கள்**
**அதிகம் எடுத்தால்**
**மனதை மயக்கும்**

**மழைக்காற்று (க.ந.கா.ப.22)**

என்றுரைப்பர். fhw;W ,y;iynadpy; ,t;Tyfk; ,y;iy vd;gij czh;e;j ftpQh;; உயிர்களின் மூல முகவரியாக காற்று இருந்தாலும் மனிதன் அதற்குத் தீங்கு விளைவிப்பவனாய் வாழ்கின்ற செயலை, மனிதன் வழியே வரும் காற்று மட்டும் மாசுபடுகிறது (க.ந.கா.ப.26) என்கிறார்.

நெருப்பின் பயணம் நீர் வந்தால் அழியும். நீரின் பயணம் கூடக் கடல் வரைதான். ஆனால் காற்றின் பயணமோ காலமெல்லாம் தொடரும். காலங்கள் தோறும் பயணிக்கும் காற்றைக் களங்கப்படுத்தலாமா? எச்சரிக்கை செய்கிறேன். உலவும் காற்றை விலை கொடுத்து வாங்கும் நாள் விரைவில் வரும். காற்றே தான் கடவுளடா எனும் நிலை வரும். (க.ந.கா.ப.27)என்று இயற்கையைப் பேணாவிடில் ஏற்படும் இன்னலை எடுத்துரைக்கின்றார். மேலும் காற்றைப் பாதுகாக்க நாம் செய்ய வேண்டியதை,

**‘ஒரு செடியை**
**நடுவது தான் நல்லது.**
**நிலத்தை**
**வளமாக்குவோம்.**
**பிறகு**
**வானெங்கும்**
**மென்காற்று ஆளும்.**
**நம்**
**ஆயுள் நீளும்’ (க.ந.கா.ப.30)**

என்று எடுத்துரைப்பர்.

பெருவெடிப்புக் கொள்கையின் படி இவ்வுலகம் தோன்றியது என்பது அறிவியலாளர்கள் கருத்து. இவ்வுலகம் நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என ஐம்பெரும்பூதங்களால் ஆகியது என்பது சித்தாந்தக் கொள்கை. கவிஞரோ இவற்றைப் பூதங்கள் என்பதற்கு வேறு ஒரு காரணமாக மக்கள் தம் உயிரைக் குடித்த பூதங்கள் எனக் கொண்டு,

**குடந்தையில் நெருப்பால்………**
**சுனாமியில் நீரால்………………**
**போபாலில் வாயுவால்…………**

**ஆந்திராவில் வான்மழையால்.........**
**குஜராத்தில் நிலநடுக்கத்தால் இழந்தோம்.**
**ஐந்தையும்**
**பூதங்கள் என்றவன்**
**தீர்க்கதரிசி தான் (பொ.பெ.ம.ப.40)**

என உயிர்களின் இழப்பினால் ஏற்பட்ட மன வருத்தத்தால் ஐம்பூதங்களையும் சாடுகிறார்.

**கடல்**

உலகில் இயல்பாக நடைபெறும் ஒரு நிகழ்வைக் கவிஞன் தன் கற்பனைக் கண் கொண்டு நோக்கும்போது அது கவிதை அழகியலாகிறது. கடல் தோன்றிய நாள் தொட்டு தனது அலைக் கரங்களால் கரையைத் தீண்டும் அழகே தனி. அது எப்போதும் நிகழும் ஒரு நிகழ்வு. பொங்கி வரும் அலைகளின் நுரையைக் கவிஞர் உலகியல் பொருளோடு ஒப்பிட்டு,

**எங்கு கிடைக்கும்**
**அந்த ஷாம்பூ**
**நுரை பொங்கும் கடல் (த.மூ.க.ப.94)**

எனக் குதூகலிக்கிறார்.

**கடலும் மனிதர்களும்**

மனிதர்களுள் தோற்றத்தில் அழகாகத் தெரிந்தாலும் நெருங்கிப் பழகுகையில் அவர்களிடம் மறைந்திருக்கும் எதிர்மறைக் கருத்துகள், எண்ணங்கள், செயல்கள் அருவருக்கத்தக்கதாய் இருப்பதை, கடலின் காட்சியோடு ஒப்பிட்டு தூரத்தில் இருந்து பார்க்கும் போது வெண்மையாக, மடிந்து மடிந்து தவழும் அலைகள் நெருங்கி நின்று பார்க்கும்போது சேறும் சகதியும் என அசிங்கமும் அபாயமுமாய் இருக்கிறது என மனிதனின் (பொ.பெ.ம.ப.58) இயல்பைக் கடலின் இயல்போடு ஒப்பிட்டு உரைக்கிறார்.

நீரின்றி அமையாது உலகு என்றார் வள்ளுவர். ஐம்பெரும்பூதங்களில் நெருப்பு தவிர, மற்றைய அனைத்தும் மனிதனின் கைகளில் சிக்கி, தன் நிலை மாறித் தவிக்கின்றன. அறிவியல் தொழில்நுட்பத்தால் மாசுபாடு பெருகப்பெருக மண் மாசுபாடு, நீர் மாசுபாடு, காற்று மாசுபாடு என அனைத்துமாசுக்களும் பல்கிப் பெருகிவிட்டன. இதனால் குடிக்கும் நீரைக் கூட விலை கொடுத்து வாங்கும் அவலம் நடக்கின்றது. இதனைக் கவிஞர்,

**குடித்த குடிநீருக்கும்**
**கழித்த சிறுநீருக்கும்**
**காசு (மு.பூ.ரோ. ப.54)**

என்று வருந்தியுரைப்பர். மேலும் நகரங்களில் வாழும் மக்கள் குடி தண்ணீருக்குப் போராடும் நிலையை,

**வீதியில் இறங்கி**
**போராடத் துணிந்தனர் பெண்கள்**
**தண்ணீர் லாரி (ம.கை.ப.28 )**

என்றுரைப்பர். போராட வேண்டிய காரியங்கள் எத்தனையோ இருக்க அடிப்படைத் தேவைகளுக்குக் கூட போராட வேண்டிய நிலைக்கு மக்கள் தள்ளப்பட்டுள்ளதை இக்கவிதை எடுத்துரைக்கின்றது.

**மழை**

இயற்கையில் மழை அனைவராலும் விரும்பப்படும் ஒரு செயலாகும். இன்றைய அவசரயுகத்தில் இம்மழையை இரசிக்கக் கூட நேரமின்றி மனிதர்கள் வாழும் நிலையை,

**மழையை இரசிப்பதற்குக் கூட**
**தேவைப்படுகிறது**
**ஒரு விடுமுறை நாள் (த.மூ.க.ப102)**

எனப் பாடுகிறார்.

வாழ்க்கைப் பயணம் முடிந்து இறுதிப் பயணம் செல்வது என்பது மனிதர்களுக்கு மிகுந்த வலியைத் தரும் ஒருசெயல். அதுகாறும் அவர்கள் பயணித்த, செலவிட்ட நாட்களை உறவினரும் நண்பர்களும் அருகிருந்து பழகிய அனைவரும் நீள நினைந்து, வருந்தி இறந்தவருக்கு இறுதி மரியாதை செலுத்தி அடக்கம் செய்வது என்பது வழிவழியாகப் பின்பற்றப்பெறும் ஒரு நிகழ்வாகும்.இத்தகு சூழலில் திடீரென மழை பெய்யத் தொடங்கியவுடன் துக்கத்தில் உள்ள அனைவரும் அடுத்த சடங்கு எப்படிச் செய்வது? எவ்வாறு இறுதி ஊர்வலத்தை மழைக்கிடையில் நடத்துவது? எப்படி ஊர் செல்வது என்று பலவிதமான குழப்பங்களில் இறந்தவரைப் பற்றி மறந்து போன சூழலைக் கவிஞர்,

**நமுத்துக் கிடந்ததால்**
**பறையின் சத்தம்**
**ஓங்கி ஒலிக்கவில்லை**

**எந்தப் பாதையில்**
**எடுத்துச் செல்வது....**
**பள்ளங்களைக் கடந்து**
**எப்படி பத்திரமாகப் பயணிப்பது....**
**என்பனபற்றி**
**குடைகளைப் பிடித்தபடி சிலர்**
**கலந்து பேசினர்**
**பிறகு**
**கலைந்து போயினர்.**

**அங்கு இருப்போர்**
**அனைவரையும்**
**பெரும் கவலைக்குள்ளாக்கியது**
**மழை**
**மறந்தே போனது மரணம். (எ.ப.நா.ப.54)**

என்று கூறி வருந்துகிறார். மரணம் என்ற ஒரு மிகப்பெரிய துன்பத்தை, சுற்றியுள்ள சூழல் மாற்றியமைப்பதை மிக நேர்த்தியாக இக்கவிதை காட்சிப்படுத்தியுள்ளது.

இயற்கையைக் காதலிக்காத கவிஞன் இல்லை. இயற்கையின் நிகழ்வுகள் யாவற்றையும் ஒரு கவித்துவ நோக்கில் அணுகும் கவிஞன் அதன் எழில் கண்டு பேருவகை கொள்கிறான். மழை இல்லை என்றால் மண்ணில் உயிர் வாழ்க்கை இல்லை. இதனை வள்ளுவரும் ‘நீரின்றி அமையாது உலகு’ என அறுதியிட்டுக் கூறுகிறார். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத் தொடக்கத்திலேயே ‘மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்’ என மழையை வாழ்த்திப் பாடியே காப்பியத்தைத் தொடங்குகிறார். தங்கம்மூர்த்தியும் மழையை,

**மழையே வருக**
**குளிக்கவேண்டும்**
**சாலையோரப் பூ மரங்கள் (மு.பூ.ரோ.ப.62)**

என வேண்டுகிறார்.

**நதிகளின் மாநாடு**

மாநாடு என்றாலே பல்வேறு இடங்களில் இருந்தும் அறிஞர்கள், தலைவர்கள் பங்கேற்பதுண்டு. அதுபோல இந்தியா முழுவதும் உள்ள நதிகளை அறிஞர்களாகக் கொண்டு நதிகள் பேசுவதுபோல்,

**கண்ணீர் சிந்தாத**
**காதல் மாளிகை எழுப்புவோம் (க.ந.கா.ப.124)**

என்று யமுனையும், வைகைக் கரையோரமெல்லாம் கட்டடங்கள் நிரம்பி வழிவதால் நிலைகுலைந்த வைகை நதி,

**கட்டிடங்கள்**
**கட்டுவதை நிறுத்தி**
**கரைகளைக் காப்போம் (க.ந.கா.ப.124)**

என்றுரைப்பதாகவும் சாதிச் சண்டைகளால் நகரெங்கும் பல்வேறு வகுப்பினரின் இரத்தம் ஓடுவதைத் தடுக்கத் தாமிரபரணி,

**சாதி ரத்தம்**
**மிதப்பதை நிறுத்துவோம் (க.ந.கா.ப.124)**

என்றுரைப்பதாகவும் நதிகள் கூற்றில் உரைக்கும் கவிஞர், இந்நதிகள் எல்லாம் சங்கமிக்கும் கடலை, தலைமைதாங்க வருவதாக,

**'தலைமை ஏற்க வருகிறார்**
**கவிப்பேரரசு வங்காள விரிகுடா' (க.ந.கா.ப.125)**

என்று இயற்கையை அதன் சூழலியலோடு தொடர்படுத்திப் பாடுவர்.

**கடல்கோள்**

கடல்கோள் என்பது காலங்காலமாக நிகழ்ந்து வரும் ஒருசெயலாகும். இயற்கை தன்னுடைய வலிமையை மனிதர்களுக்கு உணர்த்தும் வகையில் இச்செயல் நிகழுகின்றது. கடந்த 2004 - ஆம் ஆண்டு ஏற்பட்ட ஆழிப்பேரலையில் 6,000 –க்கும் மேற்பட்டோர் உயிரிழந்தனர். இந்நிகழ்வு குறித்து,

**நீர்க்கைகளால் அள்ளி**
**உயிர்களைக் குடித்து**

**தாகம் தீர்த்தது கடல்**
**அகோரப்பசி**
**அலைகளின் வாய்களில்**
**மனித உணவுகள்**
**உப்பு வயல்களில்**
**அலைகள் உழுதன**
**மனிதர்களைப் புதைத்தோம் (பொ.பெ.ம.ப. 41-42)**

என்னும் கவிதைகளில் உரைப்பர். இயற்கை அழகு மட்டுமல்ல; Mgj;ijAk; ey;fpwJ vd;gij ,jd;top czh;j;Jfpd;whh; ftpQh;.

காதலர் சந்திக்கும் இடமாகக் கடற்கரைகள் அமைகின்றன. அவ்வாறு சந்திக்கும் காதலர்கள் தம் உள்ளக்கிடக்கையினை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்வர். கடற்கரை மணலைத் தம் கைகளால் அளாவி, ஏதேனும் சித்திரங்களை வரைதல், தம் பெயர்களை எழுதுதல் போன்ற கேளிக்கைச் செயல்களில் ஈடுபடுவர். இதனைக் கண்ட அலைகள் எச்சரிப்பதாக,

**அலைகள் எச்சரிக்கை**
**'கரை மணலில்**
**காதல் விளம்பரம் செய்யாதீர்' (மு.பூ.ரோ.ப.41)**

என்றுரைப்பர். அலைகளும் கூடக் காதலர்களின் அன்பு நிலைத்திருக்க விரும்புவதால் தான் இவ்வாறு கூறுகின்றன என்கிறார். அலைகள் திரும்பத் திரும்பக் கரையில் வந்து மோதும், வீழும். இதனால் காதலர்கள் எழுதிய காதல் சித்திரங்கள் அழிந்துவிடும். அதனால் தம் அன்பு என்னவாகுமோ எனக் காதலர்கள் கலங்கக் கூடும். எனவே நிலையில்லாத இடத்தில் எழுதி வீணாக மனக்கலக்கமடைய வேண்டாம் என எச்சரிப்பதற்காகவே அலைகள் 'காதல் விளம்பரங்களை'த் தடை செய்கின்றன என்றுரைப்பது கற்பனையின் உச்சமாகும்.

**சூரியன்**

சூரியன் உதிப்பதும் மறைவதும் இயல்பாக நிகழும் செயல். ஆனால் கவிஞரோ இரவின் மடியில் மறையும் சூரியனை,

**எல்லோர் மீதும்**
**ஒளிக் கற்களை**

**எறிந்ததாக**
**குண்டர்கள் சட்டத்தில்**
**கைதாகி**
**இரவின் சிறைக்குள் உள்ளது (த.மூ.க.ப.100)**

என்று கற்பிதம் செய்து உரைக்கிறார். இயல்பாக நிகழும் இயற்கை நிகழ்வுக்கு இனிமை கூட்டுகிறார்.

சாலைப் பராமரிப்புப் பணியின் போது வேலை நடைபெறுகிறது. மாற்றுப் பாதையில் செல்லவும் என அறிவிப்புப் பலகைகள் பயணிகளை அல்லலுறச் செய்வது வழக்கம். கவிஞர் இதை அப்படியே மடைமாற்றி,

**ஆட்கள் வேலை செய்கிறார்கள்**
**வேறு பாதையில் செல்**
**சூரியனே. (த.மூ.க.ப.110)**

என்கிறார். மாலையில் பறவைகள் வரிசையாகப் பறந்து செல்வதை,

**செத்த சூரியனுக்கு**
**மௌன ஊர்வலம்**
**மாலையில் வரிசையாய்**
**பறவைகள் (த.மூ.க.ப.99)**

என மாறுபட்ட கோணத்தில் பாடுகிறார். மேலும் சூரிய வெப்பத்தை மனிதர்கள், பிற உயிரினங்கள் மட்டுமன்றி சூரியனால் உருவாக்கப்படும் பொழுதுகளால் கூடத்தாங்க முடியவில்லை என்றுரைப்பது இயற்கையின் இயல்பினைப் புலப்படுத்தும் ஒரு கவிதையாக உள்ளது,

**தகிக்கும் வெய்யிலை**
**தணிக்கும்**
**நிழலின்றி**
**தவிக்கிறது பகல். (எ.ப.நா.ப.60)**

கோடைகாலத்தை,

**வருடா வருடம் ஊருக்கு வரும்**
**வயல்களில் கிறுக்கி வைக்கும்**
**மரங்களின் உயிரெடுக்கும்**

**குளங்களை மைதானமாக்கும்**
**கிணற்று மண்ணில் வீடு கட்டி விளையாடும்**
**சூரியனில் நெருப்பள்ளி வீசும்**
**காற்றை ஒளித்து வைக்கும்**
**வறுமையைக் கூட்டி வந்து கண்ணாமூச்சி ஆடும்**
**மகிழ்ச்சிகளில் மண்ணள்ளிப் போடும்**
**இம்முறையும் ஊருக்கு கோடை வந்தது கும்மாளம் போட்டது**
**கோடைக்கு இல்லையா விடுமுறை நாட்கள்? (த.மூ.க.பக்.62-63)**

என்று காட்சிப்படுத்துவர்.

**இரவும் நிலவும்**

இரவில் வானத்தில் பறக்கும் விமானம் விளக்குகள் மின்னிட நகர்ந்து செல்வது ஒரு நட்சத்திரம் நகர்ந்து செல்வது போல் உள்ளது என்கிறார். (மு.பூ.ரோ.ப.35)

விமானத்தின் விளக்கொளியை நட்சத்திரமாகக் கற்பிதம் செய்த கவிஞர் நிலவைத் தாயாகவும் நட்சத்திரங்களை அதன் சேய்களாகவும் உருவகித்து தன் குஞ்சுகளுக்குத் தாயாகிய நிலவு இரைதேட ஓடுவதாக உரைப்பது கற்பனையின் மணிமுடியாகும். ஓடும் நிலவின் பின்னே ஓடி ஓடிக் கவிஞர்கள் கவி பாடுவது கவி உலக இயல்பு. ஆனால் கவிஞர் தங்கம் மூர்த்தியோ,

**ஓடும் நிலவே**
**நில்!**
**களைத்துப் போனது**
**கவிதை. (த.மூ.க.ப.45)**

என்று புதுமுகம் காட்டுகிறார்.

**உயிரினங்கள்**

**மீன்கள்**

மீனவர்களின் வலைகளில் சிக்குண்ட மீன்களின் உணர்வை,

**நாங்கள் அலைகளில்**
**விளையாடியதை விட**
**வலைகளில்**
**விளையாடியதே அதிகம். (த.சி.த.த.ப.109)**

என்று அப்படியே காட்சிப்படுத்துவர். கடலில் வாழும் மீன்களின் மனநிலை இது என்றால் கண்ணாடித் தொட்டிக்குள் துள்ளும் மீன்களின் உணர்வை,

**எங்கள் கனவுகளில்**
**அடிக்கடி வந்து போகிறது**
**கடல். (அ.வா.வி.எ.நி.ப.115)**

என்றுரைப்பது மீன்களின் உண்மை நிலையை வெளிப்படுத்துவதாகும். மேலும், உப்புநீரில் துள்ளி ஓடி ஆடி விளையாடிய தங்களைக் கூண்டுக்குள் அடைத்துமினரல் வாட்டர்களில் மிதக்க விடுகிறார்கள் (அ.வா.வி.எ.நி.ப.115) என்று மீன்கள் தண்ணீருக்குள் கண்ணீர் சிந்துகின்றன என்பதும் இத்தகையதே ஆகும்.

**வளர்ப்பு மீன்கள்**

வீடுகளிலும் சில நிறுவனங்களின் வரவேற்பறைகளிலும் மீன்கள் கண்ணாடித் தொட்டிகளில் வைத்து வளர்க்கப்படுகின்றன. இவை எவ்வளவு கவனமுடன் பராமரிக்கப்பட்டாலும் அம்மீன்கள் அத்தகைய சிறையை விரும்புவதில்லை என்பதை,

**கண்ணாடித் தண்ணீரில்**
**நீந்தித் திரியும்**
**வண்ண மீன்களின்**
**கனவுகளிலெல்லாம்**
**கடல். (எ.ப.நா.ப.65)**

என்று காட்சிப்படுத்துகிறார். மீன்கள் சுதந்திரமாக நீந்தித் திரியும் பெரும் பரப்பாகிய கடலுக்குள் வாழ வேண்டியவை. அவற்றைப் பிடித்து கண்ணாடிப் பெட்டிக்குள் சிறை வைக்கும் பழக்கத்தை மறைமுகமாக இதில் கண்டிக்கிறார்.

**பறவைகள்**

**காகமும் கிளியும்**

பொதுவாகக் கிளி எல்லோரும் விரும்பக் கூடிய ஒரு பறவையாகும். ஆனால் கவிஞரோ, இதிலிருந்து மாறுபட்டு காகத்தைப் பிடிக்கும் என்கிறார். அதற்குரிய காரணத்தை,

**கிளிகள் என்றால்**
**எனக்குப் பிடிக்காது**
**கால்களில் கிடக்கும்**

**கலாச்சாரம் வெறுத்து**
**சிலைத் தலைவர்களின்**
**தலை மேல் நிற்கும்**
**தைரியம் இருப்பதால்**
**பருக்கைகளைச்**
**சண்டையின்றிப்**
**பகிர்ந்து கொள்வதால்**
**காகங்கள் என்றால்**
**எனக்குப் பிடிக்கும் (பொ.பெ.ம.ப.36)**

என்று உரைக்கின்றார். இதன்வழி மனிதர்கள் தேவையான பாடத்தைக் காகங்களிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார்.

**காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்ன நீரார்க்கே உள**[2]

என்னும் திருக்குறள் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

**ஆன்டெனாப் பறவைகள்**

பகல் பொழுதில் இரை தேடித் திரியும் பறவை இனம் அந்திப் பொழுதில் தாம் தங்கும் கூடு தேடித் திரும்பும். இடையில் சற்று இளைப்பாறும் விதமாய் உயரத்திலிருக்கும் கோபுரங்கள், உணர்கொம்புகள் (ஆன்டெனாக்கள்) இவற்றில் கூட்டமாய் அமர்வது இயல்பான நிகழ்வு. இந்நிகழ்வை,

**சாயங்காலப் பொழுதில்**
**'தொலைக்காட்சி' ரசிக்கும்**
**ஆன்டெனாப் பறவைகள் (மு.பூ.ரோ.ப.75)**

என்று உரைப்பர். இங்கு மனிதர்கள் மட்டுமன்றி பறவைகளும் கூடத் தொலைக்கட்சியைக் கண்டு களிப்பதாகக் கற்பித்து மகிழ்கிறார்.

**மரங்கள்**

கவிஞர் 'மரங்களின் மாநாடு' என்னும் தலைப்பில் உள்ள பாடலில் பன்னீர் மரங்கள், வேப்ப மரங்கள், தேக்கு மரங்கள், சந்தன மரங்கள், போன்சாய் மரங்கள், வாழை மரங்கள் என மரங்களாலேயே தோரணம் கட்டி அவற்றின் பயன்களை வரிசைப்படுத்தியுள்ளார். இயற்கையின் அருட்கொடை என்று வருணிக்கப்படும் பன்னீர்ப்

பூக்களைக் கொண்ட பன்னீர் மரம் வாசனைத் திரவியத்திற்குப் பெயர் பெற்றது. அதன் இலை, பூ, வேர் என அனைத்தும் பயனுள்ள, மருத்துவக் குணம் கொண்டவை. வெள்ளை நிறத்தில் அளவில் சற்று நீண்டு நறுமணம் தரும் இம்மரப்பூவிற்கு சங்க காலத்துப் பெயர் மௌவல் ஆகும். இதனை, ஞாழல் மௌவல் நறுந் தண் கொகுடி எனவரும் குறிஞ்சிப்பாட்டு அடிகளால் அறியலாம். இத்தகைய பன்னீர் மரங்களுடன் கவிஞர்கள் சிலர் கைகுலுக்கிக் கொண்டிருந்ததாகக் கற்பனை செய்கிறார் கவிஞர்.

நோய் தீர்க்கும் வேப்ப மரங்களைப் பக்தர்களும் நோயாளிகளும் வழிபட, விலை உயர்ந்த தேக்கு மரங்களைப் பணக்காரர்கள் விலை பேசிக்கொண்டிருந்தார்கள் என்றும். மரங்கள் யாவும் அவ்வவற்றின் தன்மையால் மதிக்கப்படுகையில், அறிஞர்கள் சிலர் போன்சாய் மரங்களைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். (எ.ப.நா.ப.78) என்கிறார்.

இயற்கையில் பெரிதாக வளரக்கூடிய மரங்களைத் திறமையான கத்தரிப்பு மூலமும் அவற்றின் தண்டுகளில் கம்பிகளைச் சுற்றிக் கட்டுப்படுத்துவதன் மூலமும் உரிய அளவிற்கு வளரவிடாமல், முதிர்ந்த மரங்களின் தோற்றத்தில் குள்ளமாகவும், பார்வைக்கு அழகாகவும் இருக்கும்படி பூந்தொட்டிகளில் வளர்க்கும் முறை போன்சாய் (தட்டத் தோட்டம்) எனப்படும். இப்போன்சாய் மரங்களால் பயன் இல்லை. எனினும் தம் சுயநலத்திற்காக அறிஞர்களும் முகமன் கூறி வாழுகின்றனர் என்கிறார் கவிஞர்.

மேலும் எந்த ஒரு நிகழ்வானாலும் அதை நடத்துபவர்கள் வாசலில் நின்று நிகழ்ச்சிக்கு வருபவர்களை இருகரம் கூப்பி வருக வருக என வரவேற்பது தமிழ்ப் பண்பாடு. அவற்றிற்கு முத்தாய்ப்பாக முன்நிற்பன வாழைமரங்கள். வாழைத் தோரணம் கட்டுவது நம் பண்டைய மரபு. மங்கல நிகழ்ச்சிகளில் முன்வாயில் தோரணங்களாக இருபுறமும் நன்கு பூத்து, குலை தள்ளிய செழிப்பான வாழை மரங்களைக் கட்டுவது வழக்கம். அவ்வாறு வரவேற்புச் செய்வதற்காக வைக்கப்பட்டிருக்கும் வாழைமரங்கள் தமக்குள் பேசி, தம்மை எவரும் கண்டு கொள்ளவில்லையே என வருந்துவதாக,

**வந்தவர் அனைவரையும்**
**வரவேற்ற நம்மை**
**யாருமே கண்டுகொள்ளவில்லை என்று**
**வருத்தப்பட்டு நின்றன**
**வாழை மரங்கள் (எ.ப.நா.ப.78)**

என்று மரங்களின் உணர்வைக் காட்சிப்படுத்துகிறார்.

**நிழல் தரும் மரங்கள்**

வெயிலின் கொடுமை நிழலில் தெரியும்; நிழலின் அருமை வெயிலில் தெரியும் என்பன பழமொழிகள். பூமியின் செழுமை காக்க, மண்ணின் வளமை காக்கத் தாவரங்களின் வாழ்வு பாதுகாக்கப்பட வேண்டும். ஆனால் நவீனத் தொழில்நுட்பம் சற்றும் தயங்காமல் நொடிப்பொழுதில் மரங்களைச் சாய்க்கும் இயந்திரங்களால் பூமியை வறண்ட பாலைவனமாக்கிக் கொண்டிருக்கிறது. இந்நிலையில் வெட்டப்பட்டுக் கிடக்கும் மரத்தைக்கண்டு மனம் பதைத்த கவிஞர்,

**மன்னித்து விடு மரமே!**
**உனக்குத் தர என்னிடமில்லை**
**நிழல். (மு.பூ.ரோ.ப.72)**

என மன்னிப்புக் கோருகின்றார்.

பணவசதி இல்லாத மனிதனை ஏழை என்று கூறுவது சமூக வழக்கம். வறுமையில் வாடும் மனிதனை, மரங்களுடன் ஒப்பிட்டு இலையில்லா மரங்களை ஏழை மரங்கள் என்கிறார் கவிஞர். கிளையைக் கைகளாகவும், இலையைக் காசுகளாகவும் உருவகம் செய்து, இலையுதிர்கால மரங்களை ஏழை மனிதனுடன் ஒப்பிட்டு உரைக்கின்றார. (மு.பூ.ரோ.ப.44)

**செடிகள்**

‘‘தாவரங்களுக்கு உயிர் உண்டு என்பது மறுக்க முடியாத உண்மை. அவை மனிதர்களைப் போல, விலங்குகளைப் போல இடம்பெயர இயலாதே தவிர அவற்றுக்கும் உணர்வுகள் உண்டு. செடிகள் அசைவதன் மூலம் அவை ஒன்றுடன் ஒன்று பேசிக் கொள்கின்றன. அப்படிப் பேசுவதன் மூலம் தங்களுக்குள் கருத்துகளைப் பரிமாறிக் கொள்கின்றன. தனக்கு நீரூற்ற வருகின்ற மனிதர்களைப் பார்த்ததும் தாவரங்கள் நன்றி சொல்லும் விதத்தில் மெல்ல இலைகளை அசைக்கின்றன. தன்னை வெட்ட வருகின்ற மனிதர்களைப் பார்த்ததும் பயத்தில் அலறிக் கூச்சலிடுவதாக தாவரவியல் வல்லுனர்கள் உரைப்பர். கவிஞரும் இவ்வுண்மையை,

**செடிகளுக்கு**
**நீர் ஊற்றினேன்**
**பூக்களாய் சிரித்தன. (பொ.பெ.ம.ப.47)**

என்றுரைப்பர்.

பூக்களின் இதழ்கள் மிக மென்மையானவை. மலர்களின் வண்ணம், மணம் போன்றவை மனிதர்களின் மனங்களைக் கவர்ந்து இன்பம் தரத் தக்கவை. கவிஞர்களின் கற்பனைக்கு வளம் கூட்டும் புறக்காரணிகளுள் மலர்களுக்குத் தனி இடம் உண்டு. பூக்களிலே அனிச்சமலர் மிக மெல்லியது என இலக்கியங்கள் சுட்டும். பெண்களின் பாதங்கள் மிக மென்மையானவை என்பதை வள்ளுவரும் அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் என்பர். இங்கோ கவிஞர்,

**பாதம் வலிக்கிறது**
**மிதித்துவிட்டேன்**
**பாதையில் கிடந்த பூ (மு.பூ.ரோ.ப.48)**

என்பதில் பூவினை மிதித்த குற்றமுணர்ந்த மனதின் வலியைப் பாதத்தின் வலி என இடம் மாற்றிக் கூறுகிறார்.

மனிதர்கள் சில கோரிக்கைகளை முன்வைத்து ஊர்வலம், போராட்டம் என்று களத்தில் இறங்குவது வாடிக்கை. கவிஞரின் கற்பனையில் பூக்கள் ஊர்வலமாக வந்து, ஏந்திய பதாகைகளில் 'அரசியலுக்குப் பறிக்காதீர்கள்' என்ற வாசகம் இருப்பதாகக் கூறுவது வண்ணமயமான கற்பனை. 'பிரசவத்திற்கு இலவசம்' என ஆட்டோக்களில் காணப்படும் வாசகம் கருணையின் அடிப்படையில் என்றால் பூக்களின் ஊர்வலத்தில் 'அரசியலுக்குப் பறிக்காதீர்கள்' என்ற வாசகம் பூக்களின் புனிதத்தையும் அரசியலின் நேர்மையற்ற, அவலத் தன்மையையும் நமக்கு உணர்த்துகிறது.

மெல்லிய இதழ்களை உடைய, மணம் வீசும் மலரில் கூட, அரசியலின் அவலநிலை உணர்த்தப்பட்டு, புறக்கணிக்க வேண்டிய அரசியல் சூழல் நிலவுவதைக் கூறுவதன் வாயிலாக கவிஞரின் சமூக அக்கறை வெளிப்படுகிறது.

**மலர்களின் மாநாடு**

மெல்லிய மலர்கள் ஓரிடத்தில் கூடி சில தீர்மானங்கள் நிறைவேற்றுவதாக கற்பனை காண்கிறார் கவிஞர். மலர்களின் மணம் கூட நேர்மையைக் கொள்கையாகக் கொண்டு உயிர் உள்ள வரை பாரபட்சமின்றி வாசனையை பரப்ப வேண்டும் என்றும் குழந்தைகளின் கரங்களில் வாடிப் போகாத வரம் கேட்டு இறைவனிடம் கோரிக்கை வைக்க வேண்டும் என்கின்றன எனக் கற்பனை செய்கிறார். மேலும் பூக்களின் ஒற்றுமை பாராட்டும் உணர்வினை எல்லா சாதி மக்களையும் ஒன்றிணைத்து ஒற்றுமை காண விருது வழங்கிட வேண்டும் என்ற மலர்களின் தீர்மானமாய் உணர்கிறார். மலர்களின் இத்தகு தீர்மானம் மனிதர்களுக்குப் பாடமாகும் ((க.ந.கா.பக்.126 - 127).

**மலர்களின் மண(ன)ம்**

மலர்கள் என்றாலே எல்லோருடைய மனமும் மகிழ்ச்சியால் துள்ளும். அவற்றின் பலவிதமான வண்ணங்களும், வாசனைகளும் மனத்தை வசீகரிக்கக் கூடியவை. மலர்களின் அரசியென்று சொல்லத்தக்க ரோஜாமலர் சில மணி நேரங்களிலேயே இதழ் இதழாக உதிர்ந்து விடக் கூடியது என்றாலும் கூட ஒற்றை ரோஜா மலர் என்றாலே அது அன்பின் சின்னமாக, என்றென்றும் காதலர்களின் மனமகிழச் செய்யும் காதல் சின்னமாகவே கருதப்படுகிறது. இதனை,

**ரோஜாவை முகர்ந்தாலே**
**மரணத்தின் வாடை அடிக்கிறது**
**மனிதனின் மரணமோ….**
**பூவின் மரணமோ…. (எ.ப.நா.ப.33)**

எனக் கேள்வி கேட்டு, மனிதனின் மரணத்திற்குப் பின் இடப்படும் மாலையான ரோஜாமலர் தானும் உடன் மரித்து விடுவதாகக் கற்பிதம் செய்கிறார்.

**பிரியமுள்ள கூந்தலில்**
**வாழவைப்பேன் நான்.**
**அவைகளோ**
**பிணங்களின் மீதேறி**
**செத்துக் கிடக்கின்றன.(எ.ப.நா.ப.19)**

என்பதில் மலர்களின் நிலைக்காக மனம் இரங்குகிறார். தான் மலர்களைக் கடவுளுக்குப் படைக்கக் காத்திருக்கும் வேளையில் அவைகளோ அரசியல் தோள்களில் அசிங்கப்படுகின்றன (எ.ப.நா.ப.20) என்கிறார்.

**(ஆ)காதல்**

ஆண் பெண் இருபாலினத்தவரும் ஒருவர் மற்றவரைப் பார்த்தவுடனேயோ அல்லது சற்று உடன்பழகி மனம் ஒன்றுபட்ட உடனோ முகிழ்ப்பது காதல். பார்த்த மாத்திரத்திலேயே தோன்றும் காதல் முழுக்க முழுக்க உணர்வு சார்ந்தது. அறிவியல் காதலை உடல் சார்ந்து அணுகும் போது இலக்கியங்கள் அதனை அகம் சார்ந்த நோக்கில் அணுகுகிறது. காரணம் காதலரின் உடல் ஒன்றிணையும் முன்பே இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்துகின்றனர் என்பதேயாகும். திருவள்ளுவர் கூறும் காதலி,

**நெஞ்சத்தவர் காதல ராக வெய்துண்டல்**
**அஞ்சுதும் வேபாக் கறிந்து**[3]

என்கிறாள். இதில் காதலன் தன் நெஞ்சத்தில் இருப்பதால் சூடான உணவை உட்கொண்டால் அது உள்ளே செல்லும்போது காதலனைச் சுட்டுவிடும் என்று கருதி அவள் சூடான எதையும் உண்பதற்கு அஞ்சுகிறாள் என்று நுண்ணிய காதல் உணர்வு சுட்டப்பெற்றுள்ளது.

உள்ளங்கள் ஒன்றுபடுவதால் உடற்புணர்ச்சி இல்லாவிட்டாலும் கூட காதலர்கள், தாம் வாழும் சமுதாயத்தையும் உலகத்தையும் மறந்தும் புறக்கணித்தும் காதலைப் புறக்கணிக்காதவராய், தாம் இருவர் மட்டுமே வாழும் கனவுலகத்தையும் கற்பனை உலகத்தையும் படைத்துக் கொண்டு விடுகிறார்கள் அதனால்தான் பாரதிதாசன், காதலர்களைப் பற்றி,

**கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்**
**மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்**[4]

எனக் காதலின் ஆழத்தை, அதன் வீரியத்தைக் காட்டுகின்றார்.

கவிஞர் தங்கம் மூர்த்தியின் காதல் கவிதைகளும் இன்பரசம் ததும்ப இரு உள்ளங்களின் எண்ணங்களை எடுத்துக்காட்டும் எண்ணப்பேழைகளாய் மணம் வீசி, படிப்போரின் மனதில் இலக்கிய இன்பமாய் மனங்களின் பரிமாணங்களை நமக்கு விளக்குகின்றன. இதனை,

**காதல்**
**இல்லையேல்**
**சாதல்.**
**காதல்**
**இருந்தாலும்**
**சாதல்.(தே.தே.ப.60)**

என்னும் கவிதை புலப்படுத்தும்.

காதல் வாழ்வியல் இலக்கியங்களில் களவு, கற்பு என இரு நிலைகளைக் கொண்டுள்ளது. காதல் மலர்ந்து தலைவனும் தலைவியும் மட்டுமே அந்த உணர்வுகளைப் பரிமாறிக்கொண்டோ அல்லது நெருங்கிய தோழன், தோழியர் மட்டுமே அறிந்ததாக இருக்கும் வரை அது களவு.

காதல் கொண்ட இருவரில் எவரேனும் ஒருவருக்குப் பெற்றோர் வேற்று இடத்தில் திருமணம் செய்ய முயற்சி செய்யும் போதோ அல்லது இருவரும் சந்திப்பதைப் பொதுவில் உள்ள மற்ற யாரேனும் கண்டு கொண்டதன் பயனாய் அவர்களின் காதல் வாழ்க்கை வெளிப்பட்டு அனைவரும் அறிய உறுதிப்பாடு அடைதல் 'கற்பு' வாழ்க்கை ஆகும்.

கவிஞரும் காதலியைச் சந்திக்கச் செல்லும் ஒரு காதலனது மனஉணர்வை,

**வாகன வேகத்தை முந்தி**
**விரைந்தோடுது மனசு**
**காத்திருப்பாள். (த.மூ.க.ப.56)**

என்று சிலிர்க்கிறார்.

**விழிகளில் ஊதி**
**தூசி எடுத்தாய்**
**தூசி வெளியேற**
**உள்ளே நீ (த.மூ.க.ப.30)**

என்னும் கவிதையில் காதலியைக் கண்டவுடன் மகிழ்ந்த தலைவன் தன் கண்ணில் விழுந்த தூசியை அவள் ஊதி எடுத்த, அன்பின் வெளிப்பாடாகிய செயலால் அவளே விழி வழியாக உள்ளே நுழைந்து விட்டதாக, காதலின் நுணுக்கம் உரைக்கிறார்.

**உன்னைப் புகைப்படம்**
**எடுத்து**
**இருட்டறையில் கழுவிப் பார்த்தேன்**
**அடடா…. நான் (மு.பூ.ரோ.ப.59)**

என்னும் கவிதையும் அத்தகையதே. மேலும் காதலிக்காகக் காத்திருக்கும் வேளையில் காதலனது மனஉணர்வை,

**உனக்காகக்**
**காத்திருந்த வேளையில்**
**கடந்து போன**
**எல்லாப் பறவைகளிடமும்**
**உன்**
**சாயலைக் கண்டேன்' (எ.ப.நா.ப.59)**

என்றுரைப்பர். இங்கு கவிஞர் ‘நோக்குபவை எல்லாம் அவையே போறல்’ என்னும் தொல்காப்பியத்தலைவனை நினைவுபடுத்துகிறார். இதுமட்டுமன்றி கடந்துபோன பறவைகள் மீண்டும் திரும்பிச் செல்கின்றன. அவ்வாறு திரும்பிச் செல்லும் பறவைகளிடத்து, நம் சாயலைப் பார்க்க முடிந்தது என்றுரைக்கின்றார். இதில் பறவைகளின் ஒற்றுமை, இணையைப் பிரியாமை என்னும் நிலையைக் காதலர்களோடு பொருத்திப் பார்க்கின்றார் கவிஞர். மேலும்

**வில்லிலிருந்து**
**வெளிப்படும் கணைகளை விட**
**விழியிலிருந்து**
**வெளிப்படும் கணைகள்**
**வலிமையானவை. (க.ந.கா.ப.99)**

**கணைகளின்**
**பணியெல்லாம்**
**அழிப்பது தானா….**
**இல்லை**
**ஒருவனின் கணை மட்டும்**
**உயிர் கொடுக்கும்**
**அது**
**மன்மதனின்**
**மலர்க்கணை.**
**மற்ற கணைகளால்**
**உயிர்களுக்குச் சேதாரம்.**
**மலர்க்கணைகள்தான்**
**புதிய**
**உயிர்களுக்கு ஆதாரம் (க.ந.கா.ப.101-103)**

என்னும் கவிதையில் காதலும் குழந்தைப்பேறும் சுட்டப்பெறுகிறது.

**காதல் போரில்**
**விழிகளின் கணைகளை**
**எதிர்த்து**
**வென்றவர் எவரும்**

**இன்று வரை**
**இல்லை (க.ந.கா.ப.100)**

என மன்மதனின் கணையில் வென்றவர் இல்லை என அறுதியிட்டுக் கூறுபவர். உயிருக்கு இன்பம் தரும் கரும்பு வில்லை நேசித்துக் காதலைக் காலமெல்லாம் சுவாசிப்போம் (க.ந.கா.ப.103) என்கிறார். ஆதலினால் காதல்செய்வீர் மானிடத்தீரே என்றான் பாரதி. கவிஞர் தங்கம்மூர்த்தியோ காலமெல்லாம் காதல் செய்வது மட்டுமல்லே; mijNa Rthrkhff; nfhs;Nthk; vd;fpwhh;.

கவிஞர் காதலன் ஒருவன் காதலிக்கு வேண்டுகோள் விடுப்பதாக எழுதியுள்ள,

**பேசி விடாதே**
**இரத்தம் வந்துவிடும் -**
**இதழ்கள் மோதினால். (மு.பூ.ரோ.ப.37)**

என்னும் கவிதை காதலியை மெல்லியளாகக் காட்சிப்படுத்துகிறது.

**குளிக்கச் செல்லாதே**
**தாமரைக் குளத்தில்**
**பூப்பறிக்கும் சிறுவர்கள் (மு.பூ.ரோ.ப.69)**

ன்னும் கவிதையோ காதலியின் முகத்தை தாமரையாக உருவகிக்கின்றது.

**மரத்தடிப் பூவையர்**

கல்லூரியில் பயிலும் மகளிரையும் அவர்களைக் காணக் காத்திருக்கும் ஆடவரையும்

**மகளிர் கல்லூரி**
**மரத்தடியிலும் பூக்கள்**
**வாசலில் வண்டுகள் (மு.பூ.ரோ.ப.52)**

என்று அழகுறக் காட்சிப் படுத்துகிறார்.

காதலி பூவைப்போன்ற ஒரு பூவை என்பதால் காதலியைப் பார்த்து, பூவையே இயற்பெயர் இருக்கட்டும். பூக்களுக்கெல்லாம் நீ வந்து ஒரு புனைபெயர் சூட்டி விட்டுப்போ! (எ.ப.நா.ப.69) என்று கவிஞர் அழைப்பதும் காதலியின் மென்மையைப் பேசுவதாகும்.

**அலர்**

ஒரு பெண்ணும் ஓர் ஆடவனும் திருமணத்திற்கு முன்பு சந்தித்துப் பழகுவதைக் கண்டவுடனேயே சுற்றியுள்ள மாந்தர், இவளுடன் இவனுக்கு என்ன தொடர்பு எனப் பேசத் தொடங்குவர் இது அலர் எனப்படும். ஊரார் பேசும் பேச்சைக் கேட்ட தாய் தன்மகளைக் கண்டிப்பதுண்டு. ஆனால் காதல் கொண்ட பெண்ணோ ஊராரும் தாயும் பேசுவது தன் காதல் பயிரை வளர்க்க உதவும் எருவாகவும் நீராகவும் கருதுவதை,

**ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்**
**நீராக நீளுமிந் நோய்[5]**

என்றுரைக்கும் திருக்குறள். இங்ஙனம் காதலர்கள் குறித்து அலர் பேசுவது அன்று மட்டு மல்ல; ,d;Wk; cs;sJ vd;gij>

**எதிர் வீட்டுப் பாட்டி**
**எப்படியும்**
**ஒருநாள்**
**சொல்லிவிடுவாள்**
**தன் பேரனிடம் -**
**நம் கதையை. (எ.ப.நா.ப.72)**

என்னும் கவிதை புலப்படுத்தும்.

**பிரிவு ஆற்றாமை**

ஒன்றிணைந்த இரு உள்ளங்கள் உற்றார்; மற்றவர் அறிந்தபின், அலர் தூற்ற அதனால் மனம் வாடி, சிறிது காலம் சந்திக்காமல் இருத்தல் நிகழும். இச் சூழலில் ஏதோ ஒரு காரணத்தினால் காதலி காதலனை விட்டுப் பிரிந்து போய்விடுகிறாள். பிரிந்து சென்ற காதலியை நினைத்துத் தலைவன் புலம்புவதாக அமைந்துள்ள,

**எல்லா**
**மகிழ்ச்சிகளுக்கும்**
**ஒரு விசா எடுத்து**
**விரைந்து விட்டாய் -**
**பெருவெளியில்**
**புள்ளியாய்**
**நான்**

**காத்திருப்பது**
**தெரியுமா**
**உனக்கு (எ.ப.நா.ப.57-58)**

என்னும் கவிதை பிரிவுத் துயரத்தை நம் கண்முன்னே நிறுத்துகிறது.

இவ்வாறு பிரிவால் வாடினாலும் அவளுடன் கூடியிருந்த நினைவுகளைத் தன் நெஞ்சத்தை நிரப்பி, இன்பம் தருபவளாகத் தலைவியின் செயல்களைப் பட்டியலிடுகிறான் தலைவன். இரவு முழுவதும் உன் ராகங்களை இசைத்து, வாசனையை மிதக்கவிட்டு, உன் உள்ளத்தில் உள்ள பிரியங்களால் என் இரவு மொத்தத்தையும் நிரப்பி விட்டாய். என் இரவு முழுவதையும் உன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தாய். எனவே,

**விடிந்த பிறகாவது**
**என் கட்டுப்பாட்டுக்குள்**
**இருக்க விடு**
**என் பகலை (எ.ப.நா.ப.77)**

என அங்கலாய்ப்பாய்க் கூறினாலும், பிரிந்த தலைவி மீண்டும் தன்னைச் சந்திக்கும் நாள் எந்நாளோ என வருந்தி இருக்கும் நிலையை,

**நீ**
**வரும் நாளை எதிர்பார்த்து**
**வார்த்தையெல்லாம் திணறுதடி (எ.ப.நா.ப.79)**

**நீ**
**ஊரில் இல்லாத**
**நாள் அன்று**
**பெய்து கொண்டிருந்த**
**மழையை**
**நீ என நினைத்து**
**நனைந்தேன் (எ.ப.நா.ப.87)**

என்னும் கவிதைகள் புலப்படுத்தும்.

காதல் தோல்வி அடைந்த நிலையில் ஏற்படும் மன உணர்வை,

**திருமண வீட்டின்**
**பன்னீர்த் தெளிப்பில்**
**கலந்து இருக்கலாம்**
**காதலின் கண்ணீர் (எ.ப.நா.ப.28)**

எனக் கூறி கலங்குகிறார்.

காதலியைப் பிரிந்தவர்கள் இரவில் துயரத்தால் உறக்கம் கொள்ளாமல் இருப்பதை,

**இருளும் நீயும்**
**இம்சித்துக் கொண்டே இருந்தீர்கள்**
**இரவெல்லாம். (எ.ப.நா.ப.24)**

என்று பாடுகிறார். மேலும் அவளை நினைத்துத் தான் மட்டும் புலம்பித் தவிக்கும் போது அவளுக்கு இவ் எண்ணம் தோன்றுமா என நினைத்த காதலனின் கூற்றாக,

**கன்னத்து மச்சத்தில்**
**கருவிழியின் ஆழத்தில்**
**எங்கேனும்**
**கிடைத்தேனா**
**நான் (எ.ப.நா.ப.55)**

என்கிறார். மேலும்

**ஒரு குரல்,**
**ஒரு குறுஞ்செய்தி,**
**ஒரு கவிதை,**
**ஒரு முத்தம்**
**என்பனபோன்ற**
**தூதுவர்களை**
**அவ்வப்போது**
**அனுப்பி (எ.ப.நா.ப.47)**

என் துயர் தீர்க்கக்கூடாதா என்று ஏங்கும் காதலனையும் படைத்துக் காட்டுகிறார்.

காதல் என்ற வார்த்தையைக் கேட்டாலே கம்பும் தடியுமாய் மிரட்டி ஒடுக்கும் சமூகம் இன்னும் மாறவே இல்லை. அதனால் காதல் ஒன்றும் தன் சக்தியை இழந்து அழிந்து விடவுமில்லை. காதலர்கள் தோற்கலாம். ஆனால் காதல் என்றும் தோற்பதே இல்லை. அது அவரவர் மனங்களில் மணம் வீசிக் கொண்டுதான் இருக்கும். சாதி மத பேதம் காட்டி, மனித குலம் காதலின் உண்மைத்தன்மையை உணராமல் நசுக்கிப் போடும் நிலையைக் கவிஞர்,

**காதலின் தலையில்**
**அட்சதை தூவும்**
**கரங்கள் இன்னும்**
**தோன்ற வேண்டும்.**
**சாதிப் பேயை**
**சாம்பலாய் போடும்**
**தீயில் நெய்யை**
**ஊற்ற வேண்டும் (த.மூ.க.ப.54)**

என்று எடுத்துரைக்கிறார்.

அழகிய பெண்களைக் கண்டு இரசிப்பது இளைஞர்கள் இயல்பு. இதனை,

**ஏர் இண்டியா பணிப்பெண்**
**இறங்கி வந்து கொண்டிருந்தாள் -**
**பறந்து கொண்டிருந்தார்கள் பலர் (த.மூ.க.ப.56)**

என்று பாடுகிறார்.

தன் காதலையும் காதலியையும் வருணிக்க ஒரு இனிய காதல் வரைபடம் தீட்டியுள்ளார் கவிஞர். காதலியின் விழிகள் தனக்கு வேடந்தாங்கல் என்றும் அவள் கால்கள் பட்டால் நீரும் நிற்கும் என்றும் வருணிக்கிறார். காதலியின் ஒரு வார்த்தையால் தான் மறுபிறவி பெற்றதாக மெய்சிலிர்த்து, வருசக் கணக்காய் செத்துக் கிடந்தேன், ஒரு வார்த்தை சொன்னாய் வானில் பறந்தேன் (தமூபக.ப.91) என்று பாடுகிறார்.

தன்னை அழகாய்க் காட்டிக் கொள்வதில் முனைப்புடைய மனைவி ஒருத்தி பற்றி,

**கணவனுக்கு இட்லி வைத்து**
**ஒருமுறை**

**கண்ணாடி பார்த்து விட்டுத்தான்**
**சட்னி ஊற்றுவாள் (த.மூ.க.ப.32)**

என்பவர்

**இவ்வளவு நெருக்கம்**
**இருந்த போதிலும்**
**ஏனோ கண்ணாடி**
**அவளை ஏமாற்றியே வருகிறது.**
**அவள்**
**தேடுவதைத் தராமல் (த.மூ.க.ப.32)**

என உண்மையையும் கவிதையாக்கியுள்ளார்.

**சமாதானப்படகு**

எவ்வளவோ முயன்றும் காதலி தன் மவுனம் கலைக்காத சூழலில் தன் எண்ணங்களில் எப்பொழுதும் அவள் நிறைந்திருக்க, அவளுடைய எண்ணம் தெரியாமல் மனம் கலங்குவது, ஆழ் கடலில் அலைகள் இழுத்துச் செல்வதுபோல் உள்ளதாகக் கருதி,

**ஆழத்தில் மூழ்கி**
**மரணிப்பதற்குள்**
**அனுப்பிவிடு**
**ஒரு**
**சமாதானப் படகு (எ.ப.நா.ப.68)**

என்கிறார்.

**கைக்கிளை**

கைக்கிளையை ஒருதலைக் காமம் என இலக்கண நூலார் சுட்டுவர். கைக்கிளை என்ற சொல்லுக்குச் சிறிய உறவு என்பது பொருள். ‘‘சிறிய என்பது இவ்விடத்தில் இழிந்த என்னும் பொருளன்று; அவ்வுறவு நிற்கும் காலம் சிறியது’’[6] என்பர் வ.சுப.மாணிக்கனார்.

கைக்கிளையை ஆண்பாற் கைக்கிளை, பெண்பாற் கைக்கிளை என இருவகைப்படுத்துவர். கவிஞர் தங்கம்மூர்த்தி கவிதைகளில் ஆண்பாற் கைக்கிளையே பெரிதும் காணப்படுகிறது.

காதல் நினைவுகள் ஒருபோதும் அழிவதில்லை. காதலில் வென்று திருமணம் செய்து கொண்டாலும், காதலித்தவர் கிடைக்காமல் கால வெள்ளத்தால் தனிமையானாலும் நினைவுகள் நிரந்தரமானவை. அவை நெஞ்சத்தை விட்டு அகலாமல் பசுமையாய் நிலைத்து இருப்பவை. இதனைக் கவிஞர்,

**துடைக்கத் துடைக்க**
**உன் நினைவுகள்**
**ஒட்டடையாய் (த.மூ.க.ப.94)**

என அங்கலாய்க்கிறார். நீங்கா நினைவுகளாய் நெஞ்சில் நிழலாடுகின்ற எண்ணங்களை வெல்லமுடியாத காதலனாய்,

**செத்திடும்போதெல்லாம் எழுப்பி விடு - என்**
**சிறகினில் நீர் ஊற்றி உசுப்பிவிடு (பொ.பெ.ம.ப.29)**

எனக் காதலியிடம் வேண்டுகோள் விடுக்கின்றார்.

**காற்று இல்லையென்றால் மட்டுமல்ல**
**காதல் இல்லையென்றாலும்**
**வாழ முடியாது**
**அது**
**அணுஅணுவாய்**
**ரசித்து, கடித்து, சுவைத்து**
**சக்கையையும்**
**சர்க்கரையாக்கும்**
**கரும்பு (க.ந.கா.ப.10-11)**

என்கிறார்.

இன்றைக்கு உண்மையான காதல் என்பது இல்லை என்பதை நேற்றைய காதல் இன்றைக்கு வேறு ஒருவருடன் காதல், எதிர்வரும் காதல், பகுதி நேரக் காதல் மாலை நேரக் காதல், அலைபேசிக் காதல், அடுத்தடுத்த நிறுத்தத்தில் இறங்கிப் போகும் பேருந்துக் காதல் எனப் பலவிதமாகப் பங்கப்பட்டுப் போன காதலை மனம் நொந்து காட்டுகிறார் (க.ந.கா. ப.44) எனினும் உண்மைக் காதலின் நிலையை,

**காதல்**
**ஒரு விமானப் பயணத்தைப் போல**
**கைக்கெட்டும் தூரத்தில்**

மேகங்கள்
மிதந்து கொண்டிருக்கும்.
புறச்சத்தங்கள் எதுவும்
காதுகளில் விழாது
நமக்கருகே
சில வேதனைகள் நடமாடிக் கொண்டிருப்பார்கள்.
அமர்ந்து கொண்டுதானிருப்போம்
ஆனால் உண்மையில்
பறந்து கொண்டிருப்போம்
காதலிப்பவர் யாரென்பதை
எளிதில் நீங்கள்
கண்டுபிடிக்கலாம்.
அண்ணாந்து பார்த்து
அத்தனை நட்சத்திரங்களையும்
எண்ணிக் கொண்டிருப்பார்கள்.
குனிந்து பார்த்து
மலர்களை
வருடிக் கொண்டிருப்பார்கள்.
புன்னகை ஒன்றைத்
தவழவிட்டபடி
பூமிக்கு ஓர் அடி மேலே
நடந்து கொண்டிருப்பார்கள்.
கொஞ்சம்
காதலைக் கொண்டுவந்து
கொட்டுங்கள்
மண்ணுக்குள்ளிருந்து
புதிய ஊற்று ஒன்று
புறப்பட்டுவரும்
பாவநதிகளையும்
புனிதப் படுத்தும்
ஜீவநதிதான்
காதல். (க.ந.கா.பக்.14-17)

என்னும் கவிதையில் எடுத்துரைப்பர்.

**(இ) குடும்பம்**

**இல்லறம்**

'மனைக்கு விளக்கம் மடவார்' என்பது ஆன்றோர் வாக்கு. இருமனம் இணைந்த திருமணவாழ்வில் மனைவியின் பங்கு குறித்து மழையோடு மனைவியை ஒப்புமைப்படுத்தி,

**வந்தாலும் சிரமம்**
**வராவிட்டாலும் சிரமம்**
**ஊருக்குப் போன**
**மனைவியைப் போல. (பொ.பெ.ம.ப.10)**

என்றுரைப்பர். முற்போக்குச் சிந்தனையுடைய கவிஞர் இவ்விடத்தில் கொஞ்சம் சறுக்குகிறார். எனினும் பேய் மழை, அடித்துப் பெய்யும் மழை, தூறல் மழை, விட்டுவிட்டுப் பெய்யும் மழை, தூறிச் செல்லும் மழை, நசநசவெனப் பெய்யும் மழை எனப் பலவித மழையையும் மனைவியின் பலவித குணங்களோடு ஒப்புமைப்படுத்தியுரைத்து எதுவாக அவள் குணம் இருப்பினும், அவள் இல்லாமல் இருப்பதும் சிரமம்தான் என்று கூறி மழையும் மனைவியும் இன்றி வாழமுடியாத நிலையைக் காட்டுகிறார்.

திருமணம் என்பதே இருமனம் இணையும் பெருமைக்குரிய நிகழ்வு. திருமணமான பின்பு கணவனின் மனப்போக்கை மனைவியும், மனைவியின் மனநிலை மற்றும் தேவையைக் கணவனும் மனதில் கொண்டு நடந்துகொண்டால் மட்டுமே வாழ்க்கைச் சக்கரம் இனிதே சுழலும். மாறாக ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாவிட்டால் என்ன நிகழும் என்பதைக் கவிஞர்,

**அவளுடன் சண்டை**
**அமைதியாயிருந்தாள்.**
**பாத்திரங்கள் பேசின (ம.கை.ப.24)**

**பட்டிமன்றம் முடிந்து**
**வீட்டிற்குத் தாமதமாக**
**வந்தேன்.....**
**வழக்காடு மன்றம் (மு.பூ.ரோ.ப.10)**

என அங்கலாய்க்கிறர்.

கணவன் மனைவி சண்டையிடுவது மட்டும்தான் வாழ்க்கையா? என்றால் இல்லை சில ஊடல்களும், உரசல்களும் உள்ளது தான் வாழ்க்கை எனும் மற்றுமொரு வாழ்க்கைப் பரிணாமத்தையும்

**கோபப்படும் எனக்கும்**
**ஆத்திரப்படும் உனக்கும்**
**சென்ற வாரம் நான்**
**விருது தந்தார்கள். (பொ.பெ.ம.ப.30)**

என்றுரைப்பர். இதில் சண்டையிட்டுக் கொண்டாலும் கணவன், மனைவி இருவரும் அதை வெளியில் காட்டாமல் வீட்டிற்குள்ளேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்கிறார்.

இன்றைய வாழ்க்கை எப்படி உள்ளது என்பதை,

**வெய்யிலில்**
**பதுங்கி**
**மழையில்**
**ஒதுங்கி**
**வீணானது**
**வாழ்க்கை (எ.ப.நா.ப.27)**

என்று நிதர்சனப்படுத்துகிறார்.

வாழ்க்கையை நடத்துவதற்குப் பணப் பற்றாக்குறை ஏற்படும்போது நாளைய பொழுதிற்கான சேமிப்பு என்பதே வெறும் கனவு தான். அவ்வாறு இருக்கையில்

**கொஞ்சம் கொஞ்சமாய்**
**காசு சேர்த்து**
**உண்டியல் வாங்கினேன் (மு.பூ.ரோ.ப.65)**

என ஒரு குடும்பத்தின் சேமிப்புக் கனவைச் சித்திரிக்கிறார். உண்டியலில் காசு சேமிக்கப்படும். ஆனால் உண்டியில் வாங்குவதற்கே காசு சேமித்தல் என்பது ஏழ்மையின் யதார்த்தத்தைப் புலப்படுத்தும்.

ஒரு பெண்ணின் மன உணர்வை,

**புதுவீட்டுக்கு வந்தவுடன்**
**மனைவி கேட்டாள்**
**“படைய வீட்டிலிருந்து**
**எல்லாவற்றையும்**
**எடுத்துவந்துவிட்டீர்களா..!”**
**அவளுக்கே தெரியும்**
**எடுத்துவரமுடியாத**
**சில ஞாபகங்கள்**
**அங்கேயே இருப்பது. (த.மூ.க.ப.116)**

என்றுரைப்பர்.

இல்லறத்தின் பயன் குழந்தைகள் அக்குழந்தைகளின் அழகிய உலகை,

**திருவிழாக்களை**
**வரவேற்று**
**அழைத்து வருகிறார்கள்**
**குழந்தைகள்**

**குழந்தைகளைக் கண்டதும்**
**குதூகலத்துடன்**
**துள்ளுகின்றன**
**திருவிழாக்கள்**

**நீண்ட நாட்களுக்குப் பின்**
**வருவதால்**
**என்ன கொண்டு வந்திருக்கும்**
**என்ற ஏக்கத்தோடு**
**திருவிழாவின் கரங்களைப் பார்க்கின்றனர்**
**குழந்தைகள்.**

**கரங்களை அகலவிரித்து**
**விடுமுறையைக்**
**கொண்டுவந்திருப்பதாகத்**
**தெரிவிக்கின்றன**

திருவிழாக்கள்.

விலை மதிப்பில்லாப்
பரிசென்பதால்
திருவிழாக்களை
மாறி மாறி முத்தமிட்டு
மகிழ்கிறார்கள்
குழந்தைகள்

கூடுதல் உற்சாகத்துடன்
திருவிழாக்களைக்
குளிக்க வைத்துப்
புதுப்புது வர்ணமடித்துப்
புத்தாடை உடுத்தி
அழகு பார்க்கிறார்கள்

விதவித ஆபரணங்களால்
திருவிழாக்களை
அலங்கரிக்கிறார்கள்.

உணவு வகைகள்
பலப்பல இருந்தும்
உண்ணுவதை மறக்கிறார்கள்.
திருவிழாக்களுடன்
ஆசை தீர விளையாடி
ஆட்டம் போடுகிறார்கள்.

அக்கம் பக்கத்து
நண்பர்களிடம்
அழைத்துப்போய்
அறிமுகப்படுத்துகிறார்கள்.

விருந்தினரைப்
போலன்றி
நிரந்தரமாய்த் தங்கிட
திருவிழாக்களிடம்

**கோரிக்கை வைக்கிறார்கள்**
**குழந்தைகள்.**

**பரிசீலிப்பதாய்ச் சொல்லிப்**
**புறப்படுகின்றன**
**திருவிழாக்கள்.**

**விடை பெறுகையில்**
**விட்டுப் பிரிய மனமின்றி**
**திருவிழாக்களைக்**
**கட்டிப் பிடித்துக்**
**கண்ணீர் விடுகிறார்கள்**
**குழந்தைகள்.**

**அடுத்தொரு நாள்**
**வருவதாய்**
**ஆறுதல் சொல்லிக்**
**கிளம்பிச் சென்ற**
**திருவிழாக்களை நினைத்தபடியே**
**உறங்கிப் போய்விடுகிறார்கள்**
**குழந்தைகள்**

**அதன்பின்**
**நிரந்தரமாய்த் தங்கிவிட்டன**
**திருவிழாக்கள்**
**குழந்தைகளின் கனவுகளில். (தே.தே.ப.14)**

என்று காட்சிப்படுத்துகிறார்.

ஒரு மாறுவேடப்போட்டியின் மறுபக்கம் என்னும் கவிதையில் பள்ளியில் நடந்த நிகழ்வுகளை, மயில், மாலை, வேல், கிரீடமென செலவு பல நூறாயினும் ஆறுதல் பரிசும் கிடைத்திரா அவமானத்தால் கடவுளையே கன்னத்தில் அறைந்தாள் ஒரு தாய். வீட்டில் நடந்த ஒத்திகையின் ஒவ்வொரு முறையும் ஆவேசமாய்ப் பேசி அசத்தியவன் எல்லோரும் பார்க்க ஒலிபெருக்கி முன் உளறியதற்காக விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள் வீரபாண்டிய கட்டபொம்மனின் தாய். மகாகவி பாரதிக்கு இம்முறையும் இரண்டாம் பரிசுதான். இலை, தழை, கிளைகளைச் சுற்றிக்கட்டி ‘‘நான்

மரம் பேசுகிறேன் என்னை வெட்டாதீர்கள் பாவமில்லையா…'' எனக்கேட்டு பரிசுபெற்ற குழந்தைக்காக எங்கோ வெட்டப்பட்டிருந்தது ஒரு மரம். கர்ணனாய்த் தோன்றி கவனத்தை ஈர்த்தவனுக்கு மதிப்பெண்களில் கஞ்சத்தனம் காட்டினார்கள் நடுவர்கள். ஆசைகளைத் துறக்கச் சொன்ன புத்த பெருமானின் தாய் தன் பிள்ளையே முதல் பரிசு பெறவேண்டுமெனப் பேராசைப்பட்டாள். ஆடம்பர அணிகலன்களோடு அவதரித்த எல்லாக் கடவுளின் கையிலும் ஒரு செல்போன். அதிரடியாய் உரையாற்றிக் கொண்டிருக்கும்போதே அவிழ்ந்து விட்டது அந்த அரசியல்வாதியின் வேட்டி. ஏழைகளுக்கு உதவுவதாகச் சொன்ன குழந்தை மருத்துவரைப் பார்த்து ஏளனமாய்ச் சிரித்தது கூட்டம். அனைவரும் கடந்த பின் அந்த அரங்கெங்கிலும் சிதறிக் கிடந்தன குழந்தைகளின் மகிழ்ச்சிகளும் ஏமாற்றங்களும் என்று குழந்தைகளின் உணர்வைக் காட்சிப்படுத்துவர். (தே.தே.பக்.47-48) இது பிற கவிஞர்கள் பேசாத ஒரு புதுப்பொருள் ஆகும்.

**உறவுகள்**

**தாய்மை**

மனித வாழ்வில் உறவுமுறைகள் இன்றியமையாதன. தமிழ்க் கவிதைகளில் குடும்ப வாழ்க்கை, மனித உறவுகள் பற்றிய சிந்தனைகள் பரக்கக் காணப்பெறுகின்றன. கால மாற்றங்களுக்கேற்ப கவிதைகளின் வடிவங்களில் மாற்றம் ஏற்பட்டாலும் உள்ளடக்கங்கள் மனித மனங்களின் வெளிப்பாடுகளில் பலவித பரிமாணங்களைக் காட்டத் தவறியதில்லை. உறவுகளில் முதன்மையானது தாயின் உறவுதான். மாதா, பிதா, குரு, தெய்வம் என்பதன் வரிசைப்பாடு தாய் உறவின் முதன்மை கருதியே கூறப்பட்டது. தாய்மை என்பதற்கு,

**பெண்மை ஈன்ற தாய்மை நிலையும்**
**தன்னலம் அறியாத் தாய்மை மனமும்**
**ஈன்ற குழவியை எடுத்து வளர்ப்பும்**
**வேலைக்குச் செல்லும் தாயின் நிலையெனக்**
**கூறிய பிறவும் தாய்மை ஆகும்[7].**

எனப் புதுக்கவிதை இலக்கணம் இலக்கணம் வரைகிறது.

தாய்மை என்பது மனித மன உணர்வுகளில் மிக உன்னதமான உணர்வாகும். வேறு எதனுடனும் ஒப்பிட இயலாத தனிச்சிறப்பு மிக்கது. தியாகமே உருவானது. தன்னலம் சிறிதும் இல்லாதது. தான் பெறும் அத்துணை இன்னல்களையும் புறந்தள்ளி,

தன் குழந்தையின் நலன் மட்டுமே நோக்காகக் கொண்ட ஒரு தாயின் உணர்வைக் கவிஞர்,

**தேம்பிய மகளின்**
**கண்ணீர் துடைத்தாள் அம்மா**
**அழுதுகொண்டே (த.மூ.க.ப.33)**

எனக் கூறுகிறார். அன்பின் பிறப்பிடமாகிய அன்னையின் கையில் கிடைத்த பழைய சோற்றுக்குக் கூட ருசி உண்டு என்பதை,

**அவ்வளவு ருசி**
**அம்மா பரிமாறிய**
**பழையசோறு. (த.மூ.க.ப.50)**

என்கிறார்.

**தந்தைமை**

வீட்டில் ஒரு பண்டிகை என்றாலே குதூகலம், கொண்டாட்டம், உற்சாகத்திற்குக் குறை இருக்காது. சிறுவர் முதல் பெரியவர் வரை உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க ஒருவர் மற்றவரிடம் அன்பு பாராட்டி மகிழ்வது வழக்கம். வீட்டிற்கு வந்தவர்கள், வராதவர்களின், வர இருப்பவரின் முகம் பார்க்க ஆவலுடன் காத்திருப்பர். இப்படியானதொரு பண்டிகைச் சூழலைக் கூறும் கவிஞர், அதில் ஒரு தந்தை எவ்வாறெல்லாம் அன்பு காட்டி வாழ்வின் அர்த்தம் புரிய வைத்தார் என்பதை மிக நேர்த்தியாக விளக்குகிறர்.

ஆண் பிள்ளைகள் பெற்றோருடன் வசிப்பதும் பெண்மக்கள் திருமணமாகிக் கணவன் இல்லத்தே சென்று தன் வாழ்வைத் தொடங்குவதும் நம் சமூக வழக்கம். ஆனாலும் பணி நிமித்தமாக ஆண்களும் கூட தன் மனைவி, பிள்ளைகளோடு வேற்றிடம் சென்று வசிப்பதும், அவ்வப்போது வந்து பெற்றோரைப் பார்த்து, சில நாட்கள் (விடுமுறையில்) அவர்களோடு இருந்து அவர்களின் அன்பைப் பெற்று, பேணி இருப்பதும் தற்போது வழக்கமாகிவிட்டது. அத்தகையதொரு சூழலைத்தான் கவிஞர் ‘என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து’ எனும் கவிதையில் புனைந்துள்ளார்.

**ஒவ்வொரு**
**பண்டிகையிலும்**
**அப்பா**

குதூகலமாய் இருப்பார்.
தனித்தனி
கூடுகளிலிருப்பவர்கள்
தாய்க் கூட்டிற்கு
வருவதை எதிர்பார்த்து
வாஞ்சையோடு
வாசலில் நிற்பார்.
ஒன்றாய் அமர்ந்து
உண்ணும் போது
உற்சாகமாயிருப்பார்.
பிள்ளைகள்
புத்தாடை அணிந்து
பவனி வருவதை
பெருமையோடு பார்ப்பார்.
குடும்ப மாநாட்டுத்
தலைமை ஏற்று
குழந்தையைப் போல்
துள்ளுவார்
சாதாரண நகைச்சுவைக்கும்
சத்தம் போட்டுச் சிரிப்பார்.
பெரிய குறும்புகளைக் கூட
பொறுமையோடு ரசிப்பார்.
கார் வாங்கிய
சேதி சொன்னால்
கர்வத்தோடு
அம்மாவைப் பார்ப்பார்.
பாசத்தில் நனைத்த
வார்த்தைகளால்
பக்குவமாய் அறிவுரைப்பார்.
இந்தநாள்
நீளாதா என்று ஏங்குவார்
அடுத்த பண்டிகை வரை

**அந்த நாளைப் பற்றியே**
**அம்மாவிடம் பேசுவார். (எ.ப.நா.பக்.15-16)**

என்பவர். தந்தையர் பெரும்பாலும் தன் மனத்தே பொதிந்துள்ள அன்பைக் குழந்தைகளிடம் வார்த்தைகளால் வெளிப்படுத்தும் தருணங்களைக் காட்டிலும் தமது வாஞ்சையான செயல்களாலேயே காட்டுவது வழக்கம். இதை,

**அப்பாவை நினைத்தபடி**
**வாசல்படியில்**
**அமர்ந்திருந்தேன்-**
**என்**
**பிள்ளைகள் வருகைக்காக (எ.ப.நா.ப.13)**

என்பதில் தன் தந்தையைப் போல தந்தையை நினைத்தபடியே தன் பிள்ளைகள் எப்போது வருவார்கள், என்று தான் காத்திருப்பதை உரைக்கிறார். வாழையடிவாழையாகத் தந்தையர்தம் மனநிலையை இக்கவிதை விளக்கும்.

**மக்கட்செல்வம்**

குழந்தையை ஒரு செல்வமாகக் கருதுவது தமிழர்களின் மரபு. தம் மக்களே தமது பொருள் என்ற உயரிய எண்ணம் தமிழ் நிலத்தில் ஆழப் பதிந்து உள்ளது.

**மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு[8].**

என்பது வள்ளுவம். மனிதகுல வளர்ச்சிக்கும் சமூகப் பெருக்கத்திற்கும் குழந்தையே அடிப்படையானது. வாழ்க்கையில் அனைத்துச் செல்வங்களையும் பெற்று இருந்தாலும் குழந்தைப்பேறு முதன்மையானதாகப் போற்றப்பெறும். ஆகவே வாழ்க்கையின் பயன்களில் மக்கட்பேறும் ஒன்று என்பது புலனாகிறது. சங்க காலத்து மக்கள் இம்மை வாழ்வின் மகிழ்ச்சிக்கும் மறுமை வாழ்வின் உயர்வுக்கும் குழந்தைச் செல்வமே இன்றியமையாதது எனக் கொண்டதை,

**இம்மை உலகத்து இசையொடு விளங்கி**
**மறுமை உலகமும் மறுவின்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோ ரெனப்**
**பல்லோர் கூறிய பழமொழி[9]**

என்னும் அகநானூற்றுப் பாடலால் அறியலாம்.

இங்ஙனம் பெறற்கரிய செல்வமாகிய குழந்தைச் செல்வத்தைப் பயந்த மகளிர், பணிக்குச் செல்லும் நிலையில் குழந்தையைப் பார்த்துக் கொள்ள பணிப்பெண்டிரை அமர்த்துவது, பெருநகரங்களில் காப்பகங்களில் குழந்தையை விடுவது போன்றவை உள்ளன. இத்தகைய சூழலில் உள்ள குழந்தையின் உணர்வைக் கவிஞர்,

**ஆயாவின் மடியில்**
**உறங்கும் குழந்தை**
**கனவில் அம்மா (மு.பூ.ரோ.ப.63)**

எனப் பாடுவர்.

குழந்தைக்குச் சோறூட்டுவதில் அன்னையின் பங்கை விட அமுதைப் பொழியும் நிலவின் பங்கே அதிகம் எனலாம். குழந்தையை மகிழ்வூட்டி, கதைகள் கூறி, வேடிக்கை காட்டி உணவை உண்ணச் செய்யும் சவாலான பணியில் அன்னையருக்கு மிக அனுக்கத் தொண்டன் நிலவாகும். வானில் நிலவின்மையால் குழந்தை சாப்பிட மறுத்ததை,

**அன்று குழந்தை**
**அதிகம் சாப்பிடவில்லை**
**…..அமாவாசை (மு.பூ.ரோ.ப.67)**

என்று காட்சிப்படுத்துவர். வானில் நிலவு இல்லா நாளாகிய அமாவாசையைக் கவிஞர்கள் பல்வேறு விதமாகப் பாடியுள்ளனர். பெண்கவிஞர் மித்ரா, இத்தனை கவிஞர்கள் சுரண்டினால் ஏன் வராது அமாவாசை என்று கேள்விக்குள்ளாக்குவர். கவிஞரோ நிலவை அழகியல் நிலையில் பார்க்காமல் குழந்தையின் உணர்வியல் நிலையில் பார்ப்பது குறிப்பிடத்தக்கது.

நமக்கு மிக நெருக்கமானவர்களின் அன்பு, அவர்களின் குரல், அருகாமை மற்றும் அவர்கள் அருகில் இருந்தாலே போதும் என்ற மிக நுணுக்கமான ஒரு தேடல் இவையெல்லாம் அன்பின் அடையாளங்கள். பிறர் தன்னைத் தொட்டுத் தூக்கினாலே அழும் குழந்தை அன்னையின் அரவணைப்பில் அப்படியே அடங்கிப் போவதும் அவ்வகை அதிசயம். இந்த மெல்லிய உணர்வை, குழந்தையின் அனைத்து நிலைகளிலும், உணர்வுகளிலும் அம்மாவின் பங்களிப்பை அவர்களின் கல்விசார் நலனில் தாயின் அக்கறையை, சான்றோன் எனக் கேட்பதில் ஆன்ற இன்பம் பெறும் மகிழ்வினை,

**மழலைகளின்**

**வகுப்பறையில்**

**அம்மாவின் நறுமணங்கள் (மு.பூ.ரோ.ப.80)**

என்று மனம் நெகிழ்ந்து பாடுகிறார்.

குழந்தைகளின் ஒவ்வொரு அசைவும் பெற்றோருக்கு இன்பம் பயக்கும். அவர்களின் ஒவ்வொரு செயல்களையும் கவனித்து, அனுபவித்து, இன்பம் கொள்ளும் நிலையினை,

**சுவரெங்கும் கிறுக்கல்கள்**

**புரியவில்லை**

**குழந்தையின் கவிதைகள் (மு.பூ.ரோ.ப.30)**

என்று பாடி மகிழ்கிறார். வான்புகழ் வள்ளுவர் குழந்தை முதலில் பேசத் தொடங்கும் மழலை மொழியில் மனம் பறிகொடுத்தது போல் கவிஞர் குழந்தையின் தொடக்கக் காலக் கிறுக்கல்களை கவிதைகள் என்கிறார்.

மழலை இன்பம் கண்ட கவிஞர், குழந்தைகள் விளையாடும் நிலை கண்டு மகிழ்ந்து,

**பட்டாம்பூச்சி**

**பிடித்துக் கொடுத்தேன்**

**இறக்கை முளைத்தது**

**மகளுக்கு (ம.கை.ப.61)**

என்று குழந்தையை மகிழ்விக்கும் ஒரு தந்தையைக் காட்சிப்படுத்துகிறார்.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்று கூறுவதுபோல, கொண்டாடி மகிழும் குழந்தைச் செல்வங்களைக் குடந்தையிலே நெருப்பு கொண்டோடிப் போக, செய்யும் நிலை அறியாது திகைத்ததை,

**குழந்தையும்**

**தெய்வமும்**

**ஒன்றென்றார்கள்.**

**குடந்தையில்**

**தெய்வங்களுக்கு**

**தீபத்தையும்**

**குழந்தைகளுக்கு**
**நெருப்பையும்**
**காண்பித்தார்களே!**
**குழந்தையை**
**செல்வம்**
**என்றார்கள்.**
**கோயில்கள் நகரத்தில்**
**எங்கள் செல்வங்கள்**
**கொள்ளை போய் விட்டனவே!**
**குழந்தையை**
**தங்கம்**
**என்றார்கள்**
**அக்கினியில் நனைத்துப்**
**புடம் போட்டுப்**
**பார்த்தனரே!**
**குழந்தை மொழியைக்**
**குழல் என்றார்கள்**
**யாழ் என்றார்கள்.**
**அந்தக்**
**கதறல் குரல்களுக்கு**
**எந்தக் கவிதையும்**
**உவமை கூற முடியாதே! (பொ.பெ.ம.பக்.37-38)**

எனக் கவனக்குறைவாகப் பணியாற்றி, கடமையாற்றத் தவறியவர்களைக் கேள்விக் கணையால் துளைக்கிறார். குழந்தைச் செல்வங்களை நெருப்பிற்குக் காவு கொடுத்துவிட்டு உலா வருபவர்களைக் கண்டித்து,

**கொடுமையிலும்**
**கொடுமைதான்**
**சிரிக்க வேண்டியவர்கள்**
**செத்துப் போனதும்**
**எரிக்க வேண்டியவர்கள்**
**உயிரோடு இருப்பதும் (பொ.பெ.ம.ப.37)**

என மனம் கொதிக்கிறார்.

உண்மையாக, வெள்ளை மனதுடன் சிரிப்பவர்கள் குழந்தைகள்தான். கள்ளமில்லா வெள்ளைச் சிரிப்பிற்குச் சொந்தக்காரர்களான குழந்தைகளிடத்தில் மட்டும்தான் பூவைப்போல மலர்கிறது சிரிப்பு. மற்றவர்கள் அதைத் தயாரிக்கிறார்கள் (த.மூ.க.ப.116) என்கிறார்.

மானுட வாழ்வில் இன்ப துன்பங்கள் நாணயத்தின் இருபக்கங்கள் போன்றவை. இவற்றுள் நமது அன்றாட வாழ்வில் பெறும் அனுபவங்கள் நம்மை அடுத்த நாள் பயணத்தைச் செம்மையாக்க உதவுபவை. நமது துன்பங்களை மறக்க, நம்மோடு உறவாட, இன்பத்தைப் பெருக்க வந்த இறைத் தூதர்களே குழந்தைகள். மழலையின்பம் காணாத உள்ளம் சூனியமாகிவிடும். இதனைக் கவிஞர்

**குழந்தைகள் இல்லாத உலகில்**
**பூக்கள் மலர்வதில்லை**
**குழந்தைகள் இல்லாத ஊர்களில்**
**புல்லாங்குழல் இசைப்பது இல்லை (க.ந.கா.ப.76)**

எனக்கூறி வாழ்வின் நறுமணமும் நல்லிசையும் குழந்தைகளே என்கிறார். ‘போட்ட கோலத்தை அழிக்கத்தான் பிள்ளை’ என்ற பேச்சு வழக்கினை மிக அழகாக,

**கிழிக்கப்படாத புத்தகங்கள்**
**கலைக்கப்படாத வரவேற்பறைகள்**
**ஒட்ட வைக்கப்படாத ரிமோட் கண்ட்ரோல்**
**இவையெல்லாம் குழந்தைகள் இல்லாத**
**இடங்களின் அடையாளங்கள் (க.ந.கா.ப.77-78)**

என்று பாடுகிறார்.

எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கையிலே; பின் அது நல்லவராவதும் தீயவராவதும் பெற்றோர் வளர்ப்பினில்தான். இவ்வுண்மையைக் கவிஞர்,

**வீட்டில் இருந்துகொண்டே**
**இல்லை என்று**
**சொல்லச் சொன்னோம்.**
**குழந்தைகள்**
**பொய் சொல்லக் கற்றுக் கொண்டார்கள்.**

**எல்லாம் செய்துவிட்டு**
**இப்போதெல்லாம்**
**குழந்தைகளே சரியில்லை என்று**
**குற்றம் சுமத்துகிறோம். (க.ந.கா.ப.80-81)**

என்றுரைப்பர். மழைத்துளி தூய்மையானது தான் அது விழுமிடத்தைப் பொறுத்து நிறம் மாறுவதைப் போலக் குழந்தைகளும் வளரும் விதத்தைப் பொறுத்தே வாழ்வில் உயர்வதும், தாழ்வதும் நிகழும் என்பதை மிக நேர்த்தியாக எடுத்துரைக்கிறார்.

பலூன்களில் அடைபட்டுள்ள காற்றைப் பார்த்து

**காற்றே!**
**சுதந்திரமாகச்**
**சுற்றிக் கொண்டிருப்பது**
**நீ மட்டும் தான்**
**என்று நினைத்தேன்**
**அநியாயமாய் இப்படி**
**சின்ன குழந்தைகளிடமா சிறைப்பட்டுக் கிடப்பது? (த.மூ.க.ப.101)**

என்றுரைப்பது புதிய சிந்தனையாகும்.

திருமணம் எனும் வைபவத்தில் சிறகொடிந்த பறவையாய் மகள் தவிப்பதை, வரதட்சணை என்னும் அரக்கனின் கைகளில் சிக்கி மாண்டு போவதை மிக வருத்தத்துடன், கவிதைப் படுத்தியுள்ளார்.

கவிஞனின் படைப்புகளான கவிதைகள் சமுதாயத்தைப் புரட்டிப் போடும் சக்தி வாய்ந்தவை. அவ்வகையில் கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதை,

**பூமிப்பந்தைப் புரட்டிப்போடும்**
**ஒரு நெம்புகோல் கவிதை**
**பூமியை ஏன் புரட்ட வேண்டும்**
**பூமியிலிருந்து**
**பொய்யையும் புரட்டையும்**
**முதலில் விரட்ட வேண்டும்**
**பூமியை மலர்த்தவேண்டும்**
**பூமியை மலர்த்த எவரால் இயலும்**
**குழந்தைகளால் இயலும். (அ.வா.வி.எ.நி.ப.187-190)**

என்னும் கவிதை சமூக மாற்றத்தை எதிலிருந்து யார் தொடங்க வேண்டும் என்பதை விதந்து உரைக்கின்றது.

**கருப்புக் கொடி பிடித்து**
**கலவர பூமியாக இருக்கும்**
**பல வீடுகளில்**
**குழந்தைகள் தான்**
**வெள்ளைக்கொடி பிடித்து**
**விவாகரத்துக்களைத்**
**தவிர்க்கிறார்கள்**
**மருந்துகளால்**
**தீர்க்க முடியாத**
**நம் சோகங்களை**
**குழந்தைகள்தான்**
**ஒரு புன்னகையில்**
**விரட்டி விடுகிறார்கள்**
**குழந்தைகளைப் போற்றினால்**
**அவர்கள் மாற்றுவார்கள்**
**பூமியை! (அ.வா.வி.எ.நி.ப.190)**

என்னும் கவிதை நாட்டில் மட்டுமல்ல வீட்டிலும் மாற்றங்கள் செய்யவல்ல சக்திகள் படைத்தவர்கள் குழந்தைகள்; FLk;gk; vd;Dk; tz;b cUs;tjw;F mr;rhzpaha; ,Ug;gth;fs; Foe;ijfs; vd;gij ed;F vLj;Jiuf;fpd;wJ.

**பறக்கட்டும் பட்டாம்பூச்சிகளும்**:

சிறுவர்களின் விளையாட்டுகளில் ஒன்று பறக்கும் பூச்சிகளை விரட்டிப் பிடித்து விளையாடுவது. ஈசல், பட்டாம்பூச்சி போன்றவற்றைப் பிடித்து, அவற்றின் சிறகுகளைக் கையில் பிடித்துக் கொண்டு அவற்றைப் பறக்க விடாமல் கையில் வைத்து விளையாடுவது சிறுவர்களின் வீர விளையாட்டு. இத்தகு குழந்தைகளைப் பார்த்து,

**விட்டு விடுங்கள் சிறுவர்களே**
**விளையாடட்டும்**
**பட்டாம்பூச்சிகளும் (மு.பூ.ரோ.ப.70)**

எனப் பிற உயிர்களின் நேசகராக மாறி உயிரினங்களை அதனதன் போக்கில் விடுத்து அவற்றுக்குத் தீங்கு விளைவிக்காமல் இருப்பதே மாந்தர் கடன் என்று உரைக்கின்றார்.

**வாழும் முறை**

நாம் வாழும் இவ்வாழ்க்கை நிலையானது அல்ல என்பதைப் பல கவிஞர்களும் சித்தர்களும் பாடியுள்ளனர். திருவள்ளுவரும்

**நெருநல் உளனொருவன் இன்றில்லை எனும்**
**பெருமை உடைத்து இவ்வுலகு**[10]

என நிலையாமையை உணர்த்துகிறார். வாழ்வில் கடந்த காலம் என்பது களைப்பை உண்டாக்குவது. எதிர்காலம் என்பது எதிர்பார்ப்பில் ஏங்குவது. ஆனால் நிகழ்காலம் மட்டுமே கையிலுள்ள கனி போன்றது. அதைச் சுவைத்துச் சுவைத்து இனிமை காண்பது அரியதொரு கலை. இக்கால கட்டத்தில் நாம் அனுபவிக்க வேண்டிய விஷயங்களை அனுபவித்து இந்த நேரத்தைப் பயனுள்ளதாக்க வேண்டும். இதனை ஒரு இளமைத் துள்ளலோடு சில சிறிய கட்டளைகளாகவே பிறப்பிக்கிறார் கவிஞர்.

**கோடைகளை**
**வசந்தமாக்கு**
**அனைத்தையும்**
**அனுபவி**
**நினைவிருக்கட்டும்**
**நிகழ்காலம் மட்டுமே**
**ஒளிமயமானது (த.மூ.க.ப.71)**

என்று வாழும்முறை குறித்து உரைக்கிறார்.

ஒருவர் வாழும் காலத்தில் அவர்களைக் கண்டு கொள்ளாத மனிதர்கள் அவர்கள் இறந்த பிறகு அழுது புலம்பிப் புகழ்வதை,

**அதிரும் பறை ஒலியும்**
**mjph; Ntl;Lr; rj;jq;fSk;**
**அருகிருப்போர் புகழுரையும் கேட்டு**
**சிரித்துக் கொண்டார்**

**செத்துக் கிடந்த**
**தாத்தா (எ.ப.நா.ப.31)**

என்றுரைப்பர்.

**சிக்னல் விழுந்தவுடன்**
**சீறிப் பாய்ந்தார்கள்**
**அடுத்த சிக்னலில்**
**காத்திருக்க (எ.ப.நா.ப.74)**

என்றும் விழா நேரங்களில் வந்தவர்களை வரவேற்க பொம்மைகள், பன்னீர் தெளிக்க இயந்திரம், பரிமாறிட ப∴பே முறை, நன்றி சொல்லும் பேனர்கள் என மனிதம் தொலைத்த செயற்கை வாழ்வு கண்டு மனம் பதைத்து,

**என்ன செய்யப்போகிறோம்**
**வாழத் தெரியாத**
**இந்த வாழ்க்கையை…! (எ.ப.நா.ப.40)**

என மலைக்கிறார் கவிஞர்.

தருமத்தைக் கவ்வும் சூது வாழ்க்கையில் தப்பித்து, ஒரு நல்ல வாழ்க்கையை வாழ, நல்லவன் என்று நாலு பேர் சொல்ல வாழ்ந்திட, இந்த உலகில் படுகின்ற, படவேண்டிய துயரங்களை,

**நல்லவன் என்று**
**நாலுபேர் சொல்ல**
**படாத பாடு**
**படவேண்டியிருக்கிறது (எ.ப.நா.ப.80)**

என்று வருந்துகிறார் கவிஞர். மேலும் அநியாயம் செய்பவர்கள் நிலைத்து வாழ்வதையும் நல்லவர்களாய் வாழ்பவர்கள் இளவயதிலேயே இறப்பினைச் சந்திப்பதையும் எந்த வகையில் ஏற்றுக் கொள்வது என வினவுபவராய்,

**தீயோர்க்கு வாழ்வு நீடிக்கிறது**
**நல்லோர்க்கு மரணம் சமீபிக்கிறது**
**மற்றபடி அனைவரும்**
**மத்தியில் இருப்போரே! (எ.ப.நா.ப.71)**

என வாழ்வின் இழப்பில், இருப்பில் உள்ள வித்தியாசங்களால் வியப்பைக் காட்டுகிறார். நல்லோர் நலிவதும் அல்லோர் வாழ்வதும் ஆன சூழல்களின் காரணம் புதிராகவே காணப்படுவதை மிக எளிமையாக எடுத்துரைக்கிறார்.

**உறவில் விரிசல்**

தேவகோட்டையில் நிகழ்ந்த கந்தசஷ்டி விழாவில், 'காகிதம் ஒரு ஆயுதம்' என்ற தலைப்பில், கவிஞர் 'பத்திரம்' பற்றி எழுதிய கவிதையில்,

**பத்திரங்கள்**
**காகிதக்**
**கல்வெட்டுகள்**
**அன்றிருக்கும் பத்திரம்**
**ஒரு**
**அட்சய பாத்திரம் (க.ந.கா.ப.146)**

என்பவர். பத்திரங்களைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொண்டு, மனதில் பாசத்தைத் தொலைத்த நிலையை,

**பத்திரங்களைப்**
**பாதுகாத்துவிட்டு**
**தலைமுறைகளைத்**
**தொலைத்து விட்டோம்.**
**அந்தக் கூட்டைக்**
**கலைத்து விட்டோம்**
**பாகப்பிரிவினையின் போது**
**சொந்தச் சகோதரர்கள்**
**ஆயுதம் எடுப்பதெல்லாம்**
**இந்தக்**
**காகிதத்திற்காகத் தான் (க.ந.கா.ப.148)**

என்றும் பத்திரத்தால் சகோதரர்கள் மத்தியில் ஏற்படும் தகராறைப் பார்த்து,

**பத்திரமே**
**கண்ணீர் விடும் (க.ந.கா.ப.148)**

என்கிறார் கவிஞர். அசல் பத்திரங்களினால் இத்தகைய அவலங்கள் என்றால் இவை தவிரப் போலியாகத் தயார் செய்யப்படும் போலிப் பத்திரங்கள், உடையவனுக்கே தெரியாமல் வேறொருவனுக்கு மாற்றிவிடும் திருட்டுப் பத்திரங்கள், என பலவகையான பத்திரங்கள் இருப்பினும் இவை எல்லாவற்றையும் விட வித்தியாசமான ஒரு பத்திரம் உண்டு கடவுளுக்கும் நமக்கும் ஆன காலப் பத்திரம் (க.ந.கா.ப.152) என்று முடிக்கிறார்.

**நட்பு**

நட்பு என்பதற்கு "ஒத்த கருத்து, அன்பு, அக்கறை முதலியவற்றின் அடிப்படையில் உறவினர் அல்லாதவருடன் கொள்ளும் உறவு"[11] என 'க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி' பொருள் கூறுகின்றது. நட்பு, தோழமை என்பது இருவர் இடையேயோ, பலரிடமோ ஏற்படும் ஒரு உறவாகும். வயது, மொழி, இனம், நாடு என எந்த எல்லைகளும் இன்றி, புரிந்து கொள்ளுதலையும் அனுசரித்தலையும் அடிப்படையாகக் கொண்டது நட்பு. நண்பர்கள் தமக்குள் அனுசரிப்புத் தன்மையுடன், தங்களின் சுய விருப்பு, வெறுப்புகளை மறந்து ஒருவருக்கொருவர் உண்மையோடு, இன்ப துன்பங்களில் தானாகவே முன்வந்து உணர்வுகளைப் பகிர்ந்து கொள்வதே சிறந்த நட்பாகும்.

முகத்தில் சிரிப்பு; அகத்துள் வெறுப்பு என்று முகமூடியிட்டவர்கள் நண்பர்கள்போல் நடிப்பதால் மனம் வருந்திய கவிஞர்,

**நண்பர்களும்**
**நண்பர்கள் போலவும்**
**நிறையப் பேர்**
**எனக்கு (த.மூ.க.ப.27-28)**

என்று பாடுகிறார்.

மேலும் போலியாக உறவாடும் சிலரின் பொய்ம்மை கண்டு மனம் புழுங்கியவராய், எதிரிகளைப் பற்றிப் பயம் இல்லை; ஆனால் நண்பர்களை நினைத்தால்தான் அச்சமாக இருக்கிறது என்கிறார்.

நண்பர்களும் நண்பர்களைப் போலவும் நிறையப் பேர் எனக்கு என்று கூறுவது மிக ஆழமான கருத்துக் கொண்டது ஆகும். நண்பர்களைப் போல எனும் சொல்லாட்சியில் நண்பர்களாகப் பாசாங்கு செய்து போலி முகத்தைக் காட்டி

உண்மையிலேயே நட்பின்றிப் பழகும் செயற்கைத்தனம் விளக்கப்படுகிறது. வாயொன்று சொல்லும். ஆனால் மனம் ஒன்று நினைக்கும் மனிதர்கள் தான் இங்கு அதிகம். உள்ளும் புறமும் வேறாய் இருக்கும் வஞ்சகர்கள் அவர்களாகவே வந்து நம்மோடு கலந்து விடுவார்கள். நாம் அவர்களைத் தேடிப் போகவேண்டியதில்லை என்றுரைப்பர் (த.மூ.க.ப.29)

சில நேரங்களில் நாம் முன்னேற்றத்தை நோக்கிப் பயணிக்கும் போது நமது முயற்சியை விடவும் நம்மைக் காயப்படுத்திய எதிரிகளின் வார்த்தைகளே அதிக வலிமை உடையனவாய் ஆகி விடுகின்றன. சில அவமானங்கள், அவை தரும் வலிகள் நம்மைப் பெரியதொரு உதயத்திற்கு உற்சாகமாய் அழைத்துச் சென்றுவிடுகின்றன என்பதை,

**ஏணிப்படிகளில்**
**சில படிகள்**
**எதிரிகளால் ஆனவை. (பொ.பெ.ம.ப.25)**

என்றுரைக்கின்றார்.

உலக உயிர்களிலேயே சிந்தித்துச் செயல்படும் அறிவும், நன்மை தீமை வேறுபாடறிந்து நன்றின்பால் செல்லக்கூடிய பகுத்தறிவு பெற்ற ஒரே உயிரினம் மனித இனம் மட்டும்தான். மனிதனின் முழு நிறைவான வாழ்க்கை என்று எதைஎதையோ நாடி ஓடுகின்றான். ஆனால் அவை யாவுமே முழு நிறைவை அவனுக்கு வழங்கி விட்டதா என்பதை அவரவரே உணர்ந்து கொள்ள முடியும். மனிதர்களை மனிதர்களாக மதிப்பதுவே பல நேரங்களில் மறக்கப்பட்ட நிலையில் ஒவ்வொரு உயிரையும் உன்னதமாகப் பாவித்த நிலையினையே நம் பண்பாடு உணர்த்தி நிற்கிறது. முரசு கட்டிலில் ஏறிய புலவரைக் கவரி வீசித் தூங்க வைத்த மன்னன், உலகிற்கு உணர்த்தியது மனித நேயப் பண்பே ஆனால் இன்றைய மனிதனுள் மனிதநேயத்தைத் தொலைத்து, சகமனிதர்களிடம் அன்பின்றி வாழும் நிலையை,

**மனிதன்**
**பழகவே இல்லை**
**இன்னொரு**
**மனிதனிடம் (பொ.பெ.ம.33)**

என அங்கலாய்க்கிறார் கவிஞர். மேலும்,

**அர்த்த ராத்திரியில்**
**அப்படி ஒன்றும் பயமில்லை**
**பகல் வாழ்க்கையின்**
**பயங்களை விட (த.மூ.க.ப.75)**

என்பதும் இதோடு தொடர்புடையதே.

**இயந்திர உலகம்**

மரம் செழித்து வளர நல்ல நிலமும், நீரும் தேவை. அதுபோல், மனித வாழ்க்கை சிறக்க உறவுகளில் அன்பும் அரவணைப்பும் அவசியம் தேவை. இன்றைய உலகம் இயந்திரஉலகம். குடும்ப உறவுகளில் இருந்து விடுதலையாகி எல்லாவற்றிலிருந்தும் அன்னியமாகிக்கொண்டிருக்கிறது.

“அன்பின் வழியது உயிர்நிலை” என்றனர் நம் முன்னோர். ஆனால் இன்று தம்மைப் பெற்றவர்களையும் தம் வாழ்வின் வளர்ச்சிக்கு ஆதாரமாக இருந்தவர்களையும் பேணுவது கூட அரிதாகி வருகிறது. இதுமட்டுமன்றி அவர்களின் இறுதிக்காலகட்டங்களில் கூட உடனிருந்து பார்க்க முடியாத நிலையையும் மருத்துவரிடமே இறப்பைத் தள்ளிப்போடச் சொல்லிக் கேட்கும் ஒருபேரனது செயலை,

**ஒரு உதவி டாக்டர்!**
**பிள்ளைகளுக்குத் தேர்வு**
**எனக்கும் ஆடிட்டிங்**
**விடுமுறை நாள் வரைக்கும்**
**இழுத்துப் பார்க்க**
**இயலுமா? (த.மூ.க.ப.68)**

என்று தன்னுடைய சுயநலத்திற்காகத் தன் தாத்தாவின் இறுதி நாட்களைச் சற்றே நீட்டிக்க விண்ணப்பிக்கும் ஒரு பேரனின் மனோபாவம் இதில் நன்கு வெளிப்படுகிறது. இது இன்றைய வாழ்வின் அவசரநிலை மற்றும் அவல நிலையை எடுத்துரைக்கின்றது.

**தொலைக்காட்சி**

இன்றைய அவசரயுகத்தில் குடும்பத்தில் அன்பு என்பது கூட கேள்விக்குரியதாக உள்ளதை ‘இளைப்பாற்றி’ என்ற தலைப்பில்

**எல்லோரும் இருக்கிறார்கள்**
**ஆயினும்**

**வழியும் என் கண்ணீரை**
**ஒரு தென்றல் வந்து**
**வாங்கிப் போகும் (த.மூ.க.ப.48-49)**

என்று கூறி வெளிப்படுத்துகிறார். இயந்திரமயமான இவ்வுலக வாழ்க்கையில் மனிதர்கள் அன்பு, பாசம், கடந்து அலைபேசி, தொலைக்காட்சி என இயந்திரங்கள் பால் ஈர்ப்புடையவர்களாய் வாழ்கின்ற நிலையில் தொலைக்காட்சி பழுதடைந்தவுடன் இரு தினங்களாகத் தன் மனைவி மனம் விட்டுப் பேசுவதாகவும், தான் புத்தகங்கள் ஏராளமாகப் படித்ததாகவும், பிள்ளைகள் உணவு வேளை தவிர வீட்டிலேயே இருப்பதில்லை எனவும் ஆனால் நாளை பழுதுபார்ப்பவர் வந்தவுடன் பழைய வாழ்க்கை மீண்டும் தலைதூக்கும்; மனைவி பேசமாட்டாள். வேலைக்காரி பரபரப்பாள். பிள்ளைகள் இருந்த இடம் விட்டு நகர மாட்டார்கள் எனவும் வருந்துகிறார். (த.மூ.க.பக்.80-81)

**சின்னத்திரை - வண்ணத்திரை**

மக்களின் வாழ்வில் பெரிதும் இடம்பெற்ற இரண்டு சின்னத்திரையும் வண்ணத்திரையும். இவ்விரண்டின் இயல்பு குறித்து,

**சின்னத்திரை**
**வண்ணத் திரைக்காரர்களின்**
**முதியோர் இல்லம்**
**வண்ணத்திரை சின்னத்திரைக்காரர்களின்**
**கனவு இல்லம்**
**இங்கு விளம்பரங்கள்தான் ஓடுகின்றன**
**அங்கு விளம்பரங்களால் தான் ஓடுகின்றன**
**இது கண்ணீர் சுரக்கும் கிணறு**
**அது இரத்தம் மிதக்கும் கடல் (க.ந.கா.ப.122)**

என்று இருதிரைகள் குறித்த தனது பார்வையை முன்வைக்கிறார்.

**கைபேசி**

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தொலைதொடர்புக் கருவி கைபேசி. தொடக்கத்தில் தொலைபேசி அவரவர் இருப்பிடங்களில் மட்டும் வைத்து உபயோகப்படுத்தப்படுவதாய் இருந்தது. அதிலும் ஒருசிலரே தொலைபேசி வைத்திருந்தனர். அதில் ஒரு சுவாரசியம் இருந்தது. ஒருவருக்கு ஒருவர் தொலைவில்

உள்ள தமது உறவினர் மற்றும் நண்பர்களோடு அன்பைப் பரிமாறிக்கொள்ளும் தருணத்தை ஏற்படுத்தியது. ஆனால் தற்போது கைபேசி வந்ததன் பின் வீட்டிற்குள்ளேயே உள்ள கணவன்- மனைவி, பெற்றோர்-பிள்ளைகள் கூட தமக்குள் முகம் பார்த்துப் பேசும் பழக்கம் ஒழிந்து, புலனம் மூலம் வணக்கம் சொல்லிக் கொள்ளும் அளவிற்கு அது நம் அனைவரையும் ஆளும் சக்தியாய் மாறிவிட்டது. இந்நிலையை மூன்றாவது காதாய் கைபேசி முளைத்து விட்டது என்கிறார் கவிஞர். மேலும் ஒருகாலத்தில் பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என இருந்தது. இப்பொழுதே செல்லில்லார்க்கு இவ்வுலகம் இல்லை (பொ.பெ.ம.ப.68) என்பதே உண்மையாக உள்ளது என்கிறார்.

மேலும் இக்கைபேசிகளின் வரவால் கடிதம் எழுதுதல் இல்லாமல் போனதை,

**காலம் தொலைத்த**
**கலைகளுள்**
**கடிதக் கலை**
**கவலைக்குரியது (த.மூ.க.ப.65)**

எனக் கலங்குகிறார்.

**(ஈ)சமூகம்**

கவிஞன் ஒருவன் தான் வாழும் காலத்துப் பிரச்சினைகளை வெளிப்படுத்தும் ஆற்றல் உடையவன் ஆவான். அவ்வகையில் கவிஞர் தங்கம் மூர்த்தியும் தன்னைச் சுற்றி நிகழும் சமூக அவலங்களைத் தம் கவிதைகளில் பெரிதும் வெளிப்படுத்தியுள்ளார். சுதந்திரம் அடைந்து இத்தனை ஆண்டுகள் ஆகியும் இன்னும் வறுமையால் வாடும் மக்கள் இருப்பது குறித்து வருந்துகிறார் கவிஞர்.

‘தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் சகத்தினை அழித்திடுவோம்’ என்று பாரதி பாடி ஒரு நூற்றாண்டு கடந்த பின்னும் இன்று வரை பட்டினிச் சாவுகள் தவிர்க்க முடியாததாய் உள்ளது நாட்டின் அவலநிலை ஆகும். பணக்காரர்கள் மேன்மேலும் உயர்ந்து வளர்வதும் வறுமையில் வாடுபவனுக்கு வறுமை மட்டுமே எப்போதும் துணையாகத் தொடர்வதும் மாறாத நிலையாகிவிட்டது. உலகளவில் உள்ள பட்டினிச் சாவு கணக்கெடுப்பின்படி (GHI – Global Hunger Index) 0 புள்ளி எடுத்தால் நாட்டின் பட்டினிச்சாவு மிகக் குறைவு எனவும், 100 க்கும் மேற்பட்ட புள்ளிகள் பெற்றுள்ள நாடுகளில் பட்டினிச் சாவு எண்ணிக்கை மிக அதிகமாக உள்ளது எனவும்

அர்த்தமாகும். இந்தியா இக்குறியீட்டில் மொத்தமுள்ள 119 நாடுகளில் 103 வது இடத்தில் உள்ளது. இத்தகைய மிக மோசமான நிலையினைக் கவிஞர்,

**ஒளிர்கின்ற இந்தியாவில்**
**வளமான தமிழ்நாட்டில்**
**பட்டினி (பொ.பெ.ம.ப.51)**

என ஆதங்கப்படுவர். பசியால் வாடும் குழந்தைகளும், வறுமையில் வாடும் பாமரர்களும் அதிகாரத்தில் உள்ள ஆளும் வர்க்கத்தினால் கவனிக்கப்பட வேண்டியது அவசியம் என்பது கவிஞரின் எண்ணமாகும்.

இந்தியாவில் வாழும் அடித்தட்டு மக்களில் பலர் தமக்கென ஒரு வீடும் இன்றி, விலாசமும் இன்றி நடைபாதைகளைத் தமது முகவரியாக்கி வாழும் அவலத்தை,

**அவர்கள்**
**விசாலமான வீதிகளின்**
**முகவரிகள் (த.மூ.க.ப.84)**

என வலி மறைத்துக் கூறுகிறார். மேலும் அவர்கள் இந்தியன் என்ற பெயரோடு வாழ்ந்தாலும் பெயருக்குக் கூட ஒரு பொருளும் வாங்கப் பணம் இன்றி வாழும் பரிதாபத்தை,

**இந்தியனாய்**
**இருக்க முடிகிற அவர்களால்**
**இந்தியப் பொருட்களையெல்லாம்**
**வாங்க முடிவதில்லை (த.மூ.க.ப.84-85)**

என வருந்தியுரைக்கிறார். ஏழை மக்களின் அன்றாட வாழ்க்கையில் உணவும் இருப்பிடமுமாகிய அடிப்படைத் தேவைகள் கூடப் பூர்த்தி பெறாத நிலை கண்டு வருந்தும் கவிஞர்,

**அவர்கள்**
**நம் சுதந்திர தேசத்தின்**
**சோக நிழல்கள் (த.மூ.க.ப.85)**

என்கிறார்.

**ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**
**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று**[12]

என்பது ஆன்றோர் வாக்கு. அதிலும் கண்ணில்லாதவன் கையேந்தும் போது அதனை மறுத்துப் புறந்தள்ளுவது முற்றிலும் மனிதாபிமானமற்ற செயல். மக்களில் சிலர் இங்ஙனம் மனிதாபிமானம் இல்லாது இருப்பதைக்கண்டு,

**கண்ணில்லாதவர்**
**கையேந்தும் போது**
**நாமெல்லாம்**
**குருடர்கள் (த.மூ.க.ப.69)**

என அவர்களுக்கு உதவ வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகிறார். மேலும் பேருந்து நிலையங்களில் மற்றும் பல பொது இடங்களில் நாம் பிச்சை கேட்பவர்களை அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. ஏனென்றால் உடல் ஆரோக்கியமாக உள்ளவர்கள் கூடப் பிச்சை எடுப்பதைத் தம் தொழிலாகக் கொண்டிருப்பதும் ஒரு காரணம். சிறுவர் சிறுமியர் கூடச் சில சமயங்களில் பிச்சையெடுக்கும் அவலத்தை நாம் காண்கிறோம். இத்தகையவர்களுக்கு பிச்சை இடுவது அவர்தம் தவறினைத் தடுக்கும் செயலாகி விடும். ஆனால் அதே சமயம் முதியோர், ஊனமுற்றோர் போன்றவர்க்கு அவசியம் உதவ வேண்டும். அவர்களுக்குக் கொடுக்க மனமின்றி ஆனால் வீண் செலவு செய்வதற்குத் தயக்கமின்றி இருக்கும் மனோபாவம் கண்டிக்கத்தக்கது எனக் கவிஞர் கருதுகிறார் இதனை,

**ஏந்திய கையை**
**நிராகரித்து நாணயம்**
**எடை பார்க்கும்**
**இயந்திரத்தில்**
**விழுந்தது (த.மூ.க.ப.109)**

என தவறினைச் சுட்டிக் காட்டுகிறார்.

மனித வாழ்வின் அடிப்படைத் தேவை உணவு, உடை, உறையுள் ஆகியன. இவற்றுள்ளும் உடையும் தங்குமிடமும் பெறும் முக்கியத்துவத்தைக் காட்டிலும் உணவு என்பது மிக மிக அத்தியாவசியமானது என்பதை வலியுறுத்தவே ‘உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தாரே’ என்கிறது மணிமேகலை. உணவினை வழங்குபவர் இப்பிறப்பில் மட்டுமின்றி எப்பிறப்பில் மேன்மை பெறுவர் என்கிறது ஏலாதி.

பசியைப் பிணி என்றும் அப்பசி நீக்குபவரை மருத்துவன் என்றும் ‘பசிப்பிணி மருத்துவன் இல்லம்’[13] எனப் புறநானூறு கூறுவதிலிருந்து அதன் இன்றியமையாமை புலப்படும். பெரியவர்கள் மட்டுமன்றி குழந்தைகளும் பட்டினியால் வாடுவதை,

**பசியால் குழந்தை கதறும் தாய்ப்**
**பாலின்றி தாலாட்டுச் சிதறும் (த.மூ.க.ப.29)**

எனக் காட்சிப்படுத்துவர்.

**ahUkw;w mt;tputpy;**
**mghh;l;nkd;l; tpsk;gu gpsf;ir**
**fpopj;Jf;nfhz;bUf;fpwhd;**
**xOFk; Fbirapd; $iuf;nfd. (Nj.Nj.g. 63)**

vd;Dk; ftpijAk; tWikiag; NgRtNj.

**gpr;irf;fhuh;fs;**

ஆலயம் என்பது இறைவனை வழிபடுவதற்கு உரிய இடம். ஆனால் அதன் வாசலில் இருபுறமும் வறியவர்கள் அமர்ந்திருந்து கையேந்துவது இச்சமூகத்தின் அவல நிலை. அவ்வாறு அமர்ந்திருப்பவர்கள் ஒருபோதும் உள்ளே இருக்கும் இறைவனைத் தொழுது ‘சாமி’ என்று அழைக்கவே இல்லை. அச்சாமியை வழிபடப்போகும் ஆசாமிகளையே சாமி என்று அழைக்கிறார்கள் வறுமை இங்ஙனம் சுயமரியாதை இன்றி பிறரிடம் கையேந்தும் நிலைக்கு ஆளாக்கியுள்ளது என ஆதங்கப்படுகிறார்.

பெண்ணின் பெருமை பலவாறு பேசப்பட்டாலும் கல்வி என்பது இன்றும் சில பெண்களுக்கு எட்டாக்கனியாகவே உள்ளதை, வாகனங்களுக்கு எரிபொருள் நிரம்பும் (பெட்ரோல்) பணியில் உள்ள பெண்ணின் மூலம் விளக்குகிறார்.

**பள்ளிச் சீருடை**
**நிறத்திலேயே**
**ஒரு**
**பணிச் சீருடை.**
**புத்தகப்பை**
**தாங்கும் தோளில்**
**ஒரு**

**பணப்பை.**
**மேயும்**
**கண்களைத்**
**தவிர்த்தபடி**
**வேலைக்கவனம்.**
**வகுப்பறையில்**
**அமர வைக்கத் தவறி**
**நெருப்பறையில்**
**நிற்க வைத்த**
**வறுமை.**
**ஒருநாள்**
**விடுமுறை எடுத்தாலும்**
**திணறிப் போகும்**
**குடும்ப வாகனம்.**
**எழுதிக்கொண்டிருக்கும்போதே**
**அலங்காரமற்ற**
**அவளிடம்போய்**
**அடைக்கலமானது**
**கவிதை.**
**பெட்ரோல் எரிச்சலால்**
**சிவந்திருந்தன**
**அவளது கண்கள்.**
**அழுதிருந்ததால்**
**சிவந்திருந்தது**
**என் கவிதை. (எ.ப.நா.பக்.42-43)**

என்று கூறி வருந்துகிறார்.

**கொத்தனாரை விட**
**குறைவான கூலி தான்**
**பெண் என்றால்**
**Payயும் இரங்கும் (பொ.பெ.ம.ப.45)**

என்பதில் பணியில் பாகுபாடு இல்லாவிடினும் பெண்களுக்குக் கூலியில் பாகுபாடு இருப்பதை எடுத்துரைக்கின்றார்.

**முதல் தேதி**
**புன்னகையை**
**மளிகைக்கடையில்**
**விட்டுவிட்டேன். (மு.பூ.ரோ.ப.38)**

என்பதில் ஊதியப் பற்றாக்குறை விளக்கப் பெறுகிறது.

**கையூட்டு**

சமூகம் முன்னேறுவதற்குத் தடையாய் இருப்பது ஒவ்வொரு இடத்திலும் வாங்கப்பெறும் கையூட்டுத் தொகை. எந்த ஒரு அலுவலகத்திலும் தேவையான சான்றிதழ் பெறுவதாயினும் அரசாங்க உதவிகள் பெறுவதாயினும் தனியார், பொது நிறுவனங்களில் பொதுவாக எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பது கையூட்டு எனப்படும் பெருந்தொற்று நோயாகும். பெரும்பாலும் சிலர் அரசாங்க வேலையைப் பொருள் கொடுத்தேனும் பெறுவதன் காரணமே ஊதியம் மட்டுமன்றி பிறவழிகளில் கிடைக்கும் மேல் வருமானத்திற்காகத்தான். இதனை உணர்த்துபவராய்,

**நான்கு கால்களும்**
**பல கைகளுமாய்**
**அரசாங்க மேசைகள் (ம.கை.ப.51)**

என அரசாங்க மேசைகளுக்குப் புதுவடிவம் காட்டுகிறார்.

‘கரம் சிரம் புறம் நீட்டாதீர்’ எனப் பேருந்தில் காணப்படும் அறிவிப்பு அங்கே மட்டுமல்லாமல், அலுவலகங்களுக்கும் தேவை என்பதை,

**“கைகளை**
**வெளியே நீட்டாதீர்கள்”**
**அறிவிப்புப் பலகை**
**அவசியம் -**
**பேருந்துகளில் மட்டுமல்ல**
**அரசாங்க அலுவலகங்களிலும் (த.மூ.க.ப. 103)**

என்றுரைத்து கையூட்டு ஒழிக்கப்பட வேண்டிய இடங்களாக அரசாங்க அலுவலகங்கள் திகழும் அவலத்தை எடுத்துரைக்கிறார்.

eha;fisg; gw;wpa ftpijapy; kdpjh;fs; jd;dplk; ele;J nfhs;Sk; Kiwgw;wp>

**eha;fisg; gw;wpa**
**ftpijfs; ngUk;ghYk;**
**eha;fisg; gw;wpajha;**
**,Ug;gjpy;iy.**

**MdhypJ**
**mryha;**
**eha;fisg; gw;wpa**
**ftpijjhd;.**

**vq;fs; njUtpy;**
**Ntiyntl;bapd;wpj;**
**jphpfpd;wd**
**gy eha;fs;.**

**vd; fhh; fle;jhy;**
**Fiuf;fpd;wd.**

**vd; Mil fz;L**
**Kiwf;fpd;wd.**

**vid ehbtUNthh;f;F**
**,ilA+W nra;fpd;wd.**

**vd; vYk;Gj; Jz;Lfisf;**
**fbj;J**
**vd;idNa fbf;f**
**Kidfpd;wd.**

**mt;top nry;Yk;**
**ngl;il eha;fis**

**fhk vr;rpnyhL**
**gpd; njhlh;fpd;wd.**

**eha;fNshL thoTk;**
**gofpf;nfhs;s Ntz;bapUf;fpwJ.**

**eha;fisg;  gw;wpa**
**ftpijfs; ngUk;ghYk;**
**eha;fisg; gw;wpajha;**
**,Ug;gjpy;iy.**

**குரைக்கின்றன**
**நாய்கள்**
**நிலவைப் பார்த்தும் (பொ.பெ.ம.ப.43)**

என்று உரைக்கின்றார். மற்றோரு கவிதையிலும்

**பிஸ்கட்டுகளுக்கும்**
**எலும்புத் துண்டுகளுக்கும்**
**அடிபணியாத நாய்களை**
**எங்கணும் நான் கண்டதில்லை (எ.ப.நா.ப.35)**

என்று அங்கதமாக உரைக்கின்றார். இக்கவிதைகளின் மேலோட்டப் பொருள் நாயாக இருந்தாலும் தன் தெருவில் வசிக்கும் சக மனிதர்களையும் இலஞ்சம் வாங்கும் மனிதர்களையுமே இதில் குறிப்பிடுகிறார்.

**சுகாதாரம்**

நாட்டில் சுகாதாரக் கேடு என்பது எல்லா இடங்களிலும் வியாபித்து இருப்பதை ஆங்காங்கே ஈக்கள் மொய்ப்பது, நினைத்த இடத்தில் எச்சில் துப்புவது, குடித்த வெண்குழல் வத்திகளை அணைக்காமல் அப்படியே வீசுவது, பள்ளத்தில் தேங்கிய அழுக்கு நீரை நடப்பவர்களின் ஆடையில் தெளிக்கும் அரசுப் பேருந்து என்பன போன்றவற்றைக் கவிதைகளில் காட்டும் கவிஞர்,

**சுத்தமாய் இருக்க முடியாதா**
**இந்தச்**
**சுதந்திர பூமியில் (த.மூ.க.ப.88)**

என்று கேள்விக்கணை தொடுக்கிறார்.

பொதுவாக வீடுகளில் நாய்களை வளர்ப்பவர் இல்லங்களில் நாய்கள் ஜாக்கிரதை என்ற பலகை காணப்படும். ஆனால் கவிஞரின் பார்வையிலோ இந்தப் பலகை வேறு பல இடங்களிலும் இடம்பெற வேண்டியது அவசியம் என்கிறார்.

அரசியலில் அதிகாரத்தைக் கையில் வைத்துக்கொண்டு, அலுவலகங்களில் அதிகாரிகளைச் செயல்படவிடாமல் அவர்களின் கைகளைக் கட்டி வைத்து அதிகார துஷ்பிரயோகம் நடக்கும் இடத்திலும் பெண்கள் செல்லும் பேருந்துகளில் அவர்களின் சுதந்திரத்தை ஒடுக்கும் விதமாக அவர்களைப் பாலியல் துன்பத்திற்கு ஆளாக்கும் சில அறிவற்ற மூடர்கள் பிரயாணம் செய்யும் இடங்களிலும் 'நாய்கள் ஜாக்கிரதை' பலகை அவசியம் வேண்டும் என்கிறார்.

சிலரது உண்மையான முகம் தெரிந்திருந்தும் கூட, அவர்களின் பலம் ஒன்றே கருத்தில்கொண்டு அவர்களைத் தட்டிக் கேட்கும் திறன் இல்லாதவர்களாய் அவர்களின் பின்னே செல்லும் சில காரியவாதிகளின் கழுத்தில் இந்தப் பலகையை மாட்டலாம் எனக் கருத்துத் தெரிவிக்கிறார். மேலும்

**வெறி பிடித்து**
**யாரையேனும் கடித்துக் குதற**
**அலைந்து திரிவதால்**
**அயோத்தியின் அக்கம்பக்கம்**
**அவசியம் மாட்டவேண்டும். (த.மூ.க.ப.114)**

என்றுரைப்பது அவரின் பரந்துபட்ட சமூகப்பார்வைக்குச் சிறந்த சான்றுகளாகும்.

மனிதரின் மனம் எளிதில் வசப்படுவது பெரும்பாலும் போலிகளுக்கும் புனைந்துரைகளுக்கும் தான். இதில் பரிதாபம் என்னவென்றால் அசல் தன் அடையாளம் தொலைந்து அவதிப்படுவதுதான். இதனை,

**அரிதாரங்களின்**
**இரைச்சலில்**
**சிக்கித் தவிக்கிறது**
**அசல். (ம.கை.ப.89)**

என்கிறார் கவிஞர். மேலும் போலி ஆடம்பரம், புகழுரைகள் இவையெல்லாம் மிகுந்த பொலிவுடன் காணப்பட்டாலும் அவை நிரந்தரமற்றவை என்பதை மனிதன்

உணர்வதற்குச் சற்று காலம் பிடிக்கிறது. அதற்கிடையில் மனிதன் தன் உடல் ஆற்றல், மன ஊக்கம் இவற்றைத் தொலைக்க நேரிட்டால், உண்மையை உணர்ந்தாலும் கூட அதன் நன்மையை அடைய இயலாமல் போய்விடும். இதனை,

**நகல்களுக்கு எப்போதும்**
**நாற்காலி கிடைக்கிறது**
**அசல்கள் பாவம்**
**வாசல் வரைதான் (த.மூ.க.ப.98)**

எனப் பாடுகிறார்.

**நதி மாசு**

நதிகளை மாசுபடுத்தக்கூடாது என்பதை,

**எச்சில் துப்பாதீர்**
**தாகத்துடன் நதி வரும்**
**பறவைகள். (த.மூ.க.ப.45)**

என்னும் கவிதையின்வழி எடுத்துரைக்கிறார்.

**ஈக்கள்**

ஈக்கள் எனும் மூவறிவு உயிரினங்கள் கூட இயல்பாய் வாழும் நிலையில் மனிதன் மட்டும் சகமனிதர்களுடன் பகை கொண்டு வாழும் நிலையை,

**பகை கொள்வதில்லை**
**பழக்கடை ஈக்களும்**
**சாக்கடை ஈக்களும் (பொ.பெ.ம.ப.31)**

என எடுத்துரைப்பார்.

**மருத்துவமனை**

ஆரோக்கியத்தின் இருப்பிடமாய் இருக்கவேண்டிய மருத்துவமனைகள் கொசுக்களின் புகலிடமாய், கழிவுநீர் செல்லப் பாதைகள் இல்லாமல் நோய்களின் பிறப்பிடமாக சுகாதாரமின்றிக் காணப்படுவது வழக்கமாகி விட்டது. அதிலும் அரசு மருத்துவமனையில் நோய்த் தொற்று ஏற்படாதிருக்கக் கிருமிநாசினிகள் தெளிப்பது,

சுகாதாரமான முறையில் மருத்துவ உபகரணங்களைக் கையாள்வது குறித்த விழிப்புணர்வுகள் மேம்படுத்தப்பட வேண்டும் என்பதை அங்கதமாக,

**நோய்களின் சொர்க்கம்**
**நோயாளிகளின் நரகம்**
**மருத்துவமனை (பொ.பெ.ம.ப.47)**

என்கிறார். மேலும், ஆரோக்கியத்தைப் பேணவேண்டிய மருத்துவமனைகள் கொசுக்களின் கூடாரமாய் மாறிவிட்டதை,

**மருத்துவமனையில்**
**ஆரோக்கியமாய்**
**கொசுக்கள் (மு.பூ.ரோ.ப.46)**

எனக் குறிப்பிடுகிறார்.

**வேலைவாய்ப்பின்மை**

படித்து முடித்ததும் வேலையைப் பெறுவது மிகக் கடினமான ஒன்றாக இன்று உள்ளது. அதிலும் உத்தரவாதமான பணியாகக் கருதப்படும் அரசாங்கப் பணியைப் பெறுவதில் அனைவரும் முயன்றாலும் அவ்வாறு அரசாங்கப் பணியைப் பெறுவது என்பது அரிதான ஒன்றே. மாவட்ட வேலைவாய்ப்பகங்களிலும் மாநில வேலைவாய்ப்பகங்களிலும் பதிவு செய்திருந்தாலும் பணி வாய்ப்பு குதிரைக்கொம்பே. இதனை நகையுணர்வுடன்

**வேலைவாய்ப்பகங்களில்**
**வாய்ப்பளிக்கிறார்கள்**
**புதுப்பிக்க (த.மூ.க.ப.99)**

என்று மனம் நொந்து கூறுகிறார்.

**இன்றையக் கல்விநிலை**

கல்வியானது இன்று குழந்தைகளுக்குப் பெரும் சுமையாகவும் மன அழுத்தம் தருவதாகவும் மாறிவிட்டது. பாடங்களைப் புரிந்து பயிலுதல், தனக்கு எழும் சந்தேகங்களை விவாதித்து விடை காணுதல் என்பதெல்லாம் மாறி, முழுக்க மனனம் செய்தல், அதை அப்படியே தேர்வில் எழுதுதல் என்று மதிப்பெண்களுக்கு மதிப்பளிக்கும் கல்வியாக மாறியுள்ளதை,

**ஒரு மதிப்பெண்**
**குறைந்தாலும்**
**உதை விழும் பயம் (பொ.பெ.ம.ப.57)**

என்றும்

**நண்பனின் மகனை விட**
**நல்ல மதிப்பெண் எடுக்க**
**முருகனிடம் போய்**
**மொட்டை போடும்**
**அப்பா (பொ.பெ.ம.ப.56)**

என்றும் உரைக்கிறார். இன்றைக்குப் பெற்றோர்கள் கூடத் தங்கள் பிள்ளைகள் அறிவாளியாக இருப்பதைவிட மதிப்பெண்ணில் முந்திச் செல்பவனாக இருப்பதையே விரும்புகிறார்கள் என வருந்துகிறார்.

இன்றைய கல்விக் கூடங்களின் நிலையை,

**கல்விக்கூடங்கள்**
**சிறைச்சாலைகளாய்**
**மாறிவிட்டன**
**சாதாரணக் கைதிகள்**
**அரசுப் பள்ளிகளில்**
**முதல் வகுப்புக் கைதிகள்**
**தனியார் பள்ளிகளில் (க.ந.கா.ப.118)**

என உண்மையை எடுத்துரைக்கிறார். இளம் வயதினரின் எண்ணங்களுக்குச் சிறையிட்டு, அவர்களின் புதிய கருத்துகளுக்குத் தடையிட்டு, குழந்தைகளைக் கைதிகள் போன்று பள்ளிக்கூடங்கள் நடத்துவதை இதில் சுட்டுகின்றார்.

ஆசிரியர் மாணவர் உறவுநிலை குறித்து,

**மாணவர்களும் ஆசிரியர்களும்**
**வேறு வேறு**
**இனம் தான்**
**வகுப்புக் கலவரங்கள் (மு.பூ.ரோ.ப.76)**

என மனம் வருந்தி நிசம் உரைக்கிறார்.

மேலும், ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது என்பதை நிறுவுவது போன்று இன்றைய கல்விநிலை உள்ளதை,

**மொத்தத்தில்**
**புத்தகப்**
**புதைகுழியில்**
**புதைந்து போய்**
**மனிதனாகும் முயற்சியில்**
**தோற்று விடுகிறார்கள் (பொ.பெ.ம.ப.57)**

என்றுரைப்பர்.

**காலை எழுந்தவுடன் படிப்பு - பின்பு**
**கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு**
**மாலை முழுதும் விளையாட்டு என்று**
**வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா**[14]

எனப் பாடிய பாரதியின் வரிகளுக்கு வாழ்வில் இடம் இன்றி எந்நேரமும் படிப்பு, எந்நிலையிலும் இல்லை விளையாட்டு என்பதாக இளம் சிறார்களின் வாழ்க்கைப் பயணம் வழி மாறிச் சென்று விட்டது. விளையாட்டினால் விளையும் பயன்களாகிய உடலியக்க உறுதிப்பாடு, விட்டுக் கொடுத்தல், சகிப்புத்தன்மை போன்ற உளவியல் உண்மையை மாணவர்கள் உணர முடியாத நிலை உள்ளது என்பதையும் விளையாடப் போவது அரட்டை அடிப்பது தண்டனைக்குரிய குற்றங்கள் (பொ.பெ.ம.ப.56) எனப் பெற்றோர்களால் கருதப்படுவதையும் கண்டிக்கிறார்.

கிராமப்புறங்களில் சிறுவர்கள் பள்ளி செல்வதில் ஆர்வம் காட்டாமல் சில சமயங்களில் இருப்பதுண்டு. இதனால் கவலை அடைந்த பெற்றோர்கள், குழந்தைகளிடம் பள்ளிக்கூடம் போகவில்லை என்றால், படிப்பு மனதில் ஏறவில்லை என்றால் “பேசாமல் மாடு மேய்க்கப் போ” என வசைபாடுவது உண்டு. ஆனால் கவிஞரோ

**மாடு மேய்த்தல்**
**சிரமமான வேலை -**
**படித்துவிடலாம் (ம.கை.ப.40)**

என்று மாற்றிக் கூறுகிறார். மாடு மேய்த்தல் என்பது எல்லோரும் நினைப்பது போல அவ்வளவு எளிதில்லை. மாடு மேய்ப்பதை விட படிப்பது எளிமையானது என மாற்றம் உரைக்கிறார்.

**புத்தகங்கள்**

காலத்தால் அழியாத கருத்துப் பெட்டகங்கள், புத்தங்கள். ஒரு மனிதனை, இலக்கை நோக்கி இட்டுச் செல்வது அவனது 'வாசிப்பு'ப் பழக்கம் என்பது மறுக்க முடியாத உண்மை. கடந்த காலங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது வாசித்தல் என்னும் நற் பழக்கம் இப்போது குறைந்து கொண்டே வருகிறது. தற்போதைய தகவல் தொழில்நுட்பத்துறை வளர்ச்சியினால் நம்மவர்களிடம் வாசித்தல் என்ற பழக்கம் சிறிது சிறிதாக அருகிவிட்டது. ஆனால் புத்தக வாசிப்பு என்பது மிகவும் இன்றியமையாதது. ஒரு வாளின் முனையை விடப் பேனா முனை வல்லமை வாய்ந்தது ஆகும். இத்தகு சிறப்பு வாய்ந்த புத்தகங்கள் குறித்து,

**மிரட்டும் ஆயுதமல்ல - சமூகத்தைப்**
**புரட்டும் ஆயுதம் - (க.ந.கா.ப.61)**

என இரண்டே வரிகளில் உரைக்கிறார் கவிஞர். மேலும் புத்தகங்கள் பேசுவது போல,

**எனக்கு ஒரு வருத்தம்**
**உண்டு**
**வீடுகட்டத்**
**திட்டமிடும் போதெல்லாம்**
**முதியோர்களைப் போல**
**என்னையும் ஒரு**
**மூலையில் கிடத்தி**
**விடுகிறார்கள்.**
**எனக்கென்று**
**ஒரு தனி அறை**
**தரக்கூடாதா?**
**அதை அந்த**
**வாஸ்து நிபுணர்கள்**
**வலியுறுத்தக் கூடாதா? (க.ந.கா.ப.63-64)**

என வினவுகிறார். புத்தகங்களினால் மக்கள் யாவரும் எழுத்தாளர், வாசகர், அறிவாளி, மேதை என்றெல்லாம் பலவாறாக அடையாளம் காட்டப்படுகிறார்கள். புத்தகங்களையே எந்நேரமும் வாசிப்பவரைப் 'புத்தகப்புழு' என்று கூறுவர். மேலும் மனிதர்கள் பயனற்ற விடயங்களில் பொழுதைக் கழிக்கவே விரும்புகிறார்கள் என்பதையும் பயன் தரக்கூடிய நல்ல நூல்களைப் புறக்கணிக்கிறார்கள் என்பதையும்,

**நாட்டின் வரலாறு**
**சொன்னால்**
**நாக்கைக் கடிக்கிறார்கள்.**
**நடிகையின்**
**வரலாறு என்றால்**
**தேடிப் படிக்கிறார்கள். (க.ந.கா.ப.67)**

என்று ஆதங்கப் படுகிறார். எதைப் படிக்க வேண்டும் எது பயனற்றது என்பதையும் உணர்ந்து படிக்க வேண்டும் என அறிவுறுத்துகிறார்.

புத்தகங்கள் உரைக்கும் செய்தியினை

**நான்**
**இதிகாசக்**
**கடவுளைச் சொல்வேன்.**
**இங்கர்சாலின்**
**தத்துவம் சொல்வேன்.**
**காரல் மார்க்ஸின்**
**பொதுவுடைமை சொல்வேன்.**
**கலீல் ஜிப்ரானின்**
**காதல் சொல்வேன் (க.ந.கா.ப.71)**

**நான்**
**புரட்சிகளின் விதை,**
**சூட்சுமங்களின் விடை.**
**என்னைப்**
**பத்திரப்படுத்துங்கள்! (க.ந.கா.ப.70-72)**

என்றுரைத்து அரிய பெரிய கருத்துக்கள் கொண்ட நூல்களைப் படித்துப் பயன் பெறுவதோடு விட்டுவிடாமல் எதிர்காலச் சந்ததியினரும் படித்துப் பயன்பெறும் வகையில் நூல்களைப் பாதுகாக்கவும் வேண்டுகோள் விடுக்கிறார்.

**அறிவொளி இயக்கம்**

அறிவொளி இயக்கம் என்பது தமிழ்நாட்டில் வயது வந்தோருக்கு எழுத்தறிவை வளர்ப்பதற்காக முன்னெடுக்கப்பட்ட ஒரு அமைப்பு ஆகும். தமிழ்நாட்டில் எழுத்தறிவை அதிகரித்ததில் இந்த அமைப்பின் கணிசமான பங்களிப்பு மிகவும் முக்கியமானது. இதைப் பாராட்டும் விதமாகக் கவிஞர் மாதா, பிதா, குரு, தெய்வம் இவை அனைத்தின் மொத்தமே அறிவொளி இயக்கம் எனப் பாடி மகிழ்கிறார். மேலும் அறியாமை இருளகற்றும் அறிவொளியைச் சூரியன் என்றும், அருள் ஒளியாய் வந்ததால் சந்திரன் என்றும், வாழ்வின் அர்த்தங்களைத் கற்றுத் தந்ததால் ஆசான் எனவும், அறிவொளியின் முகவரி அறிமுகமாகா விட்டால் இருட்டின் குகைக்குள்ளேயே இருந்து இருப்போம் எனவும் அறிவொளியின் பங்களிப்பைச் சிறப்பிக்கிறார். (த.மூ.க.பக்.41-43)

**அரசியல்**

அரசியல் தொண்டர்களின் அவலநிலையை, தொண்டர்களே! தலைவர் வீசும் துண்டுகளை எத்தனை நாள் பிடித்துக்கொண்டிருப்பது? வாழ்வில் விடியல் வராவிட்டால் தலைவர்களையும் துண்டுகளாய் வீசி எறிவோம் என உரிமைக் குரல் கொடுக்கிறார். அரிதாரம் கலைத்து அவதாரமெடுப்போம் என ஆளுமையோடு அழுத்தம் கொடுக்கிறார். ஏனெனில் வறுமையை அடையாளம் காட்டும் அரையாடை (கோவணம்) யின் அவலமும் அவர்களின் அடிவயிற்றில் கட்டும் ஈர ஆடையின் சோகமும் அரசியல் தலைவனைக் கொண்டாடும் அவலத்தின் பின் ஒளிந்த துயரம் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். ‘என்று மடியும் எங்கள் அடிமையின் ஓலம்’ என்ற பாடிய பாரதியின் உரிமைக்குரலை ஆசிரியரும் பிரதிபலிக்கிறார். உழைப்பவன் நசுக்கப்படுவது காலங்காலமாகத் தொடர்ந்து வரும் அவலமே. உரக்கப் பேசுவது, உண்மையாகிவிடாது என்றாலும் பொய்யும் புனைந்துரையும் சில காலம் போற்றப்படுவதாகவே காணப்படுகிறது. அந்த அரிதாரத்தில் சிக்கித் தவிக்கும் அவலம் ஏழை எளியவரின் சாபநிலை.

ஒலிவாங்கியைப் பிடித்து, மைதானத்தில் பொய்களைச் சிதறவிட்டுப் படகுககாரில் தலைவன் பங்களாவிற்குச் செல்ல, உண்மையாக உழைத்து, நெரிசலில் சிக்கி நிற்கவும் இடமின்றி அலங்கோலமாய் அடிபட்டு, அடிமைத்தொண்டன் காயத்துடன் வீடு திரும்பினான் என அரசியல் அவலநிலையை எடுத்துக்கின்றார். இது

எல்லாம் ஒரு முக்கிய அமைச்சரின் வருகைக்கு முன்னும் பின்னும் (த.மூ.க.ப.89) என அரசியல்வாதிகளின் அதிகார அத்துமீறல்கள் எந்தெந்த வகையில் சாதாரண மனிதனின் அன்றாட வாழ்வாதாரத்தையும் பாதிக்கிறது எனத் துணிந்து உரைக்கிறார். சாதாரண குடிமகன் ஒருவன் பணியில் அமர்வதற்கோ பலவிதமான தேர்வுகள். அதில் பதவி உயர்வு வேண்டுமென்றால் இன்னும் பல படிநிலைகளைக் கடக்க வேண்டும். ஆனால் அரசியல்வாதி ஆவதற்கு என்ன தகுதி வேண்டும்? அதை நம் அரசாங்கம் இன்னும் யோசிக்கவே இல்லை. அரசியலில் உள்ள எம்.பி., எம்.எல்.ஏ போன்றவர்களுக்கு மட்டும் கை நிறையச் சம்பளம். கவலை இல்லாத வாழ்வு எனத் தொடரும் நம் சமுதாய நிலைமையை,

**போராடாமல்**
**கொடி பிடிக்காமல்**
**பஸ்ஸை மறிக்காமல்**
**பட்டினி கிடக்காமல்**
**சம்பள உயர்வைச்**
**சரியாய்ப் பெறுவது**
**எம்.பி.க்களும்**
**எம்.எல்.ஏ.க்களும் தான் (த.மூ.க.ப.103)**

என்று சமூக யதார்த்தத்தை எடுத்துரைக்கிறார். இது உழைப்பாளிகள் சிலையில் கூட உழைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அரசியல்வாதிகள் சிலையில் கூடப் பேசிக்கொண்டு தான் இருக்கிறார்கள் என்னும் கவிதையோடு ஒப்புநோக்கத்தக்கது.

மேலும் அரசியல்வாதிகள் வாக்குபெறுவதற்காகக் கூறும் வாக்குறுதிகளைப் பூக்களாக உருவகித்து, வெற்றி பெற்றாலும் வாக்குறுதிகளை நிறைவேற்றப் போவதில்லை என்பதை,

**தேர்தல் வீதிகளில்**
**வாடிக் கிடந்தன**
**வாக்குறுதிப் பூக்கள் (த.மூ.க.ப.59)**

என மனம் வருந்துகிறார்.

தேர்தல் வந்துவிட்டால் வீடு வீடாகச் சென்று ஓட்டுக்காகக் கும்பிடுவது அரசியல்வாதிகளின் வாடிக்கை கும்பிடுவார்களே தவிர மக்கள் கும்பியைப் பார்ப்பதில்லை. இதனை,

**பிரச்சார இரைச்சலில்**
**கேட்பதே இல்லை**
**வயிறுகளின் அழுகை (பொ.பெ.ம.ப.50)**

**தேர்தல் வாழ்க!**
**குனிந்து கும்பிடுகிறார்கள்**
**குடிசைகளையும் (பொ.பெ.ம.ப.50)**

எனபன போன்ற கவிதைகளில் விளக்குகிறார். மக்களால் தாம் சம்பாதித்த பணத்தில் ஒரு சொற்பமான பகுதியை மக்களுக்கே ஓட்டுக்காகக் கொடுத்து அவர்களை மேலும் ஊமைகள் ஆக்குவதை,

**வீட்டுக்கு ஒரு**
**ஓட்டு வளர்ப்போம்**
**பணம் தருகிறார்கள் (பொ.பெ.ம.ப.51)**

என்று இரங்குகிறார்.

**வாக்குறுதி விதைக்கிறார்கள்**
**ஓட்டு அறுவடைக்காக**
**பரிசாகுமா? தரிசாகுமா? (பொ.பெ.ம.ப.52)**

எனவும் வினவுகிறார்.

மேலும் அவர்கள் உரைக்கும் பொய்யான ஆசை வார்த்தைகள் யாவும் கணக்கில் அடங்காதது. 'உங்களுக்கு வீடு தருகிறோம்; இலவசமான பொருட்கள் தருகிறோம் என அடுக்கிக்கொண்டே சொல்வதைக் கேட்டு, ஆசை வார்த்தை கேட்டு அதிர்ச்சியில் இறந்தான் கோவண வாக்காளன் என்கிறார். மேலும் அரையாடை உடுத்திய உழவனைப் பார்த்து அரைக்கச்சை உடுத்திய அண்ணல் எங்கே! தான் பணியாற்றிய துறையில், தகுதியின் அடிப்படையில் தன் மருமகனுக்குக் கிடைத்த பொருளாளர் பதவிக்கு, தான் கையெழுத்திட்டால் தவறாகி விடும் எனப் பதவி தர மறுத்த நேர்மையாளன் கக்கன் எங்கே! இன்றோ வெறும் கையோடு அரசியலில் நுழைந்து வேறு வேறு நாடுகளில் கோடி கோடியாய்ப் பணம் சேர்த்து வைத்துள்ள கொடும் அரசியல்வாதிகள் தானே நாடு முழுவதும் வியாபித்து இருக்கிறார்கள். நல்ல நெஞ்சம் கொண்ட அரசியல்வாதிகள் தோன்றினால் கூட களை எடுக்கும் பணிகளுக்குக் கூட அவர்களின் பதவிக்காலம் முழுமையும் போதாது என்றுதான்

சொல்ல வேண்டும். ஆனால் தேவையான மாற்றத்தை வருங்காலச் சமுதாயம் ஆக்கியே தீரவேண்டும் என்று வேண்டுகோள்விடுக்கிறார். (பொ.பெ.ம.ப.53)

ஆப்பிரிக்காவில் கருப்பர் இனம் ஒடுக்கப்பட்டு, அவர்தம் உரிமைகள் பறிக்கப்பட்டு, அவர்களுடைய வாழ்க்கை நிலை நசுக்கப்பட்டதைக் கண்டிக்கும் கவிஞர்

**கறுப்பு ஆட்சிக்கு வரும்**
**இன்று அந்தியிலும்**
**நாளை ஆப்பிரிக்காவிலும் (ம.கை.ப.7)**

என்கிறார். இதில் சிறையிருந்த நெல்சன் மண்டோலோ மீண்டு வந்து ஆப்பிரிக்காவில் ஆட்சியைப் பிடிப்பார் என்பதைக் குறியீட்டு நோக்கில் உரைக்கிறார்.

வசதியும் வாழ்வும் இருக்கும்போது நம் வழித்துணையாகப் பலர் இருப்பர். அதே நேரத்தில் நம் நிலை தாழ்ந்தால் என்ன நிலை என்பதை,

**அற்ற குளத்து அறுநீர்ப் பறவைபோல்**
**உற்றுழித் தீர்வார்**[15]

என நாலடியார் உரைக்கும்.

இதனை அரசியலுக்குப் பயன்படுத்தி அரசியல் வாழ்வில் ஆளும் கட்சியினராக இருக்கும்போது ஒருவருடைய பதவிக்கும் பணத்துக்கும் தலைவணங்கிப் பின்னே சென்ற பலர் அவரே எதிர்க்கட்சியாளரான பிறகு திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை என்னும் உண்மையை,

**வெறிச்சோடிக் கிடக்கின்றன**
**வீடுகள் -**
**எதிர்க்கட்சியான பிறகு (மு.பூ.ரோ.ப.81)**

என்றுரைக்கின்றார்.

**சாதி மத வேற்றுமை**

மனித வாழ்வில் சக மனிதனை மதித்து, அன்பு செலுத்தி வாழ்ந்த வரை சமூகம் அமைதியுடனும் முன்னேற்றப் பாதையில் எவ்விதத் தடையுமின்றி வளர்ந்தும் வந்தது. எப்போது சாதி, மத, இன வேற்றுமைகள் உள்ளே நுழைந்ததோ அந்த நாள் முதல் மனிதகுல மாண்புகள் போராட்டத்தை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. அதுமட்டுமன்றி இவ்வேறுபாடுகளால் அழிவுதான் மிச்சம் என்பதை,

**குடிசைகளின் மீது**
**சாதி நடந்தது**
**சாம்பல் கிடந்தது**
**மதம் நடந்தது,**
**ரதம் நடந்தது,**
**அங்கங்கே இரணம் கிடந்தது (த.மூ.க.ப.117-118)**

எனக் கூறி வருந்துவர். மேலும்,

**வறுமைத் தீ**
**வன்முறைத் தீ**
**இனத்தீ**
**மதத்தீ என**
**தேசம் எப்போதும்**
**வெளிச்சத்தில் -**
**இருட்டில் மனிதர்கள் (த.மூ.க.ப.115)**

எனக் கலவரங்களால் சாதாரண மனிதர்கள் பாதிக்கப்படுவதை எடுத்துரைக்கிறார்.

மதம் என்னும் மாயையில் சிக்கி மானுடம் தவிக்கும் போதெல்லாம் கவிஞர்கள் தம் கருத்துக் கணையால் அதைத் தகர்த்தல் கவியுலக மரபு. மதம் வேறாயினும் மனம் ஒன்று தானே. எனவே மனதில் அன்பைக் கலக்காமல் மத வேற்றுமை பாராட்டுவதை,

**கலவரத்தில்**
**வீடுகள் எரிந்தன**
**பீனிக்சாய் சாதிகள் (த.மூ.க.ப.72)**

என மதக்கலவரத்தைச் சாடுகிறார். பாரதிதாசனும் மனிதர்கள் தங்களுக்குள் பேதம் பார்க்கும் நிலையைக் கண்டிக்கும் விதமாக,

**இத்தரை, கொய்யாப் பிஞ்சு;**
**நீ அதில் சிற்றெ றும்பே;**
**அத்தனை பேரும் மெய்யாய்**
**அப்படித் தானே மானே?**

**பித்தேறி மேல்கீழ் என்று**
**மக்கள்தாம் பேசல் என்னே![16]**

எனப் பாடியுள்ளாமை இங்கு குறிப்பிடத்தக்கது.

**சமய ஒருமைப்பாடு**

மனித நாகரிகத்தில் காலந்தோறும் பல்வேறு பரிமாணங்களில் மாற்றங்கள், வளர்ச்சிகள் தோன்றிய வண்ணம் உள்ளன. அத்தகைய வளர்ச்சிகள் மனித வாழ்வில் இனிமையும் வளமையும் சேர்ப்பதாக அமையவேண்டும். மனிதன் கடந்து வந்த பாதையில் பெண்ணடிமை, சாதி வேற்றுமை இவ்விரண்டும் மிக முக்கியமான தடைக்கற்கள். இவை பற்றிக் காலங்காலமாக அறிஞர்கள், தலைவர்கள், கவிஞர்கள் போன்றோர் அறிவுறுத்தினாலும் அவை வேரோடு அழிந்து விட்டன என்று அறுதியிட்டுக் கூறிவிட முடியாது. இருந்தாலும் கவிஞர்கள் தம் கொள்கையில் உறுதி கொண்டவராக, பெண் அடிமைத்தனத்தையும், மனிதனை மனிதன் அடிமை கொள்ளத் துடிக்கும் சாதி வேற்றுமையையும் பற்றி எதிர்ப்புக் குரல் கொடுத்த வண்ணம் உள்ளனர்.

‘சாதி இரண்டொழிய வேறில்லை’ என அன்றே குரல் கொடுத்த ஔவைப் பிராட்டியின் வழிநின்று கவிஞரும் சாதி, மதம் என்னும் வேற்றுமைக் கண்ணோட்டத்தினின்று விலகி ‘அன்பு’ எனும் அடிப்படையில் மனித மனங்கள் சிந்திக்குமானால் அது அமுதமாகிவிடும். மதவேற்றுமைக் கண்களால் நோக்கினால் அதுவே விஷமாகி விடும். மனிதனின் வழிபாட்டு முறைகளும் சடங்குகளும் வேண்டுமானால் வேறாக இருக்கலாம். ஆனால் யாவுமே போதிக்கும் ‘அன்பு’ எனும் தத்துவம் மிக இனிமையானது என்பதை,

**தேவாலயத்துக்**
**கற்கண்டோ**
**பள்ளிவாசல்**
**சர்க்கரையோ**
**பெருமாள் கோவில்**
**பொங்கலோ எதுவென்றாலும்**
**இனிப்பாய் இருக்கிறது (எ.ப.நா.ப.88)**

என உரைப்பர். காணும் பொருளில் தான் வேற்றுமை தவிர அவை உணர்த்தும் பொருள் ஒன்று தான் என்று கவிஞர் அறுதியிட்டுக் கூறுகிறார்.

குருவிகள் உருவத்தில் மிகவும் சிறியவை. ஆனால் பறவையினங்களில் கணப்பொழுதில் அதிவிரைவாகப் பரப்பனவும் அவைதான். விரைவாகச் செல்பவரைக் குறிக்க, சிட்டாய்ப் பறந்துவிட்டான் என உரைக்கும் வழக்கம் உள்ளது. இப்படி வேகத்தில் சிறந்த குருவிகள் கோவில் கோபுரத்தில் வந்து அமர்வதில் ஒரு கற்பனைச் சிறகு விரிக்கிறார் கவிஞர். அதாவது உருவில் சிறிய குருவிகள் கூட விரும்பிய இடமெல்லாம் செல்ல முடிகிறது. ஆனால் கருவறை என்னும் சிறைக்குள் இருந்து தன்னால் வெளியேற முடியவில்லை எனக் கடவுளே வருந்துவதாக,

**கோபுரத்தில் குருவிகள்**
**சிறகின்றித் தவிக்கிறார்**
**கடவுள் (மு.பூ.ரோ.ப.75)**

என்கிறார்.

இன்றைய சமூகச்சீரழிவிற்கு முதற்காரணம் மக்களின் குடிப்பழக்கம் மற்றும் தீண்டாமைக் கொடுமை. இதைக்கண்டு வருந்தும் கவிஞர்,

**தேசம்**
**ஒரு கவலை**
**இல்லாமல்**
**இருக்கவேண்டுமெனில்**
**இரு குவளை**
**இல்லாமல்**
**இருக்க வேண்டும் (பொ.பெ.ம.ப.24)**

என்கிறார். இதில் 'இரு குவளை' என்பது ஒன்று மதுக்குவளை; ,uz;L fpuhkj; NjePh;f; filfspy; gpd;gw;wg;ngWk; ,ul;ilf; Ftis Kiw.

**மது ஒழிப்பு**

'குடி குடியைக் கெடுக்கும்' என்ற வாசகத்துடனே மது விற்பனை பெருகி வரும் காலமிது. அதிலும் அவலம் மதுக்கடைகளை அரசாங்கமே திறந்து வைத்து விற்பனை செய்வது. அதனினும் பெரிய அவலம் அதிலிருந்து வரும் வருமானம், நாட்டின் வருவாய்க்கு மிக அவசியம் என்பது. இங்ஙனம் அரசாங்கமே மக்களை மாற்றி வைத்திருக்கும் நிலையையும் அதனால் அக்குடும்பங்கள் அடையும் துயரையும்,

**கவிழ்த்தவனின்**
**கோப்பைக்குள் மூச்சுத்திணறும்**
**கவிழ்த்தவனின் குடும்பங்கள் (மு.பூரோ.ப.85)**

என வருந்தியுரைப்பர். மது அதை அருந்துபவரை மட்டுமன்றி அவர்தம் குடும்பத்தையே நாசம் செய்துவது இதன்வழி புலனாகும். இதுபோன்று குடும்பப் பொறுப்பில்லாமல் வாழும் மனிதர்கள் குறித்துக் கவிஞர்,

**kfs; rk;ghj;jpaj;jpy;**
**js;shbf; nfhz;bUf;Fk;**
**mg;gd;fSf;F**

**kidtp rk;ghj;jpaj;jpy;**
**tPjpapy; miyAk;**
**ntl;b ge;jh GUrd;fSf;F**

**vz;gJ taJj; je;ij**
**cioj;J thq;fpa**
**igf;fpy;**
**Ch; Rw;Wk;**
**jWjiy kfd;fSf;F**

**toq;fyhk;**
**,t;thz;bd;**
**ciog;ghsh; jpd**
**tpUJfs;. (Nj.Nj.g.38)**

vd;W mq;fjkhf ciug;gh;.

**பணம்**

'பணமில்லாதவன் பிணம்'. 'பணம் பத்தும் செய்யும்', 'பணம் பாதாளம் வரை பாயும்', என்பன வழக்கிலுள்ள பழமொழிகள். பணம் இல்லாதவன் வாழ்க்கை பொருளற்றதாகி விடும். இதனையே வள்ளுவரும்,

**பொருளல்ல வரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்லது இல்லை பொருள்**[17]

எனப் பொருளின் இன்றியமையாமை கூறுகிறார். அத்தகைய பணத்தை எவ்வாறு பயன்படுத்தினால் தனக்கு இன்பம் என்றும், எப்படிப் பயன்படுத்தினால் தனக்கு வருத்தம் என்றும் பணம் சொல்வதாக,

**என்னை**
**குருதட்சணையாய்**
**கொடுப்பதென்றால்**
**கொண்டாடி மகிழ்கிறேன்.**

**வரதட்சணை**
**கொடுப்பதென்றால்**
**வாடிப் போய்விடுகிறேன்.**
**கர்ணனிடத்தில்**
**இருக்கும் போது**
**மீண்டும் மீண்டும்**
**பிறக்க வேண்டும்.**
**வாழ்க்கையைப் பறித்தவன்**
**கைக்குச் சென்றால்**
**விஷமாக வேண்டும். (க.ந.கா.பக்.57-59)**

என்று பாடுவதன் மூலம் பணம் எவ்வாறு பயன்படுத்தப் படவேண்டும் என்பதையும், எந்தப் பயன்பாடு தவிர்க்கப்படவேண்டும் என்பதைப் பணத்தின் குரலாகவே பதிவு செய்துள்ளார் கவிஞர்.

**விழிக்காத சமூகம்**

நாட்டில் எந்த இடத்தில் சமூக அநீதி நிகழ்ந்தாலும் அதைச் சரி செய்ய வேண்டியது அதிகாரத்தில் உள்ளவர்களின் கடமையாகும். ஆனால் அவ்வாறு அரசியலில் நேர்மையாக இருப்பவர்கள் அரிதினும் அரிதாகவே காணக் கிடைக்கின்றனர். நாட்டில் நிலவும் இந்த நடைமுறையைத் திரைத்துறையினர் தம் படங்களில் காட்டத் தவறுவதில்லை. அநீதியைத் தட்டிக் கேட்கும் உரமிக்க இளைஞன் எல்லோராலும் போற்றப்படுவான். ஆகையால் அவன் செய்யும் வீரதீரச் செயல்களால் அவன் மக்கள் மனதில் இடம் பிடிப்பவனாக ஆகிவிடுகிறான். அத்தகு திரைக்காட்சிகள் மக்கள் வரவேற்பைப் பெறுவதை,

**திரையரங்கில்**

**விசில் சத்தங்கள்**

**விழிக்காத சமூகம் (மு.பூ.ரோ.ப.53)**

என்கிறார்.

**தரமற்ற சாலைப்பணிகள்**

சனநாயக நாட்டில் பொது சொத்துக்கள் எதுவும் சரியாகப் பராமரிக்கப்படாத அவல நிலையே காணப்பெறுகிறது. இதில் சாலையும் ஒன்று. ஒவ்வோர் ஆண்டும் சாலைகள் போடப் பெறும். போட்ட ஒரு மாதத்திற்குள்ளேயே போட்ட அடையாளமே இல்லாமல் போய்விடும். இத்தகைய அவலநிலையை

**“எங்கள் ஊரில்**

**ரோடு போட்டார்கள்**

**நல்ல மழை.**

**எங்கள் ஊரில்**

**ரோடு போடவில்லை (த.மூ.க.ப.115)**

என்னும் கவிதையில் மிக நாசூக்காக எடுத்துரைக்கிறார். மேலும் சாலைகளின் மிக மோசமான நிலையை நகைச்சுவையாக,

**சிரிக்காமலே**

**குழி விழுகிறது**

**எங்களுர் சாலைகளுக்கு (த.மூ.க.ப.109)**

என்று கூறி, சமூக அவலத்தைப் படம்பிடித்துக் காட்டுபவராய்,

**டப்பாங்குத்து பாட்டுச் சத்தத்தில்**

**அடங்கிப்போனது**

**கடகட ஓசை (பொ.பெ.ம.ப.44)**

என உரைப்பர். இதில் அரசங்கப் பேருந்துகளின் நிலையை அரசாங்கத்தின் அலட்சியத்தை வெளிச்சமிடுகிறார். அதேபோல பேருந்துகளில் வைக்கப்பட்டிருக்கும் அவசரகால மருத்துவ உதவிப் பொருளான முதலுதவிப் பெட்டிகளே கவனிக்கப்பட வேண்டியவையாக, காலாவதியாகிப்போன மருந்துகளின் கொள்கலனாய் இருப்பதை,

**பேருந்தில் இருக்கிற**
**முதலுதவிப் பெட்டி**
**இறக்கிற நிலையில். (த.மூ.க.ப.69)**

என வருந்துகிறார். எதிலும் கவனமும் அக்கறையும் குறைவாகவே உள்ள அரசு சார்ந்த வேலைகளையும் மெத்தனப் போக்கையும் ஏதேனும் பெரிய விபத்துகள் ஏற்பட்டால் மட்டும் அவசர அவசரமாய் அதிகாரிகளின் வருகையின் போது மட்டும் சரி செய்தும், மற்ற நேரங்களில் அலட்சியப் போக்காகவும் உள்ள அரசாங்க அலுவலர்களைச் சாடுகிறார்.

**சமூகத்தில் பெண்கள் நிலை**

சமூகத்தில் இன்று பெண்களின் பங்களிப்பு என்பது அடுக்களை தாண்டி அணு ஆராய்ச்சி வரை தன் மெல்லிய கரங்களை விரித்து, பரந்து பட்டதாகக் காணமுடிகிறது. ‘அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு’ என்ற காலம் மாறி விண்வெளி வரை பெண்கள் தடம் பதித்துள்ள துறைகள் பலப்பலவாகும்.

பெண்கள் தமது இல்லப்பணிகளைத் தவிர, தான் சார்ந்த குடும்பத்தின் பொருளாதார உயர்வுக்காகவும், குடும்ப நலனுக்காகவும், சமூக அளவில் தமது நிலைப்பாட்டை உறுதி செய்வதற்காகவும் அலுவலகங்களில் பணிபுரியும் அவசியம் ஏற்பட்டுள்ளது. பணிபுரியும் மகளிர் குறித்து கவிதை புனைவதற்குரிய இலக்கணத்தை,

**குடும்பச் சூழலும் அலுவல் சூழலும்**
**இடைநிலத்து எழுந்த சூழல் தானும்**
**பணி மேற் செல்லும் பாவையர் நிலையே**[18]

என்று புதுக்கவிதை இலக்கணம் உரைக்கும்.

பாரதி கண்ட புதுமைப்பெண்களாய் வலம் வரும் இன்றைய பெண்கள், தன்னிச்சையாக, சுதந்திரமாக, தற்சார்புடன் செயல்பட வேண்டியது கட்டாயமாகின்றது. அதனால் பணியிடங்களுக்குச் சென்றிட நடந்தே செல்வது சாத்தியமன்று. எனவே அவர்கள் இரு சக்கர வாகனங்களில் பயணிக்கத் தொடங்கிவிட்டனர். அது கட்டாயமானதாகவும் ஆகிவிட்டது. இதனை

**காரில்**
**ஸ்கூட்டரில்**
**லூணாவில்**

**சைக்கிளில்….**

**நடப்பதே இல்லை**

**நம் பெண்கள்**

**வண்ணச் சீறடி**

**மண்மகள் அறிந்திலள் (த.மூ.க.ப.106)**

என்று பாராட்டியுரைப்பர். இவ்வாறு பெண்மையைப் போற்றிய கவிஞர் சில பெண்கள் தாம் பெற்ற கல்வியின் மகத்துவம் உணர்ந்து பணியாற்ற மறந்து தமது வாழ்வை ஆக்கபூர்வமாய் செலுத்துவதை விடுத்து, தம் திறனை வீணாக்குவதையும் கண்டிக்கிறார். சிலர் மளிகைச்சிட்டை எழுதியும், இராசிபலன் வாசித்தும், பால் கணக்குப் பார்த்தும் பொழுது போக்குவதையும் சாடுகிறார் (த.மூ.க.ப.108). படித்த பெண்கள் மட்டுமன்றி படிக்காத பெண்களும் தம்மால் முடிந்த பணி செய்வதை,

**cr;rp nta;apypy;**

**Ntfj; jilfSf;fUjpy;**

**nts;shpg;gpQ;Rk; nfha;ahTk;**

**tpw;Wf;nfhz;bUf;Fk;**

**ngz;fspd;**

**tpah;itj; JspfSf;Fs;**

**tpOe;Jfplf;fpwhh;fs;**

**Fbfhuf; fztd;fs;. (Nj.Nj.g.62)**

**kJg;Gl;bfspd;**

**%yg; ngah;fswpe;j**

**Mw;wyhsnthUtd;**

**gps;isfspd;**

**gpwe;j ehisf; Nfl;lwpfpwhd;. (Nj.Nj.g.62)**

vd;Wiuf;fpwhh;.

**gps;isfisg; gw;wpa**

**ngw;Nwhh;fspd;**

**ngw;Nwhh;fisg; gw;wpa**

**gps;isfspd;**

**fdTfs;**

**jj;jk; Vkhw;wq;fNshL. (Nj.Nj.g.63)**

vd;gJ midtUf;Fk; nghJthd ftpijahFk;.

நாம் வாழும் இந்த பூமியைத் தாய் எனப் போற்றுகிறோம். பேசும் மொழியைத் தாய் எனத் தொழுகின்றோம். நதிகளைக் கூட கங்கை, யமுனை, காவிரி என்று பெண் பெயரிட்டே அழைக்கிறோம். ஆனால் உடன் வாழும் பெண்ணின் பெருமை மட்டும் போற்றுதற்கு இல்லை என்ற நிலையே நிலவக் காண்கிறோம்.

எனவே பெண்கள் தமது தற்காப்பிற்காக காந்தியடிகள் கூறியது போல, தம் கூரிய நகங்களையும் பற்களையும் ஆயுதமாகக் கொள்ளலாம் என்கிறார் கவிஞர் இதனை,

**வெட்கப்பட்டுக் கடிப்பதற்கல்ல**
**நகங்கள்**
**புதுயுகம் காக்கப்**
**புறப்படு (பொ.பெ.ம.ப.39)**

என்றுரைக்கின்றார்.

**குடங்களில் கதைகள்**

சங்க காலத்திலேயே ‘புறங்கூறுதல் அறமன்று’ என்று அறிவுறுத்தப்பட்டு இருக்கிறது. நற்றிணையில் உலோச்சனார்,

**சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி**
**மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி**
**மருகின் பெண்டிர் அம்பல் தூற்ற**[19]

என்று தெருவில் பெண்டிர் கூடிப் பேசும் காட்சியை விவரிப்பர்.

இங்ஙனம் அலர்பேசும் பெண்கள் குறித்து, “வீட்டகத்துச் செய்திகளை அடுக்களைப் புகையைப் போல நுழைந்து காணும் ஆசையும், கூடியிருந்து முணுமுணுத்துப் பேசும் துணிவும் எப்படியோ பெண் சமுதாயத்துப் பிறவிக்குணம் போல அமைந்து வாய்க்குள் பேசும் வல்லமை வந்துவிடுகிறது”[20] என்பர் வ.சுப.மாணிக்கனார்.

கவிஞரும் தற்காலத்தில் தண்ணீர் பிடிக்க பல மணி நேரம் வரிசையில் காத்துக் கிடக்கும் பெண்கள், பிறர் வீட்டுக் கதைகள் பேசுவதில் பொழுதைக் கழிக்கிறார்கள் என்பதை.

**குழாயடி வரிசையில்**
**காலியான குடங்களுள்**
**அடுத்தவர் கதைகள் (த.மூ.க.ப.63)**

என நேரிடையாகவும், மறைமுகமாகவும் ஊர்வம்பு பேசுவதை உரைக்கின்றார்.

**வரதட்சணை**

சமூகத்தில் பெரிதும் பேசப்படும் பொருளாயுள்ளது வரதட்சனைக் கொடுமை. வரதட்சணையைப் பாடுபொருளாக்கும் விதத்தை,

**“கொடுக்க முடியாப் பெண்கள் நிலையும்**
**கொடுத்து மணந்த பெண்கள் நிலையும்**
**வசப்பட்டு நின்ற உற்றார் நிலையும்**
**சமூகம் அடைந்த சீர்கெட்ட நிலையும்**
**ஒழிவதற் கான வழிமுறை நிலையெனக்**
**கூறிய பிறவும் வரதட்சணை ஆகும்”**[21]

என்றுரைப்பர் இரா.இராஜேந்திரன.

பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள ஆண் வீட்டார் கேட்கும் நகை, தொகை, வரதட்சணை என அழைக்கப்பெறுகிறது. பெண்ணின் தந்தையிடம் வரதட்சணை பெற்று மணம் செய்து கொண்ட ஒரு ஆடவன்குறித்து,

**அப்பாவுக்குப் பத்தாயிரம்**
**அம்மாவுக்குப் பத்துப் பவுன்**
**எனக்குக் கல்யாணம் (ம.கை.ப.13)**

**வேலைக்கு விண்ணப்பித்தான்**
**இம்முறை நம்பிக்கையோடு**
**வசதியான மாமனார் (த.மூக.ப.112)**

என்னும் இரு கவிதைகள் விளக்கும்.

**போகப்பொருளாகும் பெண்கள்**

எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை காண் என்று பாரதி சென்ற நூற்றாண்டிலேயே குரல் கொடுத்து இருந்தாலும் ஆணாதிக்கச் சமூகம் பெண்களை இன்றும் போகப்பொருளாகவே பார்க்கும் அவலநிலை உள்ளது. பெண்ணுரிமை என்பது கனவாகவே உள்ளது. விருதுநகர் மாவட்டம் சிவகாசி அருகில் உள்ள காக்கிவாடன்பட்டியைச் சேர்ந்த ஜெயலட்சுமி என்பவரைப் பற்றி அவதூறு வழக்குகள் தொடுத்து அங்குமிங்கும் அலைய வைத்து, அவரது வாழ்வைச் சின்னாபின்னமாக்கிய நிலை கண்டு வருந்தும் கவிஞர்,

**காவல்துறைக்குத் தான்**
**எல்லோரும் பயப்படுவார்கள்**
**காவல்துறையே**
**உனக்குத்தான் பயப்படுகிறது (பொ.பெ.ம.ப.64)**

என்று வியக்கின்றார். அவரைக் கண்ணகியின் வடிவமாக சீதையின் மறுஜென்மாக நினைக்கத் தோன்றுகிறது என்கிறார். மேலும் அப்பெண் நியாயமற்ற வகையில் தண்டிக்கப்பட்டதாகக் கருதும் கவிஞர் அவரிடமே ஒரு விண்ணப்பமாக,

**உங்கள் ஊர்**
**கந்தகக் கிடங்கில் இருந்து**
**ஒரே ஒரு தீக்குச்சி**
**அனுப்பு**
**இங்கே கொழுத்துப் போய்**
**இருக்கும் சிலரைக்**
**கொளுத்திப் போட வேண்டும் (பொ.பெ.ம.ப.67)**

என்கிறார். தனக்கு இழைக்கப்படும் அநீதிகளைக் கண்டு கோபம் கொண்டு சீறி எழுந்த பெண்மை கவிஞரால் போற்றப் பெற்றுள்ளது.

**பெண் என்னும் நல்லாள்**

கம்பராமாயணக் காப்பியத் தலைவி சீதை பொறுமையின் இலக்கணமாக இன்றுவரை போற்றப்படுபவள். பெண்மைக்குரிய நால்வகைக் குணங்களான அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற எல்லாக் குணங்களையும் தன்னகத்தே கொண்ட நற்குண நங்கை. இத்தகு சீதையின் இயல்பை,

**ஆர்ப்பரிக்காத**
**அமைதித் தென்றல்**
**சீதை.**
**ஒருபோதும்**
**புயலாய் மாறிவிடாத**
**புதுமைத் தென்றல்**
**சீதை. (க.ந.கா.ப.40-41)**

என

**உலகின்**
**முதல் அழகி**
**இவள்தான்.**
**அழியாத அழகின்**
**கண்ணாடி,**
**ஐஸ்வர்யாராய்களின்**
**முன்னோடி. (க.ந.கா.ப.42)**

**நிமிர்ந்து எரியும்**
**நெருப்பில் நின்று**
**வென்று வந்தாள்**
**சீதை……**
**கண்டேன்**
**கற்பினுக் கணியை**
**என்று**
**அனுமன்**
**சொன்னதைப் போலவே**
**அக்னியும்**
**சொன்னது. (க.ந.கா.49)**

என்று பாடி சீதையின் பெருமை உணர்த்துகிறார். மலரினும் மெல்லிய தன் காதலின் திறத்தை, தன் கற்பெனும் உறுதியால் உணர்த்திய சீதையின் அழகுநலன் போற்றி உணரத்தக்கது. பிறர் கண்களுக்குப் புலப்படும் உருவத்தில் உள்ளது அல்ல அழகு. அழகு என்பது ஒழுக்கம் மற்றும் குண நலன் சார்ந்தது என்பதையும், மதிப்புகளின் அடிப்படையில் வரவேற்கத்தக்கது என்பதையும் கவிஞர்,

**நாடி வந்த**

**அனைவரையும்**

**ராமன்**

**நட்பாக்கி**

**வளர்த்த போதும்**

**இலங்கையில்**

**முள்வெளியில்**

**தன்னந்தனியாய்**

**இருந்தபோதும்**

**காதலின்**

**மென்மையைக்**

**கடைசிவரை**

**காப்பாற்றினாள்**

**சீதை. (க.ந.கா.47-48)**

என்று பாடிப் பெருமைப்படுகிறார்.

**சூர்ப்பனகையுடன் ஒரு சுற்றுப்பயணம்**

சூர்ப்பனகை இராவணனின் சகோதரி. இவள் இராமன் மீது ஆசை கொண்டாள். உடனே இலக்குவன் சீறிப்பாய்ந்து அவளுடைய மூக்கையும் காதுகளையும் வெட்டித் துரத்திவிட்டான். இதனால் கோபமடைந்த சூர்ப்பனகை தனது அண்ணன் இராவணனிடம் முறையிட்டாள். தனது தங்கைக்கு நேர்ந்த கதியினால் சினம் கொண்ட இராவணன் இராமனைப் பழிவாங்க எண்ணிச் சீதையைக் கவர்ந்து கொண்டு வந்து இலங்கையில் அசோகவனத்தில் சிறை வைத்தான். இராவணனின் சகோதரியாகிய சூர்ப்பனகை தன் கனவில் தோன்றி, தன்னை ஊர் சுற்றிப் பார்க்க அழைத்ததாகவும் உடன் சென்றதாகவும் கூறும் கவிஞர் சூர்ப்பனகையின் கூற்றாக,

சுற்றுப் பயணத்தில் பொது நாகரீகம் கருதாமல் ஒலிபெருக்கியில் அரசியல் பிரமுகர் ஒருவர் எதிர்க்கட்சியினரைத் தரமற்ற கொச்சை வார்த்தைகளால் ஏசுவதைக் கேட்ட சூர்ப்பனகை தன் காதுகளைப் பொத்திக் கொண்டு அந்த இலக்குவனர்களிடம் கூறுங்கள் என் மூக்கை அறுப்பதைவிட இங்கே சிலரின் நாக்கை அறுப்பது நாட்டுக்கு நல்லது; அண்ணன் தம்பி ஒற்றுமையின்றி பாகப்பிரிவினை கேட்டு நீதிமன்றங்களில் நிற்கின்றனர். சீதைகள் அழகு நிலையங்களில் அரட்டை அடிக்கிறார்கள்; தன் நெஞ்சைக் கிழித்த அனுமன் அதில் இராமன் இல்லை என்று மாரடைப்பில் அவசரப்

பிரிவில் அனுமதிக்கப்பட்டுள்ளான். இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஏகபத்தினி விரதன் எனப் பாராட்டப்படும் இராமன் பெயர்கொண்ட ஒருவன் நான்காவது திருமணத்தின் போது பிடிபட்டு மோசடி வழக்கில் கைதாகி சிறைக்குச் சென்று கொண்டிருக்கிறான். இவற்றைக்கண்ட சூர்ப்பனகை அதிர்ச்சி மேல் அதிர்ச்சியோடு போய்வருகிறேன் என விடைபெற்றாள் (க.ந.கா.பக்.140-143) எனக் கூறும் கவிஞர் நாட்டின் சீர் கெட்ட நிலையை, ஆடவரும் பெண்டிரும் ஒழுக்க நிலை பிறழ்ந்து வாழும் நிலையை இதன் வழி எடுத்துரைக்கின்றார்.

**உழவர் நிலை**

'கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கினால் போல' என்பது பழமொழி. இது அடிப்படையாகத் தேவையானதை விடுத்து ஆடம்பரத்திற்கு ஆசைப்பட்டு அல்லலுறுவதைக் குறிப்பிடும். அதே போல, வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையான உணவுக்கு ஆதாரமான விளைநிலங்களைக் கட்டடங்களாக்கி,

**வயல்களை அழித்து**
**கல்லூரி கட்டினார்கள்**
**நல்ல அறுவடை (எ.ப.நா.ப.64)**

என்று பாடுவதன் மூலம் கல்வி வியாபாரப் பொருளான அவலத்தைக் குறிப்பால் உணர்த்துகிறார். இது இன்று நாடெங்கும் உள்ள விவசாயிகளின் நிலை என்றாகிவிட்டது. பயிர்த்தொழிலுக்குப் பயன்பட்ட நிலம் இன்று பள்ளி, கல்லூரிக் கட்டடங்களாகவும் அடுக்குமாடிக் குடியிருப்புகளாகவும் ஆக்கிரமிக்கப்பட்டு நிலமகள் மூச்சுத்திணறிக் காயும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளாள் விவசாயி தனது இயற்கையான வாழ்வாதாரம் தொலைத்து இயந்திர வாழ்விற்கு மாறிவிட்டதைக் கவிஞர்,

**"ஊரில**
**நாலு மரத்த வித்து**
**காசு பார்த்தேன்**
**அதுலதான்" (எ.ப.நா.ப.52)**

என்று தனது வீட்டுக் குளிர்சாதனக் கருவி வாங்கிய விவசாயியின் நிலையைக் காட்டுகிறார். காலங்காலமாக நிலைத்து மண்ணின் வளத்தைக் காக்கும் மரங்களை விற்று, காலனை அருகே அழைக்கும் செயற்கை வசதிகளை ஏற்படுத்தும் இச்செயல் கண்களை விற்றுச் சித்திரம் பெற்றதைக் கண்டிக்கும் கவிதை என்பது கண்கூடு.

மரங்கள் மனிதனுக்கு, தங்கும் நிழல் தருவதுடன் அவற்றின் ஒவ்வொரு பாகங்களும் கூட இலை, காய், பூ, கனி, மரப்பட்டை என அதன் அனைத்துப் பாகங்களும் பயனுள்ளதாகத் திகழ்கின்றன. மரங்களின் இயல்பிலிருந்து ஒரு புதிய சிந்தனையை, மனிதர்கள் பின்பற்றவேண்டிய வாழ்வியல் பாடத்தை,

**தண்ணீர் ஊற்றுபவனுக்கு**
**மலர்களையும்**
**தகராறு செய்பவனுக்கு**
**சருகுகளையும்**
**வழங்க**
**எங்கு கற்றது**
**மரம்..? (எ.ப.நா.ப.26)**

என்று எடுத்துரைக்கிறார்.

உழவர்களின் அயராத உழைப்பால் தான் உலகமே தனது அடிப்படைத் தேவைகளில் ஒன்றான உணவைப் பெற முடிகிறது. இதனைப் பெருமைப்படுத்தும் விதமாகக் கவிஞர்,

**வியர்வை மகுடங்களை**
**வெய்யிலில் அணியும்**
**…..**
**கால்நடை தோழர்கள் கால்கள் தொட்டுக்**
**கலப்பைக்கு வைக்க வேண்டும் வெற்றிப் பொட்டு**
**….**
**அறுவடையின் காலமெல்லாம் பொற்காலம்**
**அடிக் கரும்பாய் இனிக்கும் அந்த நெற்காலம் (த.மூ.க.ப.58)**

எனக் குதூகலிக்கிறார்.

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றையவர்**
**தொழுதுண்டு பின்செல் பவர்**[22]

என்பர் வள்ளுவர். சேற்றில் உழவர்கள் கால் வைக்காவிட்டால் உலக மக்கள் எவருமே சோற்றில் கை வைக்க இயலாது என்பதை, கலப்பை எழுதும் கவிதையால் தான் ஒரு படி சோறு வடிக்கலாம். (க.ந.கா.ப.113) என்றுரைப்பர். மேலும்,

**இருவரை**
**எப்போதும் நாம்**
**வணங்க வேண்டும்.**
**எல்லையில் நின்று**
**தேசம் காக்க**
**உழைப்போரை.**
**ஏர் பிடித்து**
**கலைப்பை எடுத்து**
**உழுவோரை (க.ந.கா.ப.115)**

என்று வணங்கத்தக்கவர் பட்டியலில் உழவரைச் சேர்க்கிறார்.

## தமிழும் தமிழ்ச் சான்றோர்களும்

கவிஞர் தங்கம் மூர்த்தி மொழிப்பற்றுடன் தமிழ்மொழி குறித்தும் தமிழுக்குத் தொண்டு செய்த சான்றோர்கள் குறித்தும் பல கவிதைகள் புனைந்துள்ளார்.

கவிஞர் தம் தாய்மொழியாம் தமிழை ஆதித்தாய், தந்தை, ஆசான், தினம்தொழும் தெய்வம் என யாதுமாகி நின்றாய், எங்கும் நீ நிறைந்தாய் போற்றுகிறார். அதேபோலத் தமிழை வானம், காற்று, மழை, விதை, சிறகு, உலகெங்கும் கிளை விரித்த வேர் என இயற்கையின் வடிவாய் அடுக்கிச் சொல்கிறார். இவை அனைத்திற்கும் மேலாக,

**தமிழ்த் தாய்க்கு**
**ஆயிரம் கருப்பை**
**பிள்ளைகள் அன்றாடம்**
**பிறந்தபடி இருக்கின்றன.**
**தமிழ்த்தாய்க்கு**
**லட்சம் கரங்கள்**
**நாடுகளை கடந்து**
**மதங்களை இணைத்து**
**மனங்களை அணைக்கின்றன (க.ந.கா.ப.107)**

என்கிறார். உலகெங்கும் உள்ள தன் பிள்ளைகளை அரவணைத்துச் செல்பவளாய் தமிழ்த்தாய் விளங்குகின்றாள். தமிழன்னை நிறம் கடந்து, மதம் கடந்து, வேறு வேறு திசைகளிலும் வியாபித்து அனைவரையும் ஒன்றாக்கும் வேர் என்று புகழ்ந்து

வேர்களுக்குப் பூவையும் விழுதுகளுக்குப் பரிசையும் வழங்கி மகிழ்கிறார். தளிர்களைத் தாலாட்டித் தமிழ்ப்பாலைத் தாய்ப்பாலாய்க் கொடுப்போம் என்று மகிழ்கிறார்.

**தாய்நாட்டுப் பற்று**

இன்றைக்கு வல்லரசு நாடுகளுக்கு இணையாக அணு ஆயுதச் சோதனைகளை நடத்தி வெற்றி கண்ட நாடு நம் இந்தியா. என்றாலும்கூட அமைதியை விரும்பும் நாடாக இந்தியா திகழ்கிறது. இதனை,

**வெள்ளைக் கொடியை**
**பறக்க விட்டு**
**அனைத்தையும்**
**வேடிக்கை பார்த்தபடி**
**அமைதியாய்ப் போயின**
**இந்திய ஆயுதங்கள் (க.ந.கா.ப.129)**

என்கிறார். மேலும் பிற நாடுகளின் ஆயுத வல்லமையை, அரசுகளின் எண்ணப் போக்கை,

**அகந்தையுடன்**
**அணிவகுத்தன**
**அமெரிக்க ஆயுதங்கள் என்றும்**
**பயந்தபடி நகர்ந்தன**
**பாகிஸ்தான் ஆயுதங்கள் என்றும்**
**பிண வாடை அடிக்க**
**பீடு நடை போட்டன**
**சிங்கள ஆயுதங்கள் (க.ந.கா.ப.129)**

எனவும் ஆயுதங்களின் மாநாட்டில் பிரதேசங்களின் நிலைப்பாட்டைக் காட்டி அமைதியே சிறந்த நெறி, அதுவே நம் இந்தியாவின் தலையாய கொள்கை என இறும்பூது எய்துகிறார்.

**ஊர்ப்பற்று**

எல்லோருக்குமே அவரவர் பிறந்த ஊர் என்பது சொந்த ஊர் சொந்த மண் என்ற பெருமித உணர்வு கொடுப்பதாகவே இருக்கும். கவிஞரும் அவர் வாழும் புதுக்கோட்டை என்னும் ஊரை பற்றி பெருமிதமாய்ப் பாடுகிறார். அரண்மனை நகர் என்றும், மன்னர் கல்லூரி என்றும், கீழரத வீதி என்றும் அக்காலப் பாரம்பரியம் உணர்த்தும் மன்னர்காலப் பெருமையைக் காட்டும் பெயர்களைக் கூறி மகிழ்கிறார். மேலும்

**பண்டித நேருவின்**
**பாதம் பதிந்த மண்**
**பெண் குலத்திற்கே**
**பெருமை சேர்த்த**
**முதல் மருத்துவர்**
**முத்துலட்சுமி ரெட்டி**
**திரை உலகமே**
**திரும்பிப் பார்த்த**
**பி.யூ.சின்னப்பா**
**இசை பொழிந்த**
**தட்சிணாமூர்த்தி பிள்ளை**
**பெண் ஆதீனம்**
**அன்னை சாயிமாதா**
**மிருதங்கம் வாசித்த**
**ரங்கநாயகி**
**இப்படி மகான்கள்**
**வாழ்ந்த**
**பட்டியல் நீளும்**
**நீண்ட தலைமுறைக்கு அது**
**நினைவில் வாழும் (க.ந.கா.பக்158-159)**

எனப் புதுக்கோட்டையின் வரலாற்றுச் சிறப்பினையும் அம்மண்ணில் தோன்றிய சாதனையாளர்களையும் பாடி மகிழ்கிறார்.

**திருவள்ளுவர்**

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**[23]

என்ற பாரதியின் வரிகள் திருக்குறளின் திருவள்ளுவரின் பெருமையைப் பறைசாற்றும். திருக்குறள் ஒவ்வொன்றும் குறள் வெண்பா யாப்பில் இரண்டு அடிகளை உடையதாய் முதல் அடியில் நான்கு சீர்களும் இரண்டாம் அடியில் மூன்று சீர்களுமாய் அமைந்துள்ளது. மொத்தம் ஏழு சீர்கள். இதைக் கவிஞர் ஏழு வண்ணங்கள் கொண்ட வானவில்லுடன் ஒப்பிட்டு,

**ஒவ்வொரு குறளும் ஒவ்வொரு வானம்**
**அதில்**
**ஏழு சொற்களால் வானவில் வரைந்தவர்**
**வள்ளுவர் (அ.வா.வி.எ.நி.ப.55)**

எனப் புகழ்ந்து உரைக்கிறார்.

**மகாகவி பாரதி**

பாரதி என்ற ஒற்றைச் சொல்; பரங்கியரை மனம் பதைக்கச் செய்த வீரச்சொல். தமது கவிதைகளால், பாமரனுக்கும் புரியும் எளிய சொற்களால் அவர் தம் மனதில் வீரம் விளைவித்த வெற்றிச் சொல். அத்தகைய வீரக் கவிஞரைப் பற்றி கவிஞர் பல கவிதைகள் படைத்துள்ளார். அவர்தம் கவிதைகள் குறித்து,

**ஆழ்ந்து தேடிப்பார்த்தும்**
**அழுக்கற்ற வார்த்தைகள்**
**அகப்படவில்லை எதுவும் (த.மூ.க.ப.44)**

என்கிறார். தான் வாழ்ந்த காலத்தில் பிறரிடத்தில் அன்பு காட்டி, தன் உணவைக் கூடக் காக்கைக் குருவிகளுக்கும் கொடுத்து மானுடத்தின் பெருமை உணர்த்தியவன் பாரதி. உயிர்களிடத்தில் அன்பு வேணும் என்று வாழ்ந்த பாரதியை உணராத சிலர் அவரைத் தூற்றியதை,

**பித்தர்கள் சிலர்**
**பிழைக்கத் தெரியாதவன் என்று**
**பிதற்றுகின்றனர் உன்னை (த.மூ.க.ப.44)**

எனப் பாடித் தமது வருத்தத்தைக் காட்டுகிறார்

இன்றைய காலகட்டத்தில் அரசியல் என்பது, எந்த ஒரு அடிப்படைத் தகுதியும் தேவைப்படாத ஏய்த்துப்பிழைக்கும் திறன் ஒன்றே முதன்மைத் தகுதி கொண்டதாக

ஆகிவிட்டது. ஆளும் கட்சியினராகவோ, அதிகார வர்க்கத்தின் அருகாமையில் இருப்பவராகவோ உள்ளவர்கள் தம்மைக் கண்டு பிறர் அச்சம் கொள்ளும் நபர்களாகவே நடந்துகொள்கிறார்கள். அன்றைய காலம் போல எந்நேரமும் எதிலும் பிறர் நலன் போற்றிய தலைவர்கள் மிக அரிதாகவே காணப்படுகிறார்கள். பாரதி வாழ்ந்த காலத்தில், நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்கு உழைத்தல் இமைப்பொழுதும் சோராதிருத்தல் எனப் பிறர் நலனுக்கு உழைக்கும் பெருமை கொண்டவராகவே வாழ்ந்தவர். தனி ஒரு ஆளாக, தன் கவிதைகளால் அனைவரையும் உசுப்பி விட்ட எழுத்து வீரனைக் கண்டு அஞ்சிய ஆங்கிலேய அரசு கைது செய்தது அதனை,

**உன்னைக்**
**கைது செய்தார்கள்**
**கவிதைக் குரலால்**
**அடிமைச் சங்கிலியை**
**அறுத்து விடுவாய் என்று**
**அச்சப்பட்டு (த.மூ.க.ப.79)**

என்று பெருமிதமாய்க் கூறுகிறார். பாரதி காட்டிய அரசியல் தூய்மை கண்டு உவகை கொள்ளும் கவிஞர்,

**உனக்குத்**
**தொண்டனாக இருப்பதில்**
**தொல்லைகள் இல்லை.**
**ஆள்பிடிக்கும் அவசியமில்லை.**
**தீக்குளிக்க வேண்டியதில்லை.**
**கோஷமிட்டுக் கைதட்டி**
**கொள்கையை விற்கும் வேலையில்லை (த.மூ.க.ப.79)**

என்கிறார்.

**ஆயுள் பூராவும் நீ**
**சேர்த்து வைத்த தெல்லாம்**
**வறுமையும்**
**பெருமையும் தவிர**
**வேறில்லை.**
**பினாமியின் பெயரில்**

**பித்தலாட்டம் செய்யவில்லை (த.மூ.க.ப.77-78)**

எனப் பாரதியின் புனிதம் உரைக்கிறார்.

**கண்ணம்மாவை நினைத்து நினைத்து**
**பன்னீராய்ப் பொழிந்தவன்**
**பெண்ணடிமையை எதிர்த்து எதிர்த்து**
**வெந்நீராய்க் கொதித்தான் (க.ந.கா.ப.37)**

**அவனது சுதந்திர தாகம்**
**'விடுதலை' என்ற**
**மூச்சு வார்த்தையில் தீர்ந்து விட்டது**
**பட்டினி கிடந்த**
**கவிதைக்குப்**
**பாரதி தான் ஜீவநதி (க.ந.கா.ப.36)**

**மழைதான் பாரதி**
**சில முகில்களுக்குள்**
**அவனை முடக்க முடியாது (க.ந.கா.ப.37)**

**மொத்தத்தில்**
**நீர்தான் பாரதி**
**அதைத் தீர்த்தமாக்கி**
**தேசமெங்கும் தெளிக்க வேண்டும். (க.ந.கா.ப.38)**

என்று பாரதியின் மேன்மையைப் பாராட்டியுரைப்பர்.

**மகாத்மா காந்தி**

காந்தி அண்ணல் என்பதன் மறு பெயர் எளிமை. அவருடைய எளிய திருவுருவும் இனிய புன்சிரிப்பும் எதிரிகளை வீழ்த்த உதவிய ஆயுதங்கள் எனலாம். கவிஞரும் மகாத்மா காந்தியைப் பற்றி,

**எளிமையும் வலிமையும் நிறைந்த ஒரு குரல்**
**எல்லோருக்கும் எளிதில் புரியும் திருக்குறள் (அ.வா.வி.எ.நி.ப.69)**

என்று பாடுவர்.

**லீ குவான் யூ**

தமிழ்மொழியைக் காலந்தோறும் தன் கவித்துவத்தால் காத்துக்கொண்டிருக்கும் தமிழ்மொழியைத் தமது சுவாசமாகவே நுகர்ந்து கொண்டிருக்கும் கவிஞர்களும் அறிஞர்களும் பற்பலர் ஆவர். தமிழால் தமிழர் வாழ்வதும், தமிழ் அறிஞர்களால் தமிழ் நாடோறும் பன்முகத்தான் வளர்வதும் மொழி வல்லுநர்கள் அறிந்த ஒன்றே. இதில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஒரு தமிழ் வேட்கையாளர் லீ குவான் யூ ஆவார். சிங்கப்பூரில் தன் ஆட்சி வல்லமையால் அந்நகரைச் செழிக்கச் செய்திருந்த லீ குவான் யூ தமிழின் மீது ஆறாப் பற்று உடையவர். அவர் தமிழின் உருவமாகவே கவிஞருக்குத் தெரிகிறார். இதனை,

**தமிழ்த்தாயை நேற்றிரவு**
**சிங்கையில் கண்டேன்**
**who are you என்றேன்**
**லீ குவான் யூ என்றார் (அ.வா.வி.எ.நி.ப.69)**

என்று பாடுவதன் மூலம் தமிழ் வேறு தான் வேறு என்று இல்லாமல் தானே தமிழாய் வாழ்ந்து தமிழ் காத்தவர் என்று லீ குவான் யூவைப் பாராட்டுகிறார் கவிஞர்.

**நடிகர் திலகம் சிவாஜி கணேசன்**

மனிதன் தன் வாழ்நாளில் சாதனைகள் பல செய்து தன் வாழ்நாள் முடிந்த பிறகு உலகோர் நினைத்துப் போற்றும் வண்ணம் அவனது உழைப்பும் செயல்களும் அமையுமானால் அது சாதனைச் சரித்திரமாக வரலாற்றில் நிலைத்து விடும். அவ்வகையில் தன் நடிப்பாற்றலால் தன்னை உலகிற்கு அறிமுகம் செய்து கொண்டவர் சிவாஜிகணேசன். இவரை 'நடிகர் திலகம்' எனத் தமிழ்த் திரையுலகம் அழைத்துப் பெருமிதம் கொண்டது. நெற்றியில் திலகமிட்டால் முகம் அழகு பெறுதல் போல நடிப்புத் துறைக்கே இவர் அழகூட்டியதால் நடிகர் திலகம் என அன்போடும் மரியாதையோடும் அழைக்கப்பட்டார்.

இவர் 1928 - ஆம் ஆண்டு அக்டோபர் 1ஆம் நாள் தஞ்சாவூரில் பிறந்தார். இவரது இயற்பெயர் விழுப்புரம் சின்னையா மன்றாயர் கணேசமூர்த்தி. சுருக்கமாக வி.சி. கணேசன் என அழைப்பர். இவர் திரையுலகிற்கு வருமுன்னர் மேடை நாடகங்களில் நடித்து வந்தார். சிவாஜி கண்ட இந்து ராச்சியம் என்ற நாடகத்தில் பேரரசர் சிவாஜியாக நடித்த கணேசனின் நடிப்புத்திறமையை மெச்சிய தந்தை பெரியார், அவரை சிவாஜி கணேசன் என்று அழைத்தார். அன்றிலிருந்து அந்தப் பெயரே நிலைத்தது. 1962 - ஆம் ஆண்டு சிவாஜி கணேசன் அமெரிக்க

அரசாங்கத்தின் கலாச்சாரப் பரிமாற்றம் திட்டத்தின் கீழ் அமெரிக்கா சென்ற முதல் நடிகர் என்ற பெருமை பெற்றார். அப்போதைய அமெரிக்க ஜனாதிபதி ஜான் எஃப் கென்னடி சிவாஜியைக் கவுரவப்படுத்தும் விதமாக அவரை ஒரு நாள் கௌரவ மேயராக நியமித்துப் பெருமைப்படுத்தினார்.

நடிகர்திலகம் கலைமாமணி விருது, பத்மஸ்ரீ விருது, பத்மபூஷன் விருது, செவாலியர் விருது, தாதா சாகிப் பால்கே விருது உள்ளிட்ட பல விருதுகள் பெற்ற பெருமைக்குரியவர். சென்னை மெரினா கடற்கரைச் சாலையில் சிவாஜி கணேசனின் சிலை அமைக்கப்பட்டுள்ளமை, இவரது நடிப்பாற்றலுக்கு அரசு செய்த மரியாதை எனலாம். இவர் நடித்த 'முதல் மரியாதை' திரைப்படம் மக்கள் மத்தியில் நீங்காத நினைவுக் காவியம். கவிஞரும் நடிகர் திலகத்திற்கு முதல் மரியாதை என்றே தன் கவிதையைத் தொடங்குகிறார். நல்ல குரல்வளம், தெளிவான உணர்ச்சிப் பூர்வமான தமிழ் உச்சரிப்பு, சிறந்த நடிப்புத் திறன் இவரின் சிறப்புகளாகும். எத்தகைய கதாபாத்திரம் என்றாலும் அப்பாத்திரத்திற்கு உயிர் ஊட்டி அவரை நம் கண்முன்னே கொண்டு வந்து விடுவதில் வல்லவர் என்பதை,

**உயிர் கொடுப்பது**
**இறைவன் என்கிறார்கள்**
**நீ**
**இறைவனுக்கும்**
**உயிர் கொடுக்கிறாய் (பொ.பெ.ம.ப.60)**

என இவரது மெய்மை நடிப்பைப் பற்றிப் புகழ்கிறார். மேலும் கலைஞர் கருணாநிதியின் கதை வசனத்தில் உருவான 'பராசக்தி' படத்தின் மூலம் திரையில் அறிமுகமான இவர் ஏற்று நடிக்காத கதாபாத்திரமே இல்லை எனும் அளவிற்கு வேறுபட்ட பல கதாபாத்திரங்களில் நடித்துச் சிறப்பித்துள்ளார். வீரபாண்டிய கட்டபொம்மன், வ.உ.சி. பகத்சிங், திருப்பூர் குமரன், சுபாஷ் சந்திரபோஸ் போன்ற சுதந்திரப் போராட்ட வீரர்களின் பெயர்களை உச்சரிக்கும் போதே நம் நினைவுத் திரையில் தோன்றும் முகம் இவருடையதாகவே இருக்கும். rpth[papd; ,j;jF rpwg;ig 'நடிகன்' என்ற ஒரு சொல்லால் அறிமுகமாகி, நடிப்புத் துறைக்கே ஒரு அடையாளமாகிப் போனார் என்றுரைப்பவர்,

**ஒரு வார்த்தையாய்**
**உள்ளே நுழைந்தாய்**
**அகராதியாய்**

**ஆகிப் போனாய் (பொ.பெ.ம.ப.60)**

என்று போற்றுகிறார். சிவாஜியின் உச்சரிப்பு அழகினை,

**உன் நாக்கு**
**உணர்த்திய பிறகுதான்**
**தமிழுக்கும்**
**அமுதென்று பேர் (பொ.பெ.ம.ப.60)**

என்று பாராட்டுகிறார். கயத்தாறில் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட இடத்தை விலைக்கு வாங்கி, அதில் தனது சொந்தச் செலவில் கட்டபொம்மனுக்குச் சிலை வைத்து நினைவுச்சின்னமாக்கிய பெருமைக்குரியவர் சிவாஜி கணேசன். 'சிம்மக் குரலோன்' என்பது இவருடைய இன்னொரு பட்டப்பெயர். இவரது கர்ஜனைக் குரல் கண்ட கலைஞர் தந்த பரிசு இது. எகிப்து அதிபர் கமால் அப்தெல் நாசர் இந்தியாவிற்கு வருகை தந்த போது, அவர் வீரபாண்டிய கட்டபொம்மன் படத்தில் ஆங்கிலேயர்களை விரட்டி அடிக்கும் ஆவேசமான கதாபாத்திரத்தில் நடித்த சிவாஜி கணேசனை நேரில் காண விரும்பிய பெருமையும் இவருக்குண்டு. இவரது நிமிர்ந்த நடையால் கலை உலகம் கம்பீரமாய் நடந்தது என்கிறார் கவிஞர். சிவாஜிகணேசன் நடிப்புத்துறையில் என்றைக்கும் நினைக்கப்படுவார் என்பதை.

**இந்தத் தலைமுறைக்கு**
**நாங்கள் இருப்போம்**
**எந்தத் தலைமுறைக்கும்**
**நீ இருப்பாய்! (பொ.பெ.ம.ப.61)**

எனப் பாடுவது மக்கள் மனதில் நடிப்பின் இமயமாக, நடிப்புச் சக்கரவர்த்தியாக சிவாஜி என்றைக்கும் நினைக்கப்படுவார் என்பதைப் புலப்படுத்தும்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார்**

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார் குறித்து,

**கவிஞர்கள் ஒவ்வொருவரும்**
**அவரவர்**
**உயர்வை நினைத்தே**
**எழுதினார்கள்**
**இவன் மட்டும் தான்**

**வியர்வை நனைத்து**

**எழுதினான்.**

**நிலவுக்கும்**

**ஆடைகட்டி**

**நாகரிகம் காத்தான்.**

**உலகத் தத்துவங்களை**

**தன் உழவுப் பாடல்களிலே**

**உரைத்தான். (க.ந.கா.ப.84-85)**

எனப் பாடுவா். பட்டுக்கோட்டையாரின் பாடல் சித்திரத்தின் அழகைத் தன் கவிதை வரிகளால் அழகுறச் சொல்கிறார். பட்டுக்கோட்டை என்ற ஊரையே தன் பெயராய் உலகம் உச்சரிக்கச் செய்த அந்த மாமேதையின் எண்ணத்தில் கருவெல்லாம் ஏழையின் சிரிப்பு, உழைப்பவனின் உயர்வு, சமுதாய மறுமலர்ச்சி இவை மட்டும்தான் என்றுரைப்பவர், உழைத்தால்தான் பற்றாக்குறையை ஒழிக்க முடியும் மக்கள் ஓய்ந்திருந்தால் நாட்டின் நிலைமை மோசமாக முடியும் எதற்கும் படிப்பு தேவை அதோடு உழைப்பும் தேவை எனப் பாடி உழைப்பின் மகத்துவம் உரைத்தார் பட்டுக்கோட்டையார். இத்தகைய பெருமை மிக்க கருத்தாழம் கொண்ட அவரது கவிதைகள் பற்றிக் கவிஞர்,

**காலங்கள்**

**கடந்தும்**

**அவன் பாடல்**

**நடக்கும்.**

**அந்தக்**

**கருத்துக்கள்**

**எந்நாளும்**

**மனசுக்குள்**

**கிடக்கும். (க.ந.கா.ப.89)**

என்று பட்டுக்கோட்டையாரின் பாடல்கள் நித்தியமானது என்று மகிழ்ந்து கூறுகிறார்.

**தன் உணர்வு**

படைப்பாளியின் உணர்வு கவிதைகளின் இடையே வெளிப்படும். ஆனால் கவிஞர் தங்கம் மூர்த்தியோ பல தன்னுணர்ச்சிக் கவிதைகளை வெளிப்படையாகவே படைத்துள்ளார். நம்முடைய வாழ்க்கை, தோற்றம் இவற்றைப் பற்றிய விமர்சனங்கள்,

நம்மைச் சில நேரங்களில் துன்புறுத்தவும், சில நேரங்களில் எரிச்சலூட்டவும் செய்கின்றன என்பதை,

**தாடி வளர்த்தேன்**
**காரணம் கேட்டார்கள்.**
**தாடியை**
**எடுத்து விட்டேன். (மு.பூ.ரோ.ப.51)**

என்கிறார்.

தன் விட்டுச் சூழலின் வழி தன் உணர்வுகளை அத்தகைய விருந்தினருக்குத் தன் உணவைக் கொடுத்து விட்டுத் தான் பட்டினி கிடப்பதில் ஆனந்தம் கொட்டிக்கிடக்கிறது என்கிறார் கவிஞர். அவ்வாறே அம்மா பொய்க் கோபத்தில் அடிக்க வருவதையும், குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கையில் தோற்பதையும், தான் ஆசையாய் வாங்கிய பொருளை யாரேனும் ஆசையாய் வாங்கிப் போவதையும், தான் மிகுந்த பிரயாசைப்பட்டு சேகரித்த புத்தகத்தை, நண்பர்கள் வேண்டும் என்பதற்காக விட்டுக் கொடுப்பதையும், உருப்பட மாட்டாய் என உரிமையோடு வீட்டினர் அர்ச்சனை செய்யும் தருணத்தையும் உண்மையான ஆனந்தம் பிறக்கும் இடமாக உருவகிக்கிறார் கவிஞர். (த.மூ.க.பக்.51-52)

**ஜன்னலைத் திற**
**வீட்டுக்குள் வரட்டும்**
**குயிலின் பாடல் (மு.பூ.ரோ.ப.68)**

என்னும் கவிதை மனிதனின் மன உணர்வுத்திறப்பிற்குரியதாக உள்ளது.

**தனிமை**

பிரிவு என்பது மனித வாழ்வினின்றும் பிரிக்க இயலாத ஒரு அங்கம். தற்காலத்தில் பணி காரணமாக மட்டுமின்றி படிப்பு காரணமாகவும் இல்லத்தாரைப் பிரியும் நிலைமையே பெரிதும் காணப்படுகின்றது. இப்பிரிவு துன்பம் தரும் செயலாக உள்ளதை,

**தனிமையில் இருப்பது**
**எவ்வளவு சுகமோ**
**அவ்வளவு கொடுமையானது**
**தனியாக இருப்பது (த.மூ.க.ப.104)**

என்கிறார். பேயோடாயினும் பிரிவின்னா என்னும் இன்னாநாற்பது கூற்று இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

**நிறைவேறாக் கனவுகள்**

ஒவ்வொருவர் வாழ்விலும் கனவுகள் உண்டு. அவரவர் வாழ்வில் நிறைவேறிய கனவுகள் ஊக்கம் தரும். நிறைவேறாத கனவுகள் மனதில் எப்போதும் ஆறாத நினைவுகளாய் நிலைத்திருக்கும். பலிக்காத கனவைப் பகல் கனவு என்பர். கவிஞர் அதனைப் படிதாண்டாக் கனவுகள் என்கிறார். வாழ்வில் முன்னேற்றம் குறித்த கனவுகளாய் ஏதோ ஒரு பணியில் அமர்வது பற்றிய கனவுகள் எல்லோருக்கும் இருக்கும். அந்த வகையில் கவிஞர் மருத்துவராக கட்டடக் கலைஞராக, ஆட்சியாளராகி மக்களிடம் மனு பெறுவதாக, அரசியல் தலைவராகி மேடையில் தோன்றுவதாக, வகுப்பு ஆசிரியருக்கே நல்லாசிரியர் விருது வழங்குவதாக எனப் பல்வேறு கனவுகள் கண்டு இன்றும் அக்கனவுகள் வகுப்பறைகளின் நிலைப்படி கூடத் தாண்டாமல் நிலுவையாகவே உள்ளது என வருந்துகிறார்.(த.மூ.க.பக்.73-74)

இதேபோல் தேவதைகளால் தேடப்படுபவன் என்னும் கவிதையில்,

**vd;idr;**
**re;jpf;f te;j**
**Njtijia**
**ahNuh flj;jptpl;lhh;fs;**
**Kd;nghUKiw**
**vd; Kfthp**
**njhiye;J Ngha;**
**vd;idr; re;jpf;fhkNy**
**nrd;Wtpl;l**
**mNj Njtij.**

**vd;dpUg;igf; fz;lwpe;J**
**vd; trk; te;JNrh;tjw;Fr;**
**rw;W Kd;dh;jhd;**
**ahNuh flj;jpapUf;fpwhh;fs;;.**

eyk; mwpe;jplNth

ew;nra;jpfs; nfhzh;e;Njh

Njtrigapd; gpujpepjpahfNth

vd; ftpawpe;J ifFYf;fNth

fhty; epw;fNth

,og;Gfis kPl;fNth

kdjwpe;J Njw;wNth

xU khpahij epkpj;jNkh

,Jtd;wpAk;

Ntnwnjw;fhfNth ,Uf;fyhk;

Njtijapd; tUif.

flj;jpath;fspd;

Nehf;fk;

vd;idr; rpijg;gjd;wp

Njtijiaf;

flj;Jtjy;y.

vd; vjphpfNsh>

VNjhnthU re;jh;g;gj;jpy;

vjphpfshf cUthfpath;fNsh>

gpd;njhlUk; JNuhfpfNsh

<Lgl;bUf;fyhk;

,f; flj;jypy;.

gioa Gjpa

vjphpfspd; tpA+fq;fs;>

JNuhfpfspd; rjptiyfs;>

,d;dgpw cj;jpfs;

vd

vk;KiwapYk;

Ntnwt;tifapYk;

**vJnthd;Wk;**
**nra;a KbahJ vd;id.**

**fhuzk; ehd;**
**Njtijfshy; Njlg;gLgtd;. (Nj.Nj.g.22)**

vd;W rfkdpjh;fshy; gy;NtW ghjpg;GfSf;F cs;shdhYk; jk; kdj;jplj;jhy; mj;jid jilfisAk; jfh;j;njwpAk; Mw;wy; jdf;Fz;L vd;Dk; ftpQhpd; kdcWjpia ,f;ftpij vLj;Jiuf;fpd;wJ.

kdpjh;fs;; cah;jpizaha; ,Ue;Jk; m/wpizfis tplf; fPohd Fzj;Jld; ,Uj;jiy>

**,iuapLk;**
**xt;nthU NtisAk;**
**tha; jpwe;jioj;J**
**tuNtw;Wj; Js;Sfpd;wd**
**fz;zhb ePhpd;**
**tz;z kPd;fs;.**

**ePUw;Wk;**
**xt;nthU ehSk;**
**nky;yj;jiy rha;j;J**
**NkdpAurp**
**jsph;fsha;r; rphpf;fpd;wd**
**Njhl;lnkdj; Njhd;Wk;**
**njhl;br; nrbfs;.**

**thry; tUk;**
**xt;nthU NeuKk;**
**clYjwp vOe;J**
**thyhl;b epd;W**
**thQ;iraha;r; rpZq;Ffpd;wd**
**XukpUe;J fhtypUf;Fk;**

**nry;yg; gpuhzpfs;.**

**thfdg; gazj;jpd;**
**xt;nthU KiwAk;**
**Ner xypnaOg;gp**
**rpwfirj;J**
**topaDg;Gfpd;wd**
**tof;fkha; fpisfspy;**
**te;jkUk; gwitfs;.**
**Nenujphpy; fz;L**
**ifFYf;fp tho;j;Jk;**
**tha;g;gpUe;Jk;**
**tpiue;J flg;gijg;Nghy;**
**tpyfp elf;fpwhd;**
**md;gpw; rpwe;j**
**MwwpT ez;gd;. (Nj.Nj.gf;.25-26 )**

vd;Dk; ftpij fhl;rpg;gLj;JfpwJ.

ftpQh;fSf;F vg;nghOJk; jd;khd czh;Tz;L. ftpQh; jq;fk; %h;j;jpapd; jd;khd czh;T>

**Mrphpah;**
**Kjy;th;**
**jhshsh;**
**ftpQh;**
**Ngr;rhsh;**
**vOj;jhsh;**
**fhjyh;**
**fzth;**
**mg;gh**
**ez;gh;**
**gifth;**

**ey;yth;**

**nfl;lth;**

**gjtpfs;**

**nghWg;Gfs;**

**Gfo; khiyfs;**

**tpkh;rdq;fs;**

**,g;gb**

**gy Kfq;fspy;**

**gtdp te;jhYk;**

**xU KfKk;**

**cUg;gbahapy;iy vd;W**

**xUehs;**

**MWKfk; nrhd;dhd;**

**mjdhnyd;d…!**

**Kfq;fsw;W gyh;**

**Kd;dpw;gij**

**mwpthdh me;j**

**MWKfk;……(v.g.eh.gf;.82-83)**

vd;W ftpijaha; ntspg;gl;Ls;sJ.

ehd; vd;Dk; ftpijapYk;>

**ehd;**

**,uTfspy;**

**mOjJjhd;**

**mjpfk;.**

**vd; ,d;gnkyhk;**

**miunehbapy;**

**KbAk;.**

**vd; rhjidapd;**
**fij KOtJk;**
**mtkhdk;.**

**ehd;**
**rj;jkpLk;**
**rUFfspd;**
**milahsk;.**

**ehd; Ntjidapd;**
**csp tbj;j**
**rpw;gk;.**
**ehd;**
**ntWe;jiuapy;**
**fpIf;fpd;w**
**njg;gk;.**
**ehd; E}ypUe;Jk;**
**jpiuawpahg;**
**gl;lk;.**

**ntWk;**
**Eiufspdhy;**
**myq;fhpj;j**
**rl;lk;.**
**ehd;**
**fhynkDk;**
**ngUq;flypy;**
**XhpwF.**
**Row;**
**fhw;wbj;Jj;**
**jtpj;jhYk;**
**jdpaoF.**
**RLk;**

**ghiytd**
**neLkzypy;**
**ehd; trpg;Ngd;.**
**ftp**
**gilg;gjdhy;**
**tho;f;ifapid**
**ehd; n[apg;Ngd;. (Nj.Nj.gf;.45-46)**

vj;jid ,ilA+Wfs; Jd;gq;fs; te;jhYk; jd;dhy; ntw;wpngw ,aYk; vd;Dk; ftpQupd; ngUkpjf;$w;W ,f;ftpijiag; gbf;Fk; xt;nthUtUf;Fk; ce;Jjyha; cs;sik Rl;Ljw;FupaJ.

**காலம்**

காலம் என்ற சொல் எக்காலத்திற்கும் முக்காலத்திற்கும் பொருந்தக்கூடியது. நிகழ்காலம் இறந்த காலம் ஆகும். இறந்த காலம் மீண்டும் நிகழக் காத்திருக்கும் எதிர்காலமாகத் திரும்ப வரும். ஆக காலம் மட்டும் எப்போதும் மீண்டும் மீண்டும் தோன்றித் தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது என்கிறார் கவிஞர். மாற்றம் ஒன்றே மாறாதது என்பதைப் போலக் காலம் மட்டும் என்றும் இளமையாக இருப்பதை,

**காலம் தோறும்**
**இளமையாய்க்**
**காலம் மட்டுமே**
**இருக்கிறது (எ.ப.நா.ப.76)**

என்று சற்று அழுத்தம் கொடுத்து உறுதிப்படுத்துகிறார்.

**கால மரணம்**

ஒரு துக்கச் செய்தியை அறிவிக்கும் அறிவிப்பாளன் ஒருவனின் செயல் பற்றி,

**காற்றில் பரவும்**
**அந்தக் குரலில்**
**ஒரு கம்பீரம் இருக்கும்**
**நின்று நிறுத்தி**
**நிதானமாய் அறிவிக்கும்**

**அவனை அலட்சியப்படுத்தி**
**யாரும் கடந்துவிட முடியாது (எ.ப.நா.ப.37)**

என்று அவனது தொழில் நேர்த்தியைப் பாராட்டியுரைப்பர். மேலும், யாரோ செத்து நான் பிழைக்கிறேன் என்று சிரித்த அவ்வறிவிப்பாளன் இறந்தபொழுது அவனது நிலையை,

**எல்லார் சாவையும் சொல்ல**
**இவன் ஒரு ஆளா இருந்தான்**
**இவன் சாவைச் சொல்ல**
**ஒருவரும் இல்லை**
**திரும்பி வரும் வழி எல்லாம்**
**அவன் குரல்**
**ஒலித்துக்கொண்டே இருந்தது.**
**அவனது மரணத்தை**
**அவனே அறிவிப்பது போல (எ.ப.நா.ப.38)**

என்று கவிஞர் கூறுவது வாழ்க்கை பணம் படைத்தவர்களுக்கு ஒன்றாகவும் ஏழைகளுக்கு ஒன்றாகவும் உள்ளதைப் புலப்படுத்துகிறது.

**சுயநலவாதிகள்**

மக்களில் சிலர் ஒருவரைக் காரியம் ஆகும்வரை நன்றாக உபயோகித்துக் கொண்டு, வேலை முடிந்ததும் அவர்களைக் கண்டு கொள்ளாமல் இருப்பர். இத்தகுநிலையை கண்டு மனம் வருந்தி,

**ஓவியக் கண்காட்சியில்**
**ஓரமாய்க் கிடந்தது**

**தூரிகை (மு.பூ.ரோ.ப.66)**

எனப் புனைந்துரைப்பர்.

**மனிதநேயம்**

கவிஞர் தங்கம்மூர்த்தி வில்லுக்கு விசயன் பற்றி எழுதிய கவிதை கவிஞரின் மனிதநேயப்பண்பை புலப்படுத்துவதாக உள்ளது.

**அந்தப்**

**பறவையை**

**நினைத்துப்**

**பரிதாபப்படுவேன்.**

**கொல்பவன்**

**அருச்சுனனாயிருந்தாலும்**

**அரசனாயிருந்தாலும்**

**நான்**

**அனுமதிக்க மாட்டேன். (க.ந.கா.ப.98-99)**

என்கிறார் கவிஞர்.

**குப்பைக்காரி**

வீட்டில் அன்றாடம் நாம் பார்க்கும் பலதரப்பட்ட பணிகளால் சமையல் அறை, படிக்கும் அறை, படுக்கையறை இப்படி எல்லா இடங்களிலும் வேண்டாத பொருட்கள் (குப்பைகள்) சேரும். அவற்றை எல்லாம் நாம் ஒரு பெட்டியிலோ, கூடையிலோ, பையிலோ சேகரித்து வெளியில் கொட்டுவது (பொதுவான ஒரு குப்பைத்தொட்டி ஒவ்வொரு தெருவிலும் இருக்கும்) சில ஆண்டுகளுக்கு முன்பு வரை இருந்த வழக்கம். ஆனால் அந்த குப்பை உடனே நகராட்சித் துப்புரவாளர்களால் அப்புறப்படுத்தப்படாமல், சுகாதாரக் கேட்டிற்கு வழிவகுக்கும். எனவே தற்போது குப்பைகளைச் சேகரிக்கும் பணியில் அதிக நபர்கள் அமர்த்தப்பட்டு, வாசலில் நின்று குரல் கொடுப்பது அல்லது விசில் சத்தம் எழுப்பி குப்பைகளை எல்லாம் ஒரு நகரும் வண்டியில் சேகரித்துச் செல்வது என்பது வழக்கமாகி உள்ளது. ஆனால் இந்த நடைமுறையில் ஒரு கவித்துவ நோக்கைக் காண்கிறார் கவிஞர். குப்பைகளை அகற்றுபவளுக்கு ஏன் 'குப்பைக்காரி' என்று பெயர் சூட்டுகிறோம் என வினவுகிறார். அவள்

**வீட்டருகே வரும்போதே**

**எட்டிப் பார்த்தபடி**

**என் மகள் சொல்லிவிடுவாள்…**

**அம்மா…**

**குப்பைக்காரி என்று**

**'குப்பைக்காரி'**

**எனும் பெயர்**

**குப்பைகளைச்**

**சேர்ப்பவருக்கா...**

**குப்பைகளை**

**அகற்றுபவருக்கா (எ.ப.நா.ப.84)**

எனப் பெயர்க்காரணம் வினவுகின்றார். குப்பைகளைச் சேர்ப்பவனுக்கும் அகற்றுபவனுக்கும் செயலில் வேறுபாடு உள்ளது. இந்த நுண்ணுணர்வைச் சுட்டிக் காட்டுபவராய், நம் குப்பைகளை எடுத்துச் சென்று நம் இல்லம் சுத்தமாக இருக்கத் துணை புரிபவளைக் ‘குப்பைக்காரி’ எனச் சுட்டுவதில் கவிஞருக்கு உடன்பாடில்லை. அதனால்,

**சொல்லின் பொருள்**

**புரியாதபடி**

**நானும் சேர்க்கிறேன்**

**குப்பைகளை**

**தினம் தினம் (எ.ப.நா.ப.85)**

என முடிக்கிறார். பொதுவாக துப்புரவு பணியில் ஈடுபடுபவர்களின் சேவை, நாம் உணர்ந்து பாராட்டத்தக்கது என்பதே உண்மை. அவர்கள் உழைப்பினால் நம் சுற்றுப்புறம் தூய்மை ஆகிறது. துணி வெளுக்கும் வண்ணான், முடிவெட்டும் நாவிதன், துப்புரவுத் தொழிலாளி இவர்கள் யாவரும் நம் நிம்மதியான, தூய்மையான வாழ்க்கைக்குத் தோழர்கள் என்பதை உணர்ந்து நாம் அவர்களையும் மதிக்க வேண்டும் என்று தன் உள்ளத்து உணர்வை அப்படியே இதில் பதிவு செய்துள்ளார். தீ நுண்மிக் காலகட்டத்தில் எல்லோரும் துப்புரவுப் பணியாளர்களைப் போற்றினோம். கவிஞரோ 2010 ஆம் ஆண்டே இவர்தம் பணியைப் பாராட்டிக் கவிதை புனைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

- ❖ தங்கம் மூர்த்தி அவர்களின் கவிதைகளில் காணலாகும் பாடுபொருள் இயற்கை, காதல், குடும்பம், சமூகம், தன்உணர்வு என்னும் பொருண்மைகளில் அமைந்துள்ளன.
- ❖ உலகின் மூலாதாரங்களாகிய ஐம்பெரும்பூதங்கள், அவற்றின் இயக்கம், கடல் மற்றும் நிலத்தில் வாழும் உயிரினங்களின் செயல்கள், அவற்றின் மூலம் மனித குலத்திற்கு அறிவுறுத்தப்படும் செய்திகள் போன்றவை இயற்கை எனும் பாடுபொருளில் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ மனிதர்தம் வாழ்வில் இரண்டறக்கலந்த காதல் உணர்வு குறித்தும் பல கவிதைகள் காணப்பெறுகின்றன. இதில் காதலனது, மனவுணர்வு காதலியின் நலம் புனைந்துரைத்தல், காதலியின் கடிதத்தைப் பாதுகாப்பதற்காகத் தனக்குப் பிடித்த மழையில் நனையாதிருத்தல், காதலியின் பிரிவால் வருந்துதல், காதல் போயின் சாதல் எனக் காதலின் பல்வேறு பரிணாமங்களையும் கவிதையாக்கியுள்ளார்.
- ❖ கவிஞரின் குடும்பம் குறித்த பார்வையில் தாய்மையின் பங்களிப்பு, ஒரு தந்தையின் மன உணர்வு, குழந்தைச் செல்வத்தால் பெறும் குதூகலம், காதல் தரும் களிப்பு, இல்வாழ்க்கையில் கிடைக்கும் இன்பம் மற்றும் இடர்கள் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ சமூகத்தில் நிலவும் சுகாதாரக் கேடான சூழல்கள், சாலைகள், மருத்துவமனைகள், பேருந்துகள் எனப் பொதுச் சொத்துக்கள் யாவும் பராமரிப்பின்றி மக்களின் பயன்பாட்டிற்கு ஏற்ற வகையில் இல்லாத நிலை, அரசியல் அவலங்கள், மகளிர் தம் திருமணத்தில் அவர்களை அச்சுறுத்தும் மணக்கொடை, சாதி, மத பேதங்களால் உண்டாகும் பிரச்சினைகள், போன்றவை சமூகம் எனும் தலைப்பில் விளக்கப் பெற்றுள்ளன.
- ❖ மரங்கள், பறவைகள் போன்ற ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை உள்ள உயிரினங்கள் கூடத் தன் பயன்பாட்டால் பிறர்க்கு உதவும் தன்மை, சக உயிர்களை மதிக்கும் போக்கு போன்றவை கவிஞரால் மிகச்சிறப்பாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. அ∴றிணைகளைக்கண்டு உயர் திணையாகிய மனிதர்கள் பாடம் கற்க வேண்டும் என்கிறார் கவிஞர்.
- ❖ தம் அரிய படைப்புகளால், தன் சீரிய சிந்தனைகளால் உலகிற்குப் பங்களிப்புச் செய்த வள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், பாரதி, காந்தியடிகள் போன்றவர்களைப் பற்றி எழுதியுள்ள கவிதைகள் இன்றைய சமூகத்திற்குப்

பெரிதும் பயன்படுவனவாய் உள்ளன. ஆயுதங்களும், மலர்களும், நதிகளும் தமக்குள் மாநாடுகள் நிகழ்த்தி, மனிதர்கள் கொள்ள வேண்டிய கொள்கை உறுதிகள் பற்றி நமக்கு உரைப்பதாகக் கவிஞர் படைத்துள்ளமை மாந்தர் குலம் மனம் கொள்ள வேண்டிய செய்தியாகும்.

- ❖ காலந்தோறும் காலம் மட்டும் என்றும் இளமையாய், தன்னைப் புதுப்பித்துக் கொண்டு, சூழலுடன் கைகோர்த்துச் செல்வதைச் சுட்டிக்காட்டும் கவிஞர் இதன்வழி உலகத்தோடு ஒட்ட ஒழுகலின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார்.
- ❖ சூர்ப்பனகை குறித்த கவிதை அவளைத் திருந்தியவளாகக் காட்டுவதுடன், தன் அண்ணனின் சாயலில் அநேக ஆண்கள் காணக் கிடைப்பதாகவும் கூறுவது சமுதாயம் பாழ்பட்டுள்ள நிலையையும் பிறன்மனை நோக்காப் பேராண்மை எனும் ஒழுக்க நெறியின்மையையும் வெளிப்படுத்துகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. மா.கோவிந்தராசு, புதுக்கவிதைக் கட்டமைப்பு, ப.81.
2. jpUf;Fws; - 527.
3. NkyJ - 1128.
4. ghujpjhrd; ftpijfs;.g.4.
5. jpUf;Fws; - 1147.
6. t.Rg.khzpf;fdhh;> jkpo;f;fhjy;> g.182.
7. ,uh.,uhNre;jpud;> GJf;ftpij ,yf;fzk;> E}w;gh.110.
8. jpUf;Fws; - 60.
9. mfehD}W - 66:1-5.
10. jpUf;Fws; - 336.
11. f;hpahtpd; jw;fhyj; jkpo; mfuhjp g. 585.
12. GwehD}W - 204:1-2.
13. GwehD}W - 173:11-12.
14. ghujpahh; ftpijfs; g.251.
15. %Jiu - 17.
16. ghujpjhrd; ftpijfs; - mofpd; rphpg;G. g.33.
17. jpUf;Fws; - 751.
18. ,uh.,uhNre;jpud; GJf;ftpij ,yf;fzk;> E}w;gh. 108.
19. ew;wpiz - 149:1-3.
20. t.Rg.khzpf;fdhh;> jkpo;f;fhjy;> g.182.
21. ,uh.,uhNre;jpud;> GJf;ftpij ,yf;fzk;> E}w;gh.135.
22. jpUf;Fws; - 1033.
23. ghujpahh; ftpijfs;.g.160.

## இயல் மூன்று

## தங்கம் மூர்த்தி கவிதைகளில் இலக்கிய உத்திகள்

கவிதையின் உருவத்தில் கவிஞனின் மொழிப் பயன்பாடாகிய வடிவ அமைப்பும் கவிதையில் உள்ளடக்கத்தில் கவிஞனின் சூழலுக்கு ஏற்ப நுவல்பொருளைப் படைக்கும் ஆளுமையும் அனுபவமும் வெளிப்படுகின்றன எனின், கவிஞனின் மொழித் திறமையும் ஆளுமையும் உத்தியைச் சிறப்பாகக் கையாள உதவுகின்றன. புதுக்கவிதைகளில் உருவ, உள்ளடக்கங்களில் புதுமையைக் கையாண்டது போலவே கருத்தை வெளிப்படுத்தும் முறையிலும் கவிஞர்கள் புதுமையைக் கையாண்டுள்ளனர். ஏனெனில் கருத்துப் புலப்பாட்டில் கையாளப்பெறும் உத்திகளே கவிதைகளைக் கூர்மைப்படுத்துகின்றன என்பதால் படைப்பாளர்களும் இதில் கவனம் செலுத்துகின்றனர். அவ்வகையில் கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் காணலாகும் உத்திமுறைகளைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### உத்தி - சொல்லும் பொருளும்

ஒரு நூலில் அமையும் உத்திகள் குறித்துத் தொல்காப்பியர்,

**ஒத்தகாட்சி உத்திவகை விரிப்பின்**
**நுதலியது அறிதல் அதிகார முறையே**
**தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறுத்தல்**
**மொழிந்த பொருளொடு ஒன்ற வைத்தல்**
**மொழியாததனை முட்டு இன்றி முடித்தல்**
**வாராததனான் வந்தது முடித்தல்**
**வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்**
**முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றே**
**ஒப்பக் கூறல் ஒருதலை மொழிதல்**
**தன் கோள் கூறல் முறை பிறழாமை**
**பிறன் உடன்பட்டது தான் உடம்படுதல்**
**இறந்தது காத்தல் எதிரது போற்றல்**
**மொழிவாம் என்றல் கூறிற்று என்றல்**
**தான் குறியிடுதல் ஒருதலை அன்மை**
**முடிந்தது காட்டல் ஆணை கூறல்**
**பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்**
**தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்**

**மறுதலை சிதைத்துத் தன் துணிபு உரைத்தல்**
**பிறன் கோள் கூறல் அறியாது உடம்படல்**
**பொருள் இடையிடுதல் எதிர் பொருள் உணர்த்தல்**
**சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்**
**தந்து புணர்ந்து உரைத்தல் ஞாபகம் கூறல்**
**உய்த்துக் கொண்டு உணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்**
**சொல்லிய அல்ல பிற அவண் வரினும்**
**சொல்லிய வகையான் சுருங்க நாடி**
**மனத்தின் எண்ணி மாசுஅறத் தெரிந்துகொண்டு**
**இனத்தின் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்**
**நுனித்தகு புலவர் கூறிய நூலே**[1]

என்னும் முப்பத்திரண்டைக் குறிப்பிடுவர். பவணந்தி முனிவரும் இதையே வழிமொழிவர்.[2] நூலிற்குச் சொல்லப்பட்ட இவ்வுத்திகளில் சில, கவிதைக்கும் பொருந்துவனவாகும். புதுக்கவிதைக்குரிய உத்திகளை இராசேந்திரன்,

**உத்திதானே**
**படிமம் குறியீடு அங்கதம் மீமெய்ம்மை**
**முரணே தெளிவென இருமூ வகைத்தே.**[3]

என்று உரைப்பர். இதன்வழி படிமம், குறியீடு, மீமெய்ம்மை, அங்கதம், முரண், தெளிவு என்னும் ஆறும் புதுக்கவிதைக்குரிய உத்திகள் என்பது புலனாகும்.

சு.பொன்னியின் செல்வன், "நடை, ஓசைநயம், உவமை, உருவகம், முற்றுருவகம், படிமம், குறியீடு, கற்பனை, மரபு மாற்றம், அங்கதம், உரையாடல் உத்தி, மடல் உத்தி, கேள்வி-பதில், முரண், சொல் விளையாட்டு, நகைச்சுவை, பழமொழி, தொன்மம், இலக்கணம், வரலாறு, இலக்கிய உத்தி, தலைப்பு, நூல் தலைப்பு, இயற்கை ஆளுமை, அழகியல், முன்னோர்மொழி"[4] என்னும் இருபத்தாறை புதுக்கவிதைக்குரிய உத்திகளாகக் கூறுகின்றார்.

இதுமட்டுமன்றி கதை கூறும் உத்தி, வினாவிடை உத்தி, வருணனை உத்தி, கடித முறை உத்தி, திரும்பக் கூறல், இரட்டைச் சொற்கள், சொல் அடுக்கி வருதல், தொடர் அடுக்கி வருதல், மேற்கோள் காட்டல், விடுகதை, பழமொழி, நாட்டுப்புறக் கூறுகள் முதலானவையும் புதுக்கவிதையின் உத்திகளாக அமையும். எனவே

புதுக்கவிதைக்கான உத்திகளின் வகைப்பாட்டு வரையறை முடிந்த முடிபன்று. படைப்பாளியின் கற்பனையாற்றலுக்குத் தக இது மாறுபடும்.

கவிஞர் தங்கம் மூர்த்தி கையாண்டுள்ள உத்திகளை உவமை, உருவகம், கற்பனை, வருணனை, தொன்மம், குறியீடு, அங்கதம், வினா-விடை முறை, காட்சிப்படுத்தல், கடித முறை உத்தி என்னும் அடிப்படையில் வகைப்படுத்த இயலும்.

**நடை**

ஒரு படைப்பாளனின் கவித்துவத்தை மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது 'நடை' ஆகும். நடையை "ஆடை உடுத்தி வந்த கருத்து, படைப்பாளனின் பண்பு நலன்களை, அறிவின் விசாலத்தை, ஆழ்ந்த சிந்தனையைப் பலப்படுத்தும் ஓர் அடையாளம்"[5] என்று கூறுவர் ந.பிச்சமுத்து.

**எதுகை உத்தி**

தங்கம் மூர்த்தியின் படைப்புகள் பெரும்பான்மை ஹைக்கூ என்னும் குறும்பா வகையின. இக்கவிதைகளில் பெரும்பாலானவை எதுகை நயத்துடன் அமைந்து கவிச்சுவையை மிகுவிக்கின்றன. அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவருவது எதுகையாகும்.

**ஓரப் பார்வை கூடத்**
**தூரப்பார்வையாய் (க.ந.கா.ப.55)**

**கத்தியின்றி**
**ரத்தமின்றி (க.ந.கா.ப.55)**

**குழந்தைகளை**
**குழந்தைகளாகப் போற்றுவோம். (க.ந.கா.ப.55)**

**பாதி குளங்களில்**
**மீதி குளங்களில் (க.ந.கா.ப.55)**

**மனிதநேயமும்**
**மனிதர்களிடத்தில்**
**மனித குணங்களும்**
**மனிதனிடத்தில் (பொ.பெ.ம.ப.32-33)**

**குழந்தை மொழியைக்**
**குழல் என்கிறார்கள் (பொ.பெ.ம.ப.32-33)**

**நகம் காக்க**
**முகம் காக்க (பொ.பெ.ம.ப.39)**

என்னும் கவிதைகள் சிறந்த சான்றாகும்.

**மோனை உத்தி**

அடிதோறும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது மோனை ஆகும். கவிஞர் பல பாடல்களில் மோனை நயம் அமைத்துப் பாடியுள்ளார் சான்றாக,

**நல்ல பேருந்து**
**நல்ல அரசாங்கம் (பொ.பெ.ம.ப.44)**

**அகோரப் பசி**
**அலைகளின் வாய்களில் (பொ.பெ.ம.ப.41)**

**வாக்கியங்களுக்கு இடையில்**
**வார்த்தைகளில் (க.ந.கா.ப.69)**

**பக்கங்கள் தோறும்**
**படபடக்கும். (க.ந.கா.ப.69)**

**விழுதுகளுக்கு**
**விருதுகள் கொடுப்போம். (க.ந.கா.ப.109)**

என்பன அமையும்.

**இயைபு**

ஓரடியில் வந்த சொல்லோ, தொடரோ அல்லது அடியோ மீண்டும் அமையப் பாடுவது இயைபு ஆகும். கவிஞரின் படைப்புகள் பல இடங்களில் இயைபு நயத்துடன் அமைந்துள்ளன. ‘காகிதம் ஓர் ஆயுதம்’ எனும் தலைப்பில் பணம் தன்னை ஒரு பெண்ணாகப் பாவித்துக் கூறும் கவிதையில்,

**ரிசர்வ் வங்கி**
**என் தாய்வீடு**

**மற்ற வங்கிகள்**
**நான் புகுந்த வீடு (க.ந.கா.ப.52)**

எனவும், அம்பானி வீடு, ஏழையின் வீடு, சின்ன வீடு, நம்ம வீடு என்று ஒவ்வொரு அடியிலும் இறுதிச் சொல் இயைந்து வரத் தொடுத்துள்ளார். பிறக்க வேண்டும், இறக்க வேண்டும், அமுதாக வேண்டும், விஷமாக வேண்டும் (க.ந.கா.ப.58-59) கலைகள் வளர்த்தோம், அறிவியல் வளர்த்தோம், அன்பினை வளர்த்தோம், கல்வியை வளர்த்தோம், (க.ந.கா.ப.58-59) எனக்குப் பிடிக்கும், எனக்குப் பிடிக்காது (க.ந.கா.ப.35-36) எனவும் வந்த தொடர்களே திரும்பவும் அமையும்படிப் பாடலை அமைத்துள்ளார். அறிவொளி எமக்கு என்னும் தொடர் அடியின் முதலில் பல முறை வருமாறும் கண்ணாடி என்னும் சொல் அடியின் இடையில் பல முறை வருமாறும் (த.மூ.க.ப.32) இயைபு நயம் அமையப் பாடியுள்ளார்.

**சொல் முரண்**

முரண் சொற்களைக் கவிஞர் தம் பாடல்களில் பல இடங்களில் அமைத்துப் பாடியுள்ளார். சொல் முரணாக 'நானும் நண்பர்களும்' எனும் தலைப்பிலான கவிதையில்,

**நண்பர்களில் தான்**
**சிலர் வள்ளல்கள்!**
**சிலர் கருமிகள்! (த.மூ.க.பக்.27-28)**

என்று வள்ளல்களுக்கு எதிர்ப்பதமான கருமிகள் என்னும் முரண் சொற்களை அமைத்துப் பாடியுள்ளார். 'அழகு' எனும் தலைப்பில் அமைந்த

**ஏழை மனக் கோட்டையில்**
**எங்கோ ஒரு குடிசையில் (த.மூ.க.பக்.29)**

என்னும் கவிதையில் 'கோட்டை', 'குடிசை' என்னும் முரண் சொற்கள் இடம்பெற்றுள்ளன.

**கருத்து முரண்**

முரண்பட்ட கருத்துகளை இயைபு பட எடுத்துரைப்பது கருத்து முரணாகும். முதலுதவிப் பெட்டி என்பது மிக அவசரமான, ஆபத்துக் காலத்தில் உடனடியாக

சிகிச்சை செய்வதற்கான மருந்து வகைகள், உபகரணங்கள் கொண்டதாக இருக்கும். ஆனால் நடைமுறையில் அவ்வாறு இல்லாத நிலையை,

**பேருந்தில் இருக்கிற**
**முதலுதவிப் பெட்டி**
**இறக்கிற நிலையில் (மு.பூ.ரோ.ப.21)**

என்று உரைக்கிறார். முதலுதவிக்கு உள்ள மருந்துகள் காலாவதியானதாகவும், உபகரணங்கள் பயனற்றதாகவும் இருக்கும் அவலத்தை, உயிர் காக்கும் பெட்டி அதுவே காக்கப்பட வேண்டிய நிலையில் இருப்பதை முரண்சுவையில் இரண்டே வார்த்தைகளில் அழுத்தமாகச் சுட்டுகிறார்.

**மருத்துவமனையில்**
**ஆரோக்கியமாய்**
**கொசுக்கள் (மு.பூ.ரோ.ப.46)**

**கலவரத்தில்**
**வீடுகள் எறிந்தபின்**
**ஃபீனிக்சாய் சாதிகள்.(மு.பூ.ரோ.33)**

**மகளின் கண்ணீர்**
**துடைத்தாள் தாய்,**
**தான் அழுதுகொண்டே. (த.மூ.க.ப.33)**

என்பன முரண்சுவைக்குச் சிறந்த சான்றுகளாகும்.

ஒரு முக்கிய அமைச்சரின் வருகைக்கு முன்னும் பின்னும் வீதிகளின் நிலையை அலங்கரித்த மணமகளுக்கும் விதவைக்கும் ஒப்புமைப்படுத்தும் இடத்தும் முரண்களைக் காட்டுகிறார். (த.மூ.க.ப.89)

**ஏர்-இந்தியா பணிப்பெண்**
**இறங்கி வந்து கொண்டிருந்தாள் -**
**பறந்து கொண்டிருந்தார்கள் பலர் (த.மூ.க.ப.56)**

என முரண் சொற்களை அமைத்து இன்பச் சுவை கூட்டுகிறார்.

சமுதாயத்தில் நிலவும் அவலங்களை முரண் சுவையில் விளக்குகிறார். அரசியல்வாதிகள் வீண் ஆடம்பரத்திற்காக, மேடை அலங்காரம் செய்து, மக்களின் பணத்தை மறைமுகமாகச் சுரண்டித் தம்மைக் கௌரவப்படுத்திக் கொள்வதை,

**இருட்டிக் கிடந்த ஊருக்கு**
**வெளிச்சம் வந்தது.**
**வெளிச்சம் வந்த மறுநாளே**
**இருட்டிப் போனது (த.மூ.க.ப.89)**

என்றும், நோய் தீர்க்கும் மருத்துவமனைகள் நோய்களுக்குச் சொர்க்கமாகவும், நோயாளிகளுக்கு நரகமாகவும் இருப்பதைச் சாடுகிறார். முன்னேற்றத்தை நோக்கிப் பல படிகள் தாண்டி வந்த நாட்டில் பட்டினிச்சாவுகள் அதிகம் என்பதை

**ஒளிர்கின்ற இந்தியாவில்**
**வளமான தமிழ்நாட்டில்**
**பட்டினி (பொ.பெ.ம.ப.51)**

என உரைக்கின்றார். தேசம் வெளிச்சத்தில் இருட்டில் மனிதர்கள்(த.மூ.க.ப.89) வெள்ளையடிக்கின்றார்கள் இருட்டின் விளம்பரம் எழுத (பொ.பெ.ம.ப.51) நாய்கள் குரைக்கின்றன நிலாவைப் பார்த்தும் (பொ.பெ.ம.ப.43) எனவும், குடந்தையில் பள்ளிக குழந்தைகள் கவனமின்றி நடத்தப்பட்ட அவலத்தை, சிரிக்க வேண்டியவர்கள், எரிக்க வேண்டியவர்கள் (பொ.பெ.ம.ப.38) எனவும் கர்ணன் - கஞ்சன் (க.ந.கா.ப.58) ரோடு போட்டார்கள், ரோடு போடவில்லை (மு.பூ.ரோ.ப.77) என்பன போன்ற கவிதைகள் முரண் சுவையில் சமுதாயச் சீர்கேடுகளைப் பேசுகின்றன.

பாரதியைப் பாடுகையில் நீ சேர்த்ததெல்லாம் வறுமையும் பெருமையும் (த.மூ.க.ப.78) எனவும்

மகாத்மாவின் பெருமையை அவரது குரலில் எளிமையும் வலிமையும் (அ.வா.வி.எ.நி.ப.69) எனவும் மிக நேர்த்தியாக முரண் சொற்களால் அலங்கரிக்கிறார்.

காகங்கள் கிளிகள் இவற்றை ஒப்பிட்டு அவற்றின் குணங்களில் காணப்படும் முரண்களைக் கூறுதல், கடல் மீன்களின் குரலாகக் கடலில் நீந்தி விளையாடுவது அவை செய்த புண்ணியம் எனவும் மீனவர்களாய் கடலில் மீன்பிடித்தல் அவர்கள் செய்த பாவம் (அ.வா.வி.எ.நி.113) எனவும் கூறும் இடங்களில் முரண்நடை மிக நேர்த்தியாகக் கையாளப் பெற்றுள்ளது.

காதலைப் பற்றி பல்வேறு கவிஞர்கள் பல்வேறு கோணங்களில் பாடியிருந்தாலும் காலந்தோறும் காதல் கவிதைகள் புத்தம் புதியதாய், காதல் எனும் பொருளுக்கு அழகூட்டுவதாய் அமைந்தே காணப்படுகின்றன. காதலியின் ஒரு அன்பு வார்த்தையால் காதலன் அக மகிழ்வதை, 'ஒரு காதலின் வரைபடம்' எனும் தலைப்பில்,

**வருடக்கணக்காய் செத்துக்கிடந்தேன் - ஒரு**
**வார்த்தை சொன்னாய் வானில் பறந்தேன். (த.மூ.க.ப.91)**

எனக் காதலுக்கு முன்னும் பின்னும் உள்ள மன உணர்வை முரண்சுவையில் காட்சிப்படுத்துகிறார்.

கவிஞர் தங்கம் மூர்த்தி இரட்டைக்கிளவிச் சொற்களால் தம் கவிதைப் பொருளைச் சிறக்கச் செய்கிறார். வேலை இல்லாதிருந்த கணவன் வேலையில் சேர்ந்த பிறகு, மனைவி நடந்து கொள்வதை,

**அவள் கூட அடிக்கடி**
**தொண தொணப்பதில்லை (த.மூ.க.பக்.31)**

என நச்சரிப்பை விளக்குமிடத்து இரட்டைக்கிளவிச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

அரசுப் பேருந்துகள் பராமரிப்பு எதுவும் இன்றி பழுதாகிப் போன நிலையில் ஆபத்தான பயணங்களைக் கொண்டுள்ளதாகக் கூறுமிடத்து இரட்டைக்கிளவிச் சொல்லைப் பயன்படுத்தி

**டப்பாங்குத்து பாட்டுச் சத்தத்தில்**
**அடங்கிப்போனது**
**கடகட ஓசை**
**நல்ல பேருந்து**
**நல்ல அரசாங்கம் (பொ.பெ.ம.ப.44)**

என்பர். பழைய பேருந்தின் நிலையைச் சுட்ட, கடகட என்னும் இரட்டைக்கிளவிச் சொல் கையாளப் பெற்றுள்ளது.

**ஒலிக்குறிப்பு**

காதலன் மனநிலையை ஆச்சரியத்தை வெளிப்படுத்தும் ஒலிக்குறிப்புச் சொல்லின்வழி,

**உன்னைப் புகைப்படம் எடுத்தேன்**
**இருட்டறையில் கழுவிப் பார்த்தேன்**
**அடடா….. நான் (த.மூ.க.ப.110)**

என்று காட்சிப்படுத்துகிறார். இதில் காதலியின் உள்ளத்தில் அவன் இருப்பதை அடடா… என்ற ஒற்றை ஒலிக்குறிப்புச் சொல்லால் உணரவைத்த கவிதைக்கலை சுட்டுதற்குரியது.

**வினா விடை நடை**

வினா தொடுத்து விடைபகரும் நடையைக் கவிஞர் பல கவிதைகளில் கையாண்டுள்ளார். 'வீசிய துண்டுகள்' எனும் தலைப்பிலுள்ள கவிதையில்,

**தலைவர்கள் வீசிய துண்டுகளை**
**என்ன செய்தீர்கள்…..?**
**கண்களிலிருந்து வழிந்த**
**கண்ணீரைத் துடைத்தோம்.**
**வேறென்ன நன்மைகள்**
**விளக்கமுடியுமா….?**
**துண்டை நேராய்க் கிழித்து**
**நீரில் நனைத்து**
**வயிற்றில் கட்டி**
**வறுமையை மறைத்தோம்.**
**அப்புறம்….?**
**கோவணம் கிடைத்தாய்**
**குதூகலப்பட்டோம். (த.மூ.க.ப.38-39)**

என்று அடுக்கடுக்காய் வினாக்கணை தொடுத்து, கட்சித் தொண்டர்களின் அவலநிலையை விடைகளின் வழிப் பதிவு செய்துள்ளார்.

மேலும், கோவிலுக்கா? கூந்தலுக்கா? (த.மூ.க.ப.30) முதல் மரியாதையா? (த.மூ.க.ப.34) அகிலத்தில் இருக்கிறதா? (த.மூ.க.ப.36) பரிசாகுமா? தரிசாகுமா? (பொ.பெ.ம.ப.52) காற்று கிடைக்குமா,(க.ந.கா.ப.28) என்பன போன்ற கவிதைகளை வினா அமைப்பில் அமைத்துள்ளார். மூச்சுத்திணறும் சரஸ்வதி தேவி என்னும் கவிதையில் பள்ளிக் குழந்தைகளின் நிலையை,

**சுதந்திரத்தைப்**
**பெற்றுத் தருவது யார்?**
**………**
**யார்**
**கருணை காட்டுவது?**
**………….**
**மைதானங்களுக்கு**
**யார் அழைத்துப் போவது? எனக்**
**கேள்விக் கிடங்குகளில்**
**மூச்சுத் திணறுகிறாள்**
**சரசுவதி தேவி. (க.ந.கா.ப.119)**

எனப் பாடியுள்ளதும் இவ்வமைப்பிற்கு உரியதே. இதில் வினாவை மட்டும் தொடுத்துவிட்டு அதற்குரிய விடை தேடிக் கலைமகளும் கலங்குவதாக உரைப்பது இன்றைய கல்வியின் நிலையை விளக்குவதாய் அமைந்துள்ளது.

நகரத்தில் வாழும் மக்கள் பாரம்பரியமிக்க உழவர் திருநாளாம் தைப்பொங்கல் நன்னாளைக் கூட கொண்டாட முடியாத சூழலில் உள்ளதை,

**நகரத்து வீடுகளின்**
**நவீன அடுப்படிகளில்**
**பொங்குவதெல்லாம்**
**கூட்டுப் பொங்கலல்ல**
**அது குக்கர் பொங்கல் (க.ந.கா.ப.114)**

என மனம் வெதும்பும் கவிஞர்,

**பண்பாட்டுப் பொங்கல்**
**பார்த்ததுண்டா…. நீங்கள் (க.ந.கா.ப.115)**

எனக் கேள்விக்கணை தொடுத்து,

**ஊரெல்லாம் இணையும்**
**உறவு ராகம் பாடும்**
**ஓரிடத்தில் கூடும்.**

**…………….**

**உணர்வுகளும்**

**உறவுகளும்**

**ஒன்றான மகிழ்ச்சியில்.**

**மனசெல்லாம் பொங்குவதைப் போல்**

**மண்பானை பொங்கும்… (க.ந.கா.ப.115-116)**

எனப் பொங்கல் திருநாளை நம் கண்முன்னே கொண்டு வருகிறார்.

ரோஜா மலரை நுகரும் போதெல்லாம் மரணத்தின் வாடையடிப்பதாகக் கூறும் கவிஞர்,

**ரோஜாவை நுகரும்போதெல்லாம்**

**மரணத்தின் வாடையடிக்கிறது.**

**மனிதனின் மரணமோ…**

**பூவின் மரணமோ… (எ.ப.நா.ப.33)**

எனப் புள்ளிகளால் கேள்வியாக நிறுத்தும் நிலையில் அது பல்வேறு சிந்தனைகளைத் தோற்றுவிக்கிறது.

**நாட்டுப்புறத் தாக்கம்**

உலக இலக்கியங்களின் தோற்றத்திற்கு அடிப்படை வாய்மொழி இலக்கியங்கள் எனலாம். இலக்கியத்தை எழுதத் தொடங்கிய காலத்தில் நாட்டுப்புறவியல் கூறுகள் இலக்கியங்களுள் இடம்பெறத் தொடங்கின. இத்தன்மை சிலப்பதிகாரம், திருவாசகம், குறவஞ்சி, பள்ளு, பிள்ளைத்தமிழ் முதலான இலக்கிய வடிவங்களுக்குள் காணப்படுகிறது.[6]

காதல் வயப்பட்ட தலைவன், தன் துணையான காதலியைப் பிரிந்ததால், பிரிவுத்துயர் அவனை வாட்டுகிறது. காதலியின் குரலைக் கூடக் கேட்காததால் அவன் மனம் படாதபாடு படுகிறது. இத்தகையதொரு சூழலை,

**நெடுந்தூரம் போனாயே**

**நெஞ்சமெல்லாம் பதறுதடி**

**நீ**

**வரும் நாளை எதிர்பார்த்து**

**வார்த்தையெல்லாம் திணறுதடி (எ.ப.நா.ப.79)**

என்று பாடுவது நாட்டுப்புறப்பாடல் வடிவில் அமைந்துள்ளது.

**நாடகப் போக்கு**

கவிஞர் தம் படைப்புகளில், குறிப்பாகக் காதல் கவிதைகளில் பெரும்பாலான இடங்களில் காதலன் காதலியிடம் உரையாடுவது நாடகப் போக்கில் அமைந்துள்ளது.

**சான்று:**

**‘உன்னை நினைத்தே**
**உறங்காது இருக்கின்றேன்**
**நான்’ (எ.ப.நா.ப.29)**

**உனது**
**பயணங்களில்**
**நான் வருவதை**
**அறிந்து கொள்வதெப்படி?... (எ.ப.நா.ப.48)**

**சிறுகதை நடை**

சமுதாயத்தில் மனிதர்களிடையே கதை கேட்பதும் கதை சொல்வதும் அன்று முதல் இன்று வரை ஒரு கூறாக நிலவி வருகின்றது. புதுக்கவிதை எனும் புதிய இலக்கிய வடிவத்திலும் கதைப் போக்கைப் பின்பற்றிக் கவிஞர்கள் கதைக் கவிதையைப் படைத்துள்ளனர். கவிஞர் தங்கம் மூர்த்தி கதைக் கவிதைகளைக் கதாபாத்திரங்கள், நிகழ்ச்சிகள், அவற்றிடையே ஏற்படும் விளைவுகளெனப் பல கோணங்களில் படைத்துள்ளார்.

‘தலைமுறை’ என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில், தன் பேரனின் வாழ்வில், அவனது இளம் வயதில் எல்லாமுமாக இருந்த தாத்தாவின் இறுதிக் காலத்தில் அவருடன் வசித்து அவருக்கு உறுதுணையாக இருக்கத் தவறிய இளைஞனின் செயல்பாட்டை, ஒரு கதை வடிவில் காட்சிப்படுத்தியுள்ளார்.

பள்ளிக்கூடம் செல்லும் வயதில் சீருடையைத் துவைத்துத் தேய்த்துத் தருவது முதல் மேற்படிப்பிற்காக விடுதியில் தங்க வெளியூர் செல்வது வரை, வேலைக்குச் சென்று திருமணம் முடித்து இல்லற வாழ்வில் இனிமை கண்டு சீரோடும் சிறப்போடும் வாழ்வது என அனைத்திலும் பக்கத் துணையாய் இருந்த தாத்தாவின்,

**கடைசி அத்தியாயத்தை**
**மருத்துவர்**
**நாடி பிடித்துப் பார்த்தார். (த.மூ.க.ப.67)**

என்று கதைப் பாங்குடன் கொண்டு செல்கிறார் கவிஞர். தற்போதைய சூழலில் மருத்துவரைத் தனியே அழைத்துப் பேரன் கேட்பதாக,

**"ஒரு உதவி டாக்டர்!**
**பிள்ளைகளுக்குத் தேர்வு**
**எனக்கும் ஆடிட்டிங்**
**விடுமுறை நாள் வரைக்கும்**
**இழுத்துப் பார்க்க**
**இயலுமா?" (த.மூ.க.ப.68)**

எனப் பாடும் கவிஞர் வயதான தாத்தாவை அருகிருந்து கவனிக்க முடியாததோடு, நகரத்தில் அவனுக்கும் பிள்ளைகளுக்கும் அவசிய வேலைகள் இருக்கும் நாட்கள் வரை அவரது இறுதி நாட்களை இழுத்துப் பார்க்க இயலுமா என்று வினவுவது தலைமுறை இடைவெளியை வெளிச்சமிட்டுக் காட்டுகிறது.

**உரையாடல் நடை**

புதுக்கவிதையில் மொழிநடை அமைப்பில் 'உரையாடல்' ஒரு அங்கமாகவும் வெளிப்பாட்டு முறையில் ஓர் உத்தியாகவும் காணப்படுகிறது. இருவர் உரையாடும் அமைப்பும் அஃறிணை உயிரினங்கள், மற்றும் பொருட்கள் உரையாடுதல், உயர்திணையும் அஃறிணையும் உரையாடுவது எனப் பல வகையில் உரையாடல் உத்தி, புதுக்கவிதையின் அமைப்பினைச் சிறப்பாக்குகின்றது. உரையாடல் உத்தி வாசகரைக் கவிதையில் உரையாடுபவர்களுள் ஒருவராக்கிக் கவிஞனுக்கும் வாசகனுக்குமான நெருக்கத்தை அதிகரிக்கிறது. பேச்சு மொழியின் ஆளுமையை இவ்வகைக் கவிதைகள் தன்னகத்தே கொண்டுள்ளன.

காதல் வயப்பட்ட தலைவன், காதலியிடம் தன் உள்ளக்கிடக்கையை எவ்வாறு வெளிப்படுத்துவது என்ற முனைப்பில் பலவாறு யோசிக்கிறான். தன நிலை பற்றிக் காதலன் கூற்றாக,

**"வார்த்தைகளை**
**வடிகட்டிச்**

**சேமித்துக் கொண்டிருக்கிறேன்.'' (எ.ப.நா.ப.80)**

எனக் கற்பனை செய்யும் கவிஞர், தலைவியின் மனநிலை என்னவாக இருக்கும் என யோசித்தபோது

**''என்னைச் சந்தித்த**
**உன் தோழி ஒருத்தி**
**கூறினாள் -**
**''நீயும் கூட**
**இப்படியான**
**தயாரிப்புகளில்**
**இருப்பதாக'' (எ.ப.நா.ப.81)**

என உரையாடல் பாணியில் உரைப்பர்.

**அடுக்குத்தொடர்**

கவிஞர் தம் கவிதையில் பல இடங்களில் அடுக்குத்தொடர் நடையைக் காணமுடிகிறது. 'தொண்டரைப் போற்றுதும்' எனும் தலைப்பில் அமைந்த கவிதையில்,

**கைகளைத் தட்டி தட்டித்**
**தொண்டர்கள்**
**களைத்துப் போனார்கள் (த.மூ.க.ப.57)**

**''இப்போது பெய்கிற மழை**
**பார்க்கப் பார்க்க**
**அழகாயிருக்கிறது.'' (த.மூ.க.ப.102)**

எனவும் அடுக்குத் தொடர்களை அழகாகக் கையாண்டுள்ளார்.

பெண்கள் தம் குடும்பப் பொருளாதார நிலையை மேம்படுத்தும் தேவைக்காகக் கடுமையாக உழைக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளதால் பூ வியாபாரம் செய்தாவது தன் குடும்பத்தைக் காக்க முற்பட்டதை,

**கூவிக் கூவி**
**விற்றதில்**
**வாடியிருந்தாள்**
**பூக்காரி (த.மூ.க.ப.112)**

என்று விளக்குமிடத்து அடுக்குத்தொடர் கையாளப்பெற்றுள்ளது.

மேலும் நெருங்க நெருங்க; (பொ.பெ.ம.ப.58) மீண்டும் மீண்டும்; (க.ந.கா.ப.135) தினம் தினம்; (க.ந.கா.ப.79) வேறு வேறு; (க.ந.கா.ப.108) சொட்டச் சொட்ட; (க.ந.கா.ப.128) என்பன போன்ற அடுக்குத்தொடர்ச் சொற்கள் பயின்று வந்துள்ளன. காதலியின் நினைவிலிருந்து மீள முடியாத நிலையைத் துடைக்கத் துடைக்க (மு.பூ.ரோ.ப.50) என்பன போன்றவையும் இதற்குச் சிறந்த சான்றுகளாகும்.

கல்வி கற்கும் மாணவர்கள் தமக்குக் கல்வியோடு வாழும் கலையையும் கற்பிக்கும் ஆசிரியர்களின் அறிவுரைகளை ஏற்றுக் கொள்வதிலும், அவர்கள் கூறும் கல்வி தொடர்பான செய்திகள் மற்றும் பாடங்களை முழுமையாகக் கேட்டறிந்து பின்பற்றுவதிலும் ஒரு இணக்கமான சூழல் என்பது என்றைக்குமே ஏற்படுவதில்லை. அதற்கும் மேலாக ஆசிரியர் என்ற மரியாதை, ஆசிரியரிடத்துப் பழகும்போது காக்கவேண்டிய ஒழுகலாறுகள் போன்றவையும் தற்காலத்தில் கடைப்பிடிக்கப்படுவதில்லை. இந்நிலையை வேறு வேறு என்னும் அடுக்குத்தொடர் சொல்லைக்கொண்டு,

**“மாணவர்களும் ஆசிரியர்களும்**
**வேறு வேறு இனங்கள்**
**வகுப்புக் கலவரங்கள்” (மு.பூ.ரோ.76)**

என எடுத்துரைப்பர்.

**அடுக்கு வினா**

ஒரு பொருள் கருதிப் பல வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடை கூற முயல்வது அடுக்கு வினா உத்தியாகும். இவ்வாறு வினாக்களை அடுக்கிக்கொண்டே செல்வது அக்கருத்தின் முக்கியத்துவத்தை, ஆழத்தை அறியச்செய்து படிப்பவரின் மனநிலையைத் தம் கருத்து நிலைக்கு இட்டுச் செல்வதற்குக் கவிஞன் கையாளும் உத்தி ஆகும்.

அரசியல் தலைவர்கள் தொண்டர்களைச் சந்திக்கும் பொது நிகழ்ச்சிகளின் போது தமக்கு அணிவிக்கப்பெறும் பொன்னாடைகளைத் தொண்டர்களை நோக்கி வீசுவது வழக்கமாக உள்ளது. இதைச் சாடுவதாக, இச்சூழலை அடிப்படையாகக்கொண்டு தொண்டர்களிடம்

**“தலைவர்கள் வீசிய துண்டுகளை**
**என்ன செய்தீர்கள்?**
**கண்ணீரைத் துடைத்தோம்.**
**வேறென்ன நன்மைகள்**
**விளக்க முடியுமா?**
**வறுமையை மறைத்தோம்.**
**அப்புறம்?**
**கோவணம் கிடைத்ததாய்**
**குதூகலப்பட்டோம்.**
**எத்தனை நாட்களுக்கு**
**இதே நாடகம்…?**
**எதிர்காலத் திட்டம்**
**ஏதேனும்…?”….. (த.மூ.க.ப.38-39)**

என அடுக்கடுக்காய் வினாத் தொடுத்து இறுதியில் துண்டுகள் வீசுவது தொடருமானால் தலைவர்களை வீசவும் தயங்க மாட்டோம் என எச்சரிக்கிறார்.

இன்றைய கல்விச் சூழலை எடுத்துரைக்கும் ‘மூச்சுத்திணறும் சரசுவதி தேவி’ என்னும் தலைப்பிலான கவிதையும் இப்பாணியிலேயே அமைந்துள்ளது. சமூகத்தில் தொண்டர்களும் குழந்தைகளும் சந்திக்கும் சிக்கல்களைப் பேசுவதற்கு இவ்அடுக்குவினாமுறையைக் கவிஞர் கையாண்டுள்ளார்.

காதலில் ஏமாற்றம் அடைந்த காதலனின் மன உணர்வை உன் அடையாளங்கள் கேட்டார்கள். என்ன சொல்ல? சுருட்டை முடியையா, சுயநலத்தையா, உயரமாய் வளர்ந்ததையா, உடனிருந்து கெடுத்ததையா, செந்நிறம் என்பதையா, செய்ந்நன்றி மறந்ததையா, வசீகரச் சிரிப்பையா, வக்கிர புத்தியையா, எதைச் சொல்ல? அகத்தின் அசிங்கம் முகத்தில் தெரியுமா…? (எ.ப.நா.ப.23) எனக் கேள்விகளால் காட்சிப்படுத்துகிறார்.

**படிமம்**

படிமம் என்பது குறித்து, “உருவகத்தின் வளர்ச்சிநிலை படிமமாகும். கருத்தினைக் காட்சிப்படுத்தும் தன்மை கொண்டது படிமம்; அருவப் பொருளையும் உருவப் பொருளாக்கிக் காட்டுவது படிமம்; கருத்தினைச் சொற்களால் ஓவியம் ஆக்கி மனத் திரையில் வரைந்து காட்டுவது படிமம்; படிமம் கவிதைக்கு அலங்காரம் அன்று;

அது ஆயுதம் ஆகும். படிமம் கருத்துடன் இரண்டறக் கலந்துவிடுகின்றது. புதுக்கவிதைகளில் படிம உத்தியைப் பலரும் கையாண்டுள்ளனர். குறியீடு என்பது வேறு; படிமம் என்பது வேறு. சில நேரங்களில் படிமங்கள் குறியீடாக மாறும். ஆனால் படிமங்கள் எல்லாம் குறியீடாக மாறுவதில்லை[7] "படிமம் மனத்துள் காட்சிகளைச் சித்திரிக்கும் தன்மை கொண்டது. படிமம் உணர்வு, உணர்ச்சி, அறிவுத் தளங்களில் விளைவை ஏற்படுத்தி அறிவார்ந்த அர்த்தத்திற்கு வாசகனை அழைத்துச் செல்லும் இயல்பு கொண்டது[8] என்கிறார்.

இயற்கைச் சீற்றமாகிய 'சுனாமி'யால் ஆயிரக்கணக்கானோர் மடிய நேரிட்டது. இதனை

**நீர்க் கைகளால் அள்ளி**
**உயிர்களைக் குடித்துத்**
**தாகம் தீர்த்தது கடல் (பொ.பெ.ம.ப.41)**

என்று கவிஞர் படிமக் காட்சியின்வழி படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

மானிட வாழ்வியலில் தமிழர்கள் தாங்கள் வாழும் சூழலுக்கு ஏற்பவும், ஈடுபடும் தொழில்களின் அடிப்படையிலும் நிலத்தையும் திணைப் பாகுபாட்டையும் அமைத்து நெறிப்படுத்தினர். அவற்றுள் நிலத்தை ஐவகையாகப் பகுத்துக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வழங்கினர். இந்த இலக்கணம் சார்ந்த நெறிப்பாட்டைக் கவிஞர், காணி நிலம் என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில்,

**"நிலங்களில்**
**ஐவகை உண்டு**
**குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல்**
**பாலையென**
**நிலங்களில் ஐவகை உண்டு.**
**ஆறாவது வகை நிலம்**
**இந்தக் காணி நிலம்**
**மகாகவியும் மகாகவி சார்ந்த நிலமும்**
**காணிநிலம்" (த.சி.த.த.ப.34)**

என்று முத்தாய்ப்பாய் முடிக்கிறார்.

**கண்ணீர் பெண்பால்**
**வியர்வை ஆண்பால்**
**பலநேரம் இரண்டுமே**
**பலவின்பால் (த.சி.த.த.ப.79)**

என்னும் கவிதையும் இப்பகுப்பில் அடங்கும்.

**காட்சிப்படுத்தல்**

புதுக்கவிதைகளில் நிகழ்ச்சியைக் காட்சிப்படுத்தி மன உணர்வை வெளிப்படுத்துதல் ஒரு உத்தியாகக் கையாளப்படுகிறது. காட்சிப்படுத்துதல் உத்தியின் மூலம் கவிஞன் கூற வந்த செய்தி வாசகனுக்கு எளிமைப்படுத்தப்பட்டதாகக் கிடைக்கிறது. குறியீடு, படிமம் போன்று இதில் உள்ளார்ந்த கருத்துகளுக்கு இடமில்லை. கருத்தில் வெளிப்படைத் தன்மை மிகுந்து காணப்படும்.

காதல் வயப்பட்ட காதலனும் காதலியும் சந்திப்பதாகக் குறியிடம் நிர்ணயிக்கப்பட்டு, நேரமும் குறிக்கப்பட்ட நிலையில், காலதாமதம் ஆகிவிடக்கூடாது என்பதில் முனைப்பாக உள்ள காதலன், அவசரமாக அந்த இடத்தைச் சென்றடைய முற்படுவதைக் கவிஞர்,

**“வாகன வேகத்தை முந்தி**
**விரைந்தோடுது மனசு**
**காத்திருப்பாள்”. (த.மூ.க.ப.56)**

என்பர். இதில் காதலி காத்திருக்கிறாள் என்பதற்காக மனம் படும்பாடு அழகாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

காதலியைச் சந்திக்க வந்த தலைவன் அவளைச் சந்தித்து விட்டான். கண்ணோடு கண்ணினை நோக்கின; வாய்ச்சொற்கள் பயனின்றிப் போயின; பேச வந்த வார்த்தையைப் பேச இயலாமல் தலைவி நாணம் மீதூற மௌனம் காத்தாள். எனினும் தன் உள்ளக்கிடக்கையைக் கடிதமாக எழுதி அவனிடத்தில் கொடுத்துத் தன் வேணவாவினை விளக்க முயல்கிறாள். பின்னர் இருவரும் அவரவர் இடத்திற்குச் சென்றடையும் நிலையில் மழை வருகிறது. மழையில் நனைவதென்பது அறியாக் குழந்தை முதல் அனைவருக்கும் பிடித்தமான ஒன்று. தலைவனுக்கும் மனதிற்குள் மழையில் நனையும் ஆசை துளிர்க்கிறது. சட்டென்று நினைவுக்கு வருகிறது தன் காதலி கொடுத்த கடிதத்தைச் சட்டைப்பையில் வைத்தமை. மழையில் நனைந்தால்

கடிதமும் நனைந்து விடுமே என்று தன் ஆசையை புறந்தள்ளும் ஒரு காதலனைக் கவிஞர்,

**மழையில் நனைய ஆசைதான்**
**சட்டைப்பைக்குள்**
**அவளின் கடிதம் (த.மூ.க.ப.50)**

என்று காட்சிப்படுத்துகிறார். மழையில் நனைவதில் கிடைக்கும் இன்பத்தை விடத் தலைவியின் மனக்குரலாகத் தன்னிடமுள்ள கடிதத்தின் அன்பு மழையில் நனைவதே முக்கியம். அக்கடிதத்தை நனையாமல் காப்பது தன் அன்புக்குரியவளின் காதலுக்கு மரியாதை என்ற தலைவனின் உணர்வு மூன்று வரிகளில் காட்சியாக்கப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியது.

இல்லங்களில் பண்டிகை நாட்களில் கிடைக்கும் குதூகலத்திற்கு அளவுகோல் கிடையாது. அதிலும் பிள்ளைகள் பெரியவர்களாகி வாழ்க்கையைத் தொடங்கிக் கணவன், மனைவி, குழந்தைகள் என வாழத் தொடங்கியபின் தங்கள் பிறந்த வீட்டில் உறவுகள் புடைசூழப் பண்டிகையைக் கொண்டாடுதல் என்பது அளப்பரிய ஆனந்தம் தர வல்லதாகும். கவிஞர் 'என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில் அழகுடன் இதைக் காட்சிப்படுத்துகிறார். பிள்ளைகளின் வருகை தொடங்கி, அந்நாளின் ஒவ்வொரு நிகழ்வுகளாக அலங்கரித்து, அத்திருநாள் அடுத்த ஆண்டில் மீண்டும் வருவதை நினைத்தபடி அமர்ந்திருப்பது வரை உரைப்பர்.

**ஒன்றாய் அமர்ந்து**
**உண்ணும் போது**
**உற்சாகமாயிருப்பார்.**
**பிள்ளைகள்**
**புத்தாடை அணிந்து**
**பவனி வருவதை**
**பெருமையோடு பார்ப்பார்.**
**குடும்ப மாநாட்டுத்**
**தலைமையேற்று**
**குழந்தையைப் போல்**
**துள்ளுவார்.**
**சாதாரண நகைச்சுவைக்கும்**
**சத்தம்போட்டுச் சிரிப்பார்.**

**பெரிய குறும்புகளைக் கூட**

**பொறுமையோடு ரசிப்பார்.**

**கார் வாங்கிய**

**சேதி சொன்னால்**

**கர்வத்தோடு**

**அம்மாவைப் பார்ப்பார்.**

**பாசத்தில் நனைத்த**

**வார்த்தைகளால்**

**பக்குவமாய் அறிவுரைப்பார்.**

**இந்த நாள்**

**நீளாதா என்று ஏங்குவார்.**

**அடுத்த பண்டிகை வரை**

**அந்த நாளைப் பற்றியே**

**அம்மாவிடம் பேசுவார்.**

**அப்பாவை நினைத்தபடி**

**வாசல்படியில்**

**அமர்ந்திருந்தேன்-**

**என்**

**பிள்ளைகள் வருகைக்காக. (எ.ப.நா.ப.15-16)**

என ஒரு தந்தையின் உணர்வு நிலையைப் பாசம், கர்வம், பரிவு, பக்குவம், பொறுமை எனப் பல்வேறு பரிணாமக் காட்சிகளாகப் படைத்துக் காட்டுகின்றார்.

கண்களை விற்று….. என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில்

**"பணச் சிரமம்னு**

**சொன்னீங்க….**

**வீட்டில புதுசா**

**ஏ.சி.**

**பொருத்தியிருக்கீங்க….!"**

**ஆமா**

**என்ன பண்றது…. சிரமம்தான்**

**ஊரில் நாலு மரத்த வித்து**

**காசு பார்த்தேன்**

**அதுல தான்'' (எ.ப.நா.ப.52)**

என்று இயற்கையாய் நமக்கு நல்ல சுற்றுச்சூழல் தரக்கூடிய மரங்களை வெட்டி விற்று, ஆரோக்கியத்திற்கும் அச்சுறுத்தல் விளைவிக்கும் 'குளிரூட்டி'யை (ஏ.சி) ஒரு விவசாயி தன் வீட்டில் அமைத்துள்ள செயற்கை நாகரிக மோகத்தை, நாடு சென்று கொண்டிருக்கும் அவல வாழ்வைக் காட்சியாக்கியுள்ளார் கவிஞர்.

சமுதாயத்தில் இன்னும் சீர்ப்படுத்த இயலாத மற்றுமொரு அவலம் குடிப்பழக்கம். 'குடி குடியைக் கெடுக்கும்' என்ற வாசகத்துடனேயே விற்கப்படும் மதுவிற்கு அடிமையானவன் தன்னால் தன் குடும்பமும் பாழாகும் என்பதை உணராமல் தன் பழக்கத்தை மாற்றிக் கொள்ளாதவனாய் வீணாகிப் போவதை, அவனால் அவன் குடும்பமும் சேர்ந்து தள்ளாடுவதை,

**கவிழ்த்த கோப்பைகளுக்குள்**

**மூச்சுத்திணறும் கவிழ்த்தவனின்**

**குடும்பங்கள் (ம.கை.ப.88)**

என உணர்த்துகிறார்.

**வருணனை**

இலக்கியம் என்றாலே வருணனை இடம்பெற்றிருக்கும். புதுக்கவிதையில் தேவையில்லாத சொற்களும், அடைகளும், வர்ணனைகளும் இருப்பதில்லை. ஆனால் சொல் புதிது, பொருள் புதிது, வடிவம் புதிது, பொருள் எளிதில் புரிதல் என்னும் நோக்கம் கொண்ட புதுக்கவிதைகளில் வருணனையும் ஒரு உத்தியாக இடம் பெற்றுள்ளது. புதுக்கவிதையின் அழகியலுக்கு வருணனை உத்தி தேவைப்படுகின்றது.

"வருணனை என்பது தான் சொல்ல வந்த செய்திகளைக் கற்பனை கலந்த படிமங்களாக்கிக் கலைத் தன்மையோடு சொல்வது; இது கலைகளுக்கு இன்றியமையாதது"[9] என்பர் ந.பிச்சமுத்து. கதிரவன் அந்தி மாலையில் மேற்கே மறைவதைக் கவிஞர்

**''குண்டர்கள் சட்டத்தில்**

**கைதாகி**

**இரவின் சிறைக்குள்**

**சூரியன்'' (த.மூ.க.ப.100)**

என வருணிப்பர்.

**கற்பனை**

உணர்ச்சி, கற்பனை, வடிவம், கருத்து ஆகிய நான்கும் இலக்கியக் கூறுகள் ஆகும். புதுக்கவிதை உத்திகளில் கற்பனையும் ஒன்றாகும். உலகில் இல்லாத ஒன்றைக் கற்பனையாலும் கூற இயலாது. இருக்கின்றவற்றைச் சேர்த்துத்தான் இல்லாத ஒரு பொருளைக் கூடக் கற்பனையாக கூறமுடியும். எனவே கற்பனையாகச் சொல்லப்பட்டது இறந்த காலத்தில் இருந்திருக்கும்; இல்லையேல் எதிர்காலத்தில் கண்டுபிடிக்கப்படும். இ∴து ஒரு தத்துவமாகும். காசியில் பேசுவதைக் காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்[10] என்று சொன்ன பாரதியாரின் கருத்தும் மேற்சொன்ன வகையில் மெய்ப்பிக்கப்பட்டதே ஆகும். இதனால்தான் வைரமுத்து, "கற்பனை என்பது உண்மைக்குச் செய்யப்படுகின்ற ஒப்பனை"[11] என்கின்றார்.

கவிஞன் வெவ்வேறு இடங்களில் தான் கண்ட இருவேறு காட்சிகளை ஒன்றை மற்றொன்று விளக்கும் முறையில் இரண்டையும் இணைத்துப் புதிய ஒன்றைக் கூறுவதுதான் இயைபுக் கற்பனை[12] என்பர் ந.பிச்சமுத்து.

நதியின் கரைகளில் வளர்ந்துள்ள மரங்கள் நீர் நிலைகளை நோக்கி வளைந்து காணப்படுவது இயற்கை. அதில் கவிஞர் தன் கற்பனையைக் கலந்து, அங்ஙனம் வளைந்திருப்பது இயற்கையாக இல்லையாம். அவை நன்றி செலுத்துவதற்காகவே அப்படித் தலைசாய்த்துள்ளன என்று கற்பிதம் செய்து,

**''தலைசாய்த்து**

**நதிக்கு நன்றி கூறின**

**கரையோர மரங்கள்'' (த.மூ.க.ப.33)**

என உரைப்பர்.

'விண்மீன்கள்' எனும் தலைப்பில் உள்ள

**''நிலாவைக் காட்டித் தான்**

**சோறு ஊட்டுகிறீர்கள்.**

**ஆனால்**

**நிலா தான் எங்களுக்குச்**

**சோறு ஊட்டுகிறது" (த.சி.த.த.ப.110)**

என்ற கவிதை இயைபுக் கற்பனையாக அமைந்துள்ளது. நிலவின் ஒளியில் இருந்து ஒளிபெற்று நட்சத்திரங்கள் பிரகாசிக்கின்றன. இதனை நிலாதான் எங்களுக்குச் சோறு ஊட்டுகிறது என்று நட்சத்திரங்கள் தங்களைக் குழந்தைகளாகக் கருதி உரைப்பது போல் கற்பிதம் செய்துள்ளார்.

'கடல் மீன்கள்' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில், மீன்கள் கூறுவதைப் போல உள்ள,

**"கடல் எங்கள் பிறந்த வீடு**

**உங்கள் உடல்**

**நாங்கள் புகுந்தவீடு" (த.சி.த.த.ப.109)**

எனும் கவிதை இயைபுக் கற்பனை நயம் தோன்ற அமைந்துள்ளது.

**படைப்புக் கற்பனை**

குழந்தைகள் வளரும் பருவத்தில் தம் கையில் கிடைத்த எழுதுகோலை வைத்துக் கொண்டு, கிடைக்கும் இடங்களில் எல்லாம், தம் கற்பனையில் தோன்றியதை வரைந்து விடுவார்கள். இத்தகைய ஆற்றலை எல்லோரும் கிறுக்கல்கள் என்றே விமர்சிப்பது உண்டு. கவிஞரோ,

**"சுவரெங்கும் கிறுக்கல்கள்**

**புரியவில்லை**

**குழந்தையின் கவிதைகள்" (ம.கை.ப.20)**

எனக் கிறுக்கல்கள் என யாவரும் கூறுவதைக் கவிதைகள் எனக் கூறியுள்ளமை அவர்தம் படைப்புக் கற்பனைக்குச் சான்றாகும்.

**கருத்து விளக்கக் கற்பனை**

கருத்து விளக்கக் கற்பனை என்பது தமிழில் வழங்கப்பெறும் தற்குறிப்பேற்ற அணியைப் போன்றது. இயல்பாக நடைபெறும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறுவது ஆகும்.[13]

பூச் செடிகளில் பூக்கள் பூத்துக் குலுங்கும் இயல்பான நிகழ்வை,

**“செடிகளுக்கு**
**நீர் ஊற்றினேன்**
**பூக்களாய்ச் சிரித்தன (பொ.பெ.ம.ப.47)**

எனவும், இருள் மறைவை,

**“வெளிச்சத்தின்**
**காலடியோசை கேட்டதும்**
**ஓடி மறைந்தது**
**இருள் (எ.ப.நா.ப.24)**

எனவும் தன் கற்பனையை ஏற்றி உரைக்கிறார்.

**இலக்கணை உத்தி**

உயிருள்ள, உயிரற்ற அ∴றிணைப் பொருள்களைப் பேச வைத்தல் ‘இலக்கணை’ ஆகும். “அ∴றிணைப் பொருள்களைப் பேசவைக்கும் ஒரு புதிய கற்பனை உத்தியை இன்றைய கவிதைகளில் நிரம்பக் காணலாம்.”[14] என்கிறார் மீரா.

அ∴றிணைப் பொருள் ஒன்று தன் வரலாறு கூறுவது போல, சபதம் கூறுதல் போலத் தனித்துக் கூறும் உத்தியும் புதுக்கவிதையில் காணப்படுகின்றது. இவ்வாறு அ∴றிணைப் பொருட்கள் பேசும் இலக்கணை எனும் உத்தி கவிஞர் தங்கம் மூர்த்தி கவிதைகளில் இடம்பெற்றுள்ளன. மரங்களின் மாநாடு என்ற கவிதையில், மாநாட்டில் ஒருமனதாய் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை வரிசைப்படுத்தியுள்ளார் கவிஞர்.

**தீர்மானம் 1**

**“எவ்வளவு முயன்றும்**
**ஈடுகொடுக்க முடியாததால்**
**மகளிர் கல்லூரி**
**பூங்காவில் இருந்து**
**வெளிநடப்பு**
**செய்ய வேண்டும்.” (க.ந.கா.ப.126-127)**

**தீர்மானம் 2**

கோயிலோ, கூந்தலோ சாமியோ, சவமோ எவ்விடமாக இருந்தாலும் உயிருள்ள வரை பாரபட்சமின்றி வாசனையைப் பரப்பிட வேண்டும் என்று (கநகா-ப:128) மரங்கள் பேசுவதாக உரைப்பது இதற்குச் சிறந்த சான்றாகும்.

**நதிகளின் குரலில்...**

நதிகள் தமக்குள் பேசி முடிவெடுத்துக் கவியரங்கம் நிகழ்த்துவதாகவும், அவை ஒவ்வொன்றும் தத்தம் இடங்களுக்கேற்ற பொருண்மையில் கவி பாடியதாகவும் உள்ள

**"கண்ணீர் சிந்தாத**
**காதல் மாளிகை எழுப்புவோம்**
**எனும் தலைப்பில்**
**கவிஞர் யமுனை.**
**கட்டிடங்கள்**
**கட்டுவதை நிறுத்தி**
**கரைகளைக் காப்போம்**
**எனும் தலைப்பில்**
**கவிஞர் வைகை.**
**கன்னட வெறியர்களின்**
**முகமூடி கிழிப்போம்**
**எனும் தலைப்பில்**
**கவிஞர் காவிரி.**
**சாதி ரத்தம்**
**மிதப்பதை நிறுத்துவோம்**
**எனும் தலைப்பில்**
**கவிஞர் தாமிரபரணி.**
**மதவெறி ரத்தம்**
**கலப்பதைத் தடுப்போம்**
**எனும் தலைப்பில்**
**கவிஞர் கங்கை.**
**வளமான கவிதைகளோடு**
**கவியரங்கத்**

**தலைமையேற்க வருகிறார்**
**கவிப்பேரரசு வங்காள விரிகுடா.(க.ந.கா.ப.124-125)**

என்னும் கவிதையில் நதிகளெல்லாம் கவிபாடக் கவியரங்கத் தலைமை ஏற்கக் கவிப்பேரரசாக வங்காள விரிகுடா வருவதாக உரைப்பது மிகச் சிறப்பான இலக்கணை உத்தியாகும்.

கடல் மீன்களின் குரலாக,

**“நாங்கள்**
**அலைகளில்**
**விளையாடியதை விட**
**வலைகளில்**
**விளையாடியதே அதிகம் (த.சி.த.த.ப.109)**

**எங்கள் கனவுகளில்**
**அடிக்கடி வந்து போகிறது**
**கடல் (த.சி.த.த.ப.111)**

என்பதில் மீன்களின் உணர்வை அவைகளே பேசுவது போன்று உரைத்தலும் இதற்குச் சான்றாகும்.

**தொன்மம்**

தொன்மம் என்பதை ஆங்கிலத்தில் மித் (Myth) என்று கூறுவர். பழங்காலப் புராண இதிகாசங்களில் சொல்லப்பட்டுள்ள பாத்திரங்களைக் கவிதையில் எழுதி, அவற்றின் மூலம் தான் சொல்ல வந்த கருத்தைக் கூறுவது தொன்மமாகும். கவிதை நயம் பெறவும் சிக்கல்களை விளக்கிடவும் தொன்மக்கூறுகள் கையாளப்படுகின்றன. தொல்காப்பியர் தொன்மத்தைச் செய்யுள் உறுப்புகளுள் ஒன்றாகக்கூறி,

**“தொன்மை தானே சொல்லுங் காலை**
**உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே”**[15]

என விளக்குகிறார்.

“நாட்டு நடப்பு, காதல், அரசியல், பொதுவுடமைக் கொள்கை, விரக்தி எனப் பல கருத்தையும் விளக்கத் தொன்மம் பயன்படுத்தப்படுகின்றது.”[16] என்பர். கவிஞர் தங்கம் மூர்த்தியும் அவ்வகையில் இன்றைய மகளிரின் நிலையைக் கண்ணகி நிலையோடு

ஒப்பிட்டு உரைப்பது தொன்மத்திற்குரியதாகும். (அ.வா.வி.எ.நி.ப.55) கம்ப இராமாயணக் கதையை “மென்மைக் காதல்” (சீதை) எனும் தலைப்பில் கவிஞர்,

**“சீதை தன்**
**கண்களில் எழுதிய**
**செய்தியை ராமன்**
**படித்தார்.**
**வில்லை**
**வளைத்து**
**ஒடித்தார். (க.ந.கா.ப.42)**

என்று எளிமைச் சொல்லோவியம் ஆக்கியுள்ளார். இராவணனிடத்து அனுமன் தூது சென்ற செய்தியை,

**“இராமதூதன்**
**அனுமன்”…….**
**“அனுமனைப் போலொரு**
**தூதர் கிடைப்பது**
**அரிதிலும் அரிது” (க.ந.கா.ப.45)**

என்றும்,

**“பிற ஆடவரால்**
**அசைக்கவே முடியாத**
**வில்லை**
**அழகு ராமன்**
**எடுத்தான், உடைத்தான்.” (க.ந.கா.ப.99)**

என்று எடுத்துரைப்பர்.

‘வில்லுக்கு விஜயன்’ என்று புகழப்படும் அர்ச்சுனனின் வில்லாற்றலைக் கவிஞர்,

**“ஒலிம்பிக்**
**அன்றைக்கே இருந்திருந்தால்**
**உறுதியாய்**
**ஒரு தங்கம் வென்றிருப்பான்**

**அர்ச்சுனன்.**

**வில் வித்தையில்**

**வல்லுநன்.'' (க.ந.கா.ப.97)**

எனப் புகழ்ந்து மகாபாரதச் செய்தியைத் தொன்மமாக்கி உரைக்கிறார்.

மற்றோரிடத்தில்

**''கடவுள் கிருஷ்ணன்**

**மண்ணைத் தின்னும் காட்சி'' (க.ந.கா.ப.138)**

என்னும் அடிகளில் கிருஷ்ணாவதாரத்தில் குழந்தை கிருஷ்ணன் வாயில் மண்ணைப் போட்டுத் தின்றதாக யசோதை சந்தேகப்பட்டு வாயைத் திறக்கச் சொன்னபோது உலகையே தன் வாய்க்குள் காட்டிய அவதாரச் சிறப்பைக் கவிதையாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

'பொங்கட்டும் புத்தாண்டில் தாயகப் பற்று' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில், சிவபெருமானின் 64 திருவிளையாடல்களில் ஒன்றாக வருகின்ற பிட்டுக்கு மண் சுமந்த லீலையினை, 'பிட்டுக்கு மண் சுமந்த காலம் போய்' என்னும் தொடரால் (க.ந.கா.ப.134) நினைவுறுத்துகிறார்.

**அங்கதம்**

அங்கதம் என்பது சமுதாயக் கேடுகளை நையாண்டி செய்து தாக்குவதன் மூலம் சீர்திருத்தும் ஒருவகை இலக்கிய உத்தி[17] ஆகும். தனிமனிதன், சமுதாயம் அல்லது அரசாங்கத்தின் குறைகள், தவறுகள், ஊழல்கள், மூடப்பழக்கம் போன்றவற்றைச் சுட்டிக்காட்டித் திருத்தும் நோக்கம் கொண்டது அங்கதம் ஆகும். அவ்வாறு சுட்டிக்காட்டும்போது நகைச்சுவை உணர்வு வெளிப்பட வேண்டும். இவ்வாறு இலக்கியத்தில் கூறப்படும் முறை தொல்காப்பியத்திலேயே சுட்டப்பட்டுள்ளது. இதனை,

**''அங்கதம் தானே அரில்தபத் தெரியின்**

**செம்பொருள் கரந்த தெனஇரு வகைத்தே''[18]**

என்னும் நூற்பா விளக்கும்.

வெளிப்படையாகவோ, மறைமுகமாகவோ தவறுகளை நகைச்சுவையுடன் சுட்டிக்காட்டித் திருத்தும் போக்கு புதுக்கவிஞர்களிடத்தில் மிகுதியாகக் காணப்பெறுகின்றது. அதிலும் சமுதாயக் கண்ணோட்டம் உடைய கவிஞர்களின்

கவிதைகளில் இது மிகுதியாகக் காணப்படுகிறது. கவிஞர் தங்கம் மூர்த்தியும் சமுதாயச் சீர்கேடுகளையும் அரசியல் அவலங்களையும் அங்கதமாக வெளிப்படுத்துகிறார்.

**"சிரிக்காமலே**
**குழி விழுகிறது**
**எங்களூர் சாலைகளுக்கு" (மு.பூ.ரோ.ப.57)**

எனச் சாலைகள் யாவும் குண்டும் குழியுமாய் சீரற்று இருக்கும் அவலத்தை எள்ளல்சுவையுடன் எடுத்துரைக்கிறார்.

கோலத்தில் யானை உருவம் உள்ளது கண்டு எறும்புகள் இரை தின்ன வரவில்லை (மு.பூ.ரோ.ப.36) சாமியைப் பார்த்து யாரும் சாமி என்று அழைக்கவில்லை (எ.ப.நா.ப.50) என்னும் கவிதைகள் இதற்குச் சிறந்த சான்றுகளாகும்.

**குறியீடு**

உவமையின் செறிவு உருவகம்; உருவகத்தின் வளர்ச்சி படிமம்; படிமத்தின் முதிர்ச்சி குறியீடாகும். குறி, குறிப்பு என்னும் சொற்களின் வளர்ச்சி முதிர்வு குறியீடு என்னும் கலைச்சொல்லாகும். பிறிதுமொழிதல் அணியின் வளர்ச்சியாகவும் குறியீட்டைக் கொள்ளலாம்.

ஒரு கருத்தைக் கூறும் போது, அதிலிருந்து வேறு ஒரு குறிப்புப் பொருளை வெளிப்படுத்துவதே குறியீடாகும். குறியீடு சுருக்கத்தையும் செறிவையும் பன்முகத் தன்மையையும் கொண்டது. கவிஞர் ஒன்றை நினைத்துக் குறியீட்டுக் கவிதையைப் படைத்திருப்பார். அந்தக் கவிதைக்குக் கவிஞர் நினைக்காத பொருளையும் வாசகன் நினைத்துப் பார்ப்பதற்கு வழிகாட்டுவது குறியீடாகும். புதுக்கவிதையின் பண்புக்கும் குறியீட்டின் பண்பிற்கும் ஒற்றுமை இருக்கின்றது. கருத்தை உணர்த்துவது புதுக்கவிதை. கூறப்பட்ட கருத்துடன் பொருத்தமுடைய பிற கருத்தையும் உணர்த்துவது குறியீடு. இரண்டிற்கும் உணர்த்தும் தன்மை பொதுமையாகும்.

காதல், அரசியல் சட்டத்தை எதிர்த்தல், வன்முறை முதலானவற்றை வெளிப்படையாகக் கூற இயலாது. இவை போன்ற கருத்துகளைச் சொல்லவோ, எழுதவோ குறியீடு உறுதுணையாய் இருக்கிறது. புரட்சியும், பொது உடைமையும், சீர்திருத்தமும், ஆட்சி எதிர்ப்பும், சமுதாயச் சாடலும் புதுக்கவிதையின் போர்வாளாக உள்ளன. இவற்றை வெளியிடக் குறியீடு புதுக்கவிதைக்குச் சிறந்த உத்தியாக

விளங்குகின்றது. எனவே, புதுக்கவிதையின் உள்ளடக்கத்தோடு நெருங்கிய தொடர்புடையதாகக் 'குறியீடு' திகழ்கின்றது.

"கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரம் எப்பொழுதெல்லாம் மறுக்கப்படுகிறதோ அப்போதெல்லாம் குறியீட்டு இயக்கம் கலைஇலக்கிய இயக்கங்களின் முதல் உத்தியாகப் பயன்பட்டு வருகிறது"[19] என்று சு.அரங்கராசு கூறுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

புதுக்கவிதையில் குறியீடு தோன்றுவதற்கான காரணங்களை இரா.இராஜேந்திரன்,

**''சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்**
**மறைத்துக் கூறல் இடக்க ரடக்கல்**
**அங்கத மாக்கல் என்ற ஐந்தும்**
**குறியீடு தோன்றக் காரணம்''**[20]

என்று வகைப்படுத்திக் கூறுகின்றார்.

சமூகத்தில் பரவிக் கிடக்கும் வேலையில்லாத் திண்டாட்டம் (மு.பூ.ரோ.ப.29) சுகாதாரக் குறைவு (மு.பூ.ரோ.ப.40) பொது சொத்துக்களான பேருந்துகள் பராமரிப்பின்றி காணப்படும் நிலை (மு.பூ.ரோ.ப.21) எனப் பலவற்றையும் குறியீட்டு உத்தியைப் பயன்படுத்தி கவிஞர் விளக்கியுள்ளார்.

**உவமை**

"இலக்கியப் படைப்பில் உவமை என்பது ஓர் இலக்கிய உத்தியாகும். ''புதுக் கவிதைக் கவிஞர்கள் தம் கவிதைகளில் கையாண்டுள்ள உவமைகள் உவமையாக மட்டுமல்லாமல் தனித்து நின்று சமகாலச் சமூகத்தைப் பிரதிபலிக்கும் தன்மை கொண்டவை[21] என்பர்.

"கவிஞனின் அறிவு, அனுபவம், வாழ்க்கைச் சூழல், தொழில், கொள்கை முதலானவற்றிற்கு ஏற்ப, அவன் கையாளும் உவமையின் இயல்பும் அமைகிறது. கவிதையில் ஒரு பொருளை உணர்ந்தாலும், உவமையின் மூலம் இரு பொருள்களை எண்ணத் திரைக்குக் கொண்டுவர முடிகிறது"[22] என்பர் மா.கோவிந்தராசு.

இலக்கிய அணிகளுக்கெல்லாம் தலைமையணி, 'உவமையணி" ஆகும். உவமை கவிதைக்கு அடிப்படையாகவும் விளங்குகின்றது. இதன் சிறப்பினை அப்துல்ரகுமான், "உவமை என்பது வெறும் கவிதை உத்தி அல்ல. அது

மர்மங்களைப் பார்க்க உதவும் ஞானக்கண்"[23] என்கிறார். அவ்வகையில் கவிஞர் தங்கம் மூர்த்தி கவிதைகளில் கையாண்டுள்ள உவமைகளைப் பின்வருமாறு விளக்க இயலும். உவமை வினையுவமை, பயன் உவமை மெய்யுவமை, உருவுவமை என்னும் நான்கு நிலைகளில் அமையும்.

**வினையுவமை**

மாலை நேரத்தில் கூட்டில் அடைகின்ற பறவைகள் அழகாக வரிசையாய்ப் பறந்து செல்வதைச் சூரியன் மறைந்த நிலையில் அது இறந்ததாகக் கருதி மௌன ஊர்வலமாய்ச் செல்வதாக உவமிக்கிறார்.(த.மூ.க.ப.99)

காதலியின் நினைவிலிருந்து மீள முடியாத காதலன் புலம்பும்,

**"துடைக்கத் துடைக்க**
**உன் நினைவுகள்**
**ஒட்டடையாய்" (ம.கை.ப.37)**

என்னும் கவிதையும் இதற்குச் சிறந்த சான்றாகும்.

**உருவுவமை**

காதலின் பரிணாமத்தைக் காட்டும் இடத்தில் கவிஞர் காதல் பற்றி,

**"சீதையைப் போல்**
**மென்மையானது**
**ராமனைப் போல்**
**உண்மையானது." (க.ந.கா.ப.45)**

என உரைப்பர். மென்மைக் காதலுக்குச் சீதையையும், உண்மைக் காதலுக்கு இராமனையும் உவமை காட்டுகிறார். கடலில் பொங்கும் நுரைக்கு ஷாம்பு நுரையை ஒப்புமையாக்கி (த.மூ.க.ப.94) இரண்டிற்கும் உருவ ஒற்றுமை காண்கிறார் கவிஞர்.

புத்தகத்தின் குரலாக,

**"நான்**
**ஒரு குழந்தையைப் போல**
**அன்புக்கரம்**
**நீட்டுவோரிடத்தில்**

**அடைக்கலமாவேன்.**
**உயிர்த்தோழனைப்போல**
**நீங்கள்**
**வீழ்கின்றபோதெல்லாம்**
**எழ வைப்பேன் (க.ந.கா.ப.64-65)**

என உவமைப்படுத்துகிறார். புத்தகத்தின் பக்கங்கள் படபடத்து அசைவதற்கு இதயத் துடிப்பினை உவமை கூறுகிறார்.(க.ந.கா.ப.69)

**"என்னை**
**அ.்.றிணையைப் போல்**
**அலட்சியப்படுத்துகிறார்கள்.**
**நானும்**
**உயர்திணைதான்" (க.ந.கா.ப.68)**

எனப் புத்தகம் தன்னைப் பற்றித் தானே விமர்சிப்பதாய் உவமைமித்தல் இதற்குச் சான்றாகும்.

**பயனுவமை**

காதலின் பயனை உவமை மூலமாக விளக்குபவராகக் கவிஞர் காதலைக் கண்ணாடி என்றும், அலைபேசி என்றும், கணிப்பொறி என்றும் பல கோணங்களில் உவமிக்கிறார். (க.ந.கா.ப.13-14)

**"தூரப்பார்வையாய் இருந்தாலும்**
**துல்லியமாய்த் தெரிகிறது" (க.ந.கா.ப.13)**

என்றும் காதல் என்ற நவீன அலைபேசியில் பேட்டரியும் சிம்கார்டும் கூட இல்லாமல் வாழ்நாள் முழுவதும் பேசிக்கொண்டே இருக்கலாம் என்றும் காலத்திற்கேற்ற உவமையைக் கையாளுகின்றார்.

'தமிழ் நம் வேர்' என்னும் தலைப்பில் தமிழ் மொழியை,

**"நம்மைக் காக்கும்**
**வானம்.**
**நாம் சுவாசிக்கும்**
**காற்று.**

**நம்மை நனைக்கும்**
**மழை (க.ந.கா.ப.104)**

என்று உவமிப்பர். மொழியைக் காற்றுக்கும் வானத்திற்கும், மழைக்கும் ஒப்புமை கூறித் தமிழ் மொழி நம் வாழ்வில் அனைத்துமாய் நின்று பயன் தருவதைப் பயனுவமையால் உணர்த்துகிறார்.

அர்ச்சுனன் கணைகளால் குருசேத்திரப்போர் முடிந்ததைப் போல் இராமனின் கணைகளால் இராவணன் அழிந்தான் (க.ந.கா.ப.69) என இருவரின் கணைகளின் பயனாய் இரு பெரும் போர்கள் முடிவுக்கு வந்ததை உவமை கூறி விளக்குகிறார்.

**மெய்யுவமை**

புத்தகம் தன் வரலாறு கூறுவது போல் அமைந்த கவிதையில் புத்தகம்,

**என்னைக்**
**கிள்ளிப் பார்த்தால்**
**சத்தம் வரும்.**
**கீறிப் பார்த்தால்**
**ரத்தம் வரும். (க.ந.கா.ப.69)**

என்பதில் புத்தகத்தை மனித உருவத்தோடு ஒப்புமைப்படுத்தி உவமித்துள்ளார்.

**கடலென்றால் அலை இருப்பதைப்போல**
**நகர் என்றால் சிலை இருக்கும் (க.ந.கா.ப.155)**

என்பதில் கடலையும் நகரையும்  அலையையும் சிலையையும் உவமிக்கிறார்.

**அடுக்கு உவமை**

'காற்று' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில், காற்றின் பல்வேறு வகைகளை அதன் பயன்களால் அதன் தன்மைகளால் தொடர்புடைய மற்ற கருத்துக்களோடு அடுக்கடுக்காய் உவமை கூறுபவராய், காற்று கண்ணுக்குத் தெரியாததாகவும், கடற்கரையில் உலவும் கடவுளாகவும், இலைகளின் இயக்கமாகவும் நதிகளின் தாயாகவும் இருப்பதாக அடுக்கடுக்காய் ஒப்புமைப்படுத்திக் காட்டியுள்ளார்.

உழவர் தம் அயராத உழைப்பிற்கு ஊதியம் தரும் தைத்திருநாள் பெருமையைப் போற்றும் இடத்து, **நீதான் எம் உழவர்களின் உயிரெழுத்து. உன் வருகையால் மாறும்**

**இவர்தம் தலை எழுத்து. மெய்யெழுத்தாய் மேதினியில் செழித்திருந்தால் நீதான் எங்கள் விடியலை எழுதும் கையெழுத்து (க.ந.கா.ப.112)**

எனத் தை மாதத்தை உயிர் எழுத்து, தலை எழுத்து, கையெழுத்து எனப் பலவாறாக அடுக்குவமைகளால் கூறி அலங்கரிக்கிறார்.

காற்று என்றால் என்னவென்று கவிதை சொல்லவா... என வினவும் கவிஞர்,

**காற்று**
**கண்ணுக்குத் தெரியாத**
**வருடல்.**
**கடற்கரையில் உலவும்**
**கடவுள்.**
**இலைகளின் மேல்**
**உறங்கும் இயக்கம்.**
**நதிகளைத் தாலாட்டும்**
**தாய்மை.**
**உயிர்களின்**
**மூல முகவரி.**
**புல்லாங்குழல் வழியே வரும்**
**இசைப்பாட்டு.**
**கால்பந்துகளில் கைது செய்யப்பட்ட**
**விளையாட்டு (க.ந.கா.ப.24)**

எனப் பலவாறாகக் காற்றுக்கு உவமை பல அடுக்கிக் கூறுகிறார். காற்றின் மற்றுமொரு தனித்தன்மையை,

**காற்று**
**இருக்கும் என்பதை**
**யாரும்**
**பார்க்க முடியாது.**
**காற்று**
**இல்லை என்றால் இங்கு**
**யாரையுமே**
**பார்க்க முடியாது (க.ந.கா.ப.24)**

எனக் காற்றின் இன்றியமையாமையைப் பாடுகிறார்.

**உருவகம்**

உருவகம் குறித்து தண்டியலங்காரம்,

**“உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து**
**ஒன்றென மாட்டின.'. துருவகம் ஆகும்.**[24]

என்று உரைக்கின்றது. உவமையில் நெகிழ்ச்சித் தன்மை உண்டு. உருவகத்தில் செறிவுத் தன்மை உண்டு.

அப்துல்ரகுமான், “உவமையை விட உருவகம் உயர்ந்தது. ஏனென்றால் உவமை வேறுபட்ட பொருள்களுக்கு இடையே உள்ள ஒற்றுமை மட்டுமே சுட்டிக்காட்ட உருவகமோ இரண்டையும் ஒன்றாக்கிவிடுகிறது”[25] என்று கூறுவதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

உருவகத்தினை, ‘நிலை மாற்றம்’ என்று குறிப்பிடும் நீதிவாணன் “தற்காலக் கவிதைகளின் ஒரு சிறப்பியல்பு, அவற்றில் காணப்படும் உருவகமாகும்..பண்புகளையும் திணையையும் பிறவற்றையும் மாற்றி, ஒன்றுக்கு மேல் இன்னொன்றாக ஏற்றி உருவகிப்பதுவே இக்கவிதைகளில் பொதுவாகக் காணப்படும் பண்பு”[26] என்று விளக்குகிறார்.

கவிஞரின் படைப்புகளில் காணலாகும் உருவகங்களைத் தொகை உருவகம், விரி உருவகம், இயைபு உருவகம், முற்றுருவகம் என வகைப்படுத்திக் காண இயலும்.

**தொகை உருவகம்**

உவமை பொருள் ஆகியவற்றுக்கிடையே உள்ள ஒற்றுமையை விளக்குவதாக அமைந்த ஆகிய, ஆக, என்னும் என்பன போன்றவை மறைந்து நிற்பது தொகை உருவகம் ஆகும். நாட்டில் நிலவும் சுகாதாரக் குறைகளைச் சுட்டிக் காட்டுமிடத்து,

**மனிதரைக் கைது செய்து**
**அடைத்தன கொசுக்கள்**
**வலைச்சிறை (த.மூ.க.ப.40)**

என்னும் கவிதை இதற்குச் சான்றாகும். மேலும் வாக்குறுதிப்பூக்கள் (த.மூ.க.ப.40) நட்சத்திரக் குஞ்சுகள் (எ.ப.நா.ப.72) என்னும் உருவகங்கள் சமுதாய நோக்கிலும், இயற்கையை ரசிக்கும் நிலையிலும் அமைந்துள்ளன.

**விரி உருவகம்**

ஆகிய, ஆக, என்னும் என்பன போன்ற சொற்கள் வெளிப்பட்டு நிற்பது விரி உருவகம் ஆகும். கவிஞரின் பாடல்களில், அரசாங்க அலுவலகங்களில் லஞ்சப்பேய் தலை விரித்தாடுவதை விளக்க,

**நான்கு கால்களும்**
**பல கைகளுமாய்**
**அரசாங்க மேசைகள் (த.மூ.க.ப.40)**

என்பர். இதில் மனிதன் மேசையாய் உருவகிக்கப்பட்டுள்ளான்.

மேலும் செடிகள் **பூக்களாய்** சிரித்தன (பொ.பெ.ம.ப.47) **நீர்க்கைகளால்** (பொ.பெ.ம.ப.47) என்பனவும் உருவகங்களே.

தாய்த்தமிழ் காப்பதில் தமிழர் எப்படி இருக்க வேண்டும் என்பதை,

**நாம்**
**விதைகளாய்**
**விழுதுகளாய் கிளைகளாய்**
**மலர்களாய்**
**காய்களாய்**
**கனிகளாய்**
**இலைகளாய்**
**புதுத் தளிர்களாய்**
**வேர்களைக் காத்திடுவோம் (க.ந.கா.ப.109)**

என அடுக்கி வரும் விரி உருவகத்தால் அறியச் செய்கிறார்.

**இயைபு உருவகம்**

ஒன்றற்கொன்று தொடர்புடைய பொருட்கள் ஒரு தொடரிலே உருவகமாக வருவது இயைபு உருவகமாகும்.

**இரவுக்கூட்டுக்குள்ளே**
**நட்சத்திரக் குஞ்சுகள்**
**இரை தேடி**
**அலையும் நிலா (எ.ப.நா.ப.73)**

எனும் கவிதையில் நிலவைத் தாயாகவும் நட்சத்திரங்களைக் குழந்தைகளாகவும் உருவகித்துள்ளார். திருவள்ளுவரைப் பற்றி ‘இரு வரிகளில் ஒரு ஓவியம்’ என்னும் தலைப்பில்,

**ஒவ்வொரு குறளும் ஒவ்வொரு வானம்**
**அதில்**
**ஏழு சொற்களால் வானவில் வரைந்தவர்**
**வள்ளுவர் (த.சி.த.த.ப.51)**

எனக் குறளை வானங்களாகவும், ஒவ்வொரு குறளிலும் உள்ள ஏழு சொற்களை வானவில்லாகவும் உருவகப்படுத்தி உள்ளார் கவிஞர்.

**அணி**

அணி என்பது அணிகலன், அழகு சேர்ப்பது என்று பொருள்படும். கவிதைக்கு அழகு சேர்ப்பது அணியாகும். கவிஞர்கள் தாம் பாடும் கவிதைகளில் அணிநலன் அமையப்பாடுவது இலக்கிய மரபு ஆகும். இலக்கியம் என்பதே எந்தப் பொருளைப் பற்றிக் கூறுவதாயினும் அதில் சொல்லழகு கூட்டி, சுவை சேர்த்து, பயில்வோரின் மனம் இன்புறும் வண்ணம் அமைப்பதே ஆகும். சொல்லின் அழகும் பொருளின் நயமும் சேரும்போது கவிதையின் எழில் நலம் பெருகும். கவிஞர் தங்கம் மூர்த்தி தம் படைப்புகளில் பல்வேறு அணிநயம் அமையப் பாடல் புனைந்துள்ளார்.

**உயர்வு நவிற்சி அணி**

“ஆர்வம் பற்றி நிகழும் மொழி மிகத் தோன்றச் சொல்லுவது உயர்வு நவிற்சி அணி ஆகும்.”[27] இதற்கு ஆர்வமொழி அணி என்னும் பெயருமுண்டு. மகளின் மகிழ்ச்சிக்காகப் பட்டாம்பூச்சி பிடித்துக் கொடுத்தவுடன் நிகழ்ந்ததை உயர்வு நவிற்சியாக,

**பட்டாம்பூச்சி**
**பிடித்துக் கொடுத்தேன்**
**இறக்கை முளைத்தது மகளுக்கு (த.மூ.க.ப.63)**

என்றுரைப்பர்.

**வஞ்சப்புகழ்ச்சி அணி**

ஒருவரை இகழ்வது உள்நோக்கமாக இருக்கும், வெளிப்படையாகப் புகழ்வது போல பேசுவர். ஆனால் அதன் உட்பொருள் பழிப்பதாக இருக்கும். பழிப்பிற்கு ஆளானவர்க்கு இது வஞ்சகம். ஆதலினால் புகழ்வது போல பழிக்கும் வஞ்சப்புகழ்ச்சி அணியை 'மாறுபடுபுகழ்நிலையணி' என்றும் அழைப்பர்.[28]

**சிரிக்காமலே**
**குழி விழுகிறது**
**எங்களூர் சாலைகளுக்கு (த.மூ.க.ப.109)**

என்பது வஞ்சப்புகழ்ச்சி அணிக்குச் சிறந்த சான்றாகும்.

**பிறிது மொழிதல் அணி**

செய்யுளில் உவமையைக் கூறிப் பொருளைப் பெற வைப்பது பிறிது மொழிதல் அணி ஆகும்.

கடவுளின் படைப்பில் உன்னதமானதாகக் கூறப்படும் மனித இனம் தன்மேன்மையை மறந்து தமக்குள் உயர்வு தாழ்வு கற்பித்து, சாதி மதப் போர்வையால் சண்டையிட்டுத் திரிவதைக் கண்டிக்க விரும்பிய கவிஞர்,

**பகை கொள்வதில்லை**
**பழக்கடை ஈக்களும்**
**சாக்கடை ஈக்களும். (பொ.பெ.ம.ப.31)**

என்பதில் பறக்கும் பூச்சிகள் கூடத் தம்முள் பேதம் கற்பித்துக் கொள்வதில்லை. ஆனால் மனிதர் தனக்குள் உயர்ந்தவன் தாழ்ந்தவன் எனப் பிரித்து மனவேறுபாடு கொள்கின்றனர். அது கூடாது என்னும் கருத்தைப் பெற வைப்பதால் இது பிறிது மொழிதல் அணியின்பாற்படும்.

**வேற்றுமையணி**

செய்யுளில் முதலில் உவமான, உவமேயங்களை ஒன்றுபடக் கூறி பின் அவற்றுக்கிடையே வேற்றுமை தோன்றக் கூறுவது வேற்றுமை அணி ஆகும்.[29]

'வில்லிலிருந்து கணை-வெளிப்படும் வேளை' எனும் தலைப்பிலான கவிதையில், வில்லில் இருந்து வெளிப்படும் கணைகளின் இயல்பு கூறும் இடத்தில்,

**மற்ற கணைகள்**
**இரத்தத்தை வரவழைக்கும்.**
**மலர்க்கணைகள்**
**முத்தத்தை வரவழைக்கும்.**
**மற்ற கணைகளால்**
**உயிர்களுக்கு சேதாரம்.**
**மலர்க்கணைகள்தான்**
**புதிய**
**உயிர்களுக்கு ஆதாரம் (க.ந.கா.ப.103)**

என்றுரைப்பர். இதில் கணைகளின் இயல்பை வேறுபடுத்தி, அதன் உயர்வைச் சிறப்பித்து வேற்றுமைப்படுத்தியுள்ளார் கவிஞர்.

**இருண்மை**

வெளிநாட்டுத் தாக்கத்தினால் தமிழ்க் கவிதையில் ஏற்பட்ட ஒரு வகை உத்தி 'இருண்மை' (obscurity) ஆகும். இதைக் 'கூடார்த்தம்' என்றும் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர். இருண்மைக் கவிதையின் நடை எளிமையாக இருக்கும். பொருள் புரிதல் மிகக் கடினமாக இருக்கும்.[30] என்பர்.

சில புதுக்கவிதைகளை ஒருமுறை படித்தால் பொருள் புரிவதில்லை. வாசகர் பலமுறை படித்துத் தம் அறிவை நுட்பமாகப் பல கோணங்களில் செலுத்தினால்தான் ஓரளவு பொருள் புரிகின்றது. எனவே இருண்மைக் கவிதைகளைத் திறனாய்வாளர்கள் உயர்த்தியும் தாழ்த்தியும் பேசுகின்றனர். கவிஞர் பாலா, "புதுக்கவிதையின், வெளியீட்டு முறைகளில் ஒரு பெரிய குறையாகச் சொல்லப்படுவது அதன் இருண்மையும் (obscurity) பொருள் மயக்கத்தொனியும் (Ambiquity) பற்றியது"[31] என்கிறார்.

மு.செல்வசேகரன், "இருண்மை என்பது கவிஞர் தன் உள்ளக் கருத்தை வெளிப்படுத்தாமல் கவிதைக்குள் புதைநிலையில் வைப்பதாகும்"[32] என்கிறார். கவிஞர் தங்கம் மூர்த்தியும்

**"தோட்டக்காரன்**
**மறைத்து வைத்திருக்கிறான்**
**கோடரிகளை" (பொ.பெ.ம.ப.26)**

எனவும்

**“கோபுரத்தில் குருவிகள்**
**அறிவதில்லை**
**கடவுளின் வேதனை” (மு.பூ.ரோ.ப.84)**

எனவும் இருண்மைக் கவிதைகளைப் படைத்துள்ளார்.

கோபுரத்தில் குருவிகள் அமர்வதில் கடவுளுக்கு என்ன வேதனை இருக்க முடியும்? அவை கோபுரத்தில் எச்சமிட்டுச் செல்வதா? அல்லது தான் மட்டும் சிறகு கொண்டு பறக்க இயலாமல் ஒரே இடத்தில் அமர்ந்திருக்க வேண்டியுள்ளதாக எண்ணமா? எது கடவுளை வேதனை அடையச் செய்தது என்பதை வாசகனின் கையில் விட்டுத் தாமே பொருள் கொள்ளுமாறு இருண்மை உத்தியில் படைத்துள்ளார் கவிஞர்.

**பன்னூற் புலமை**

கவிஞர்கள் தம் கவிதைகளில் தாம் அறிந்த பல்வேறு இலக்கியக் கருத்துகளைப் பயன்படுத்துவதுண்டு. வல்லிக்கண்ணன், “உலக இலக்கியத்தில் புதுக்கவிதை பிரம்மாக்கள் தங்கள் படைப்புகளில் பழங்கவிதைகளிலிருந்து சில சில வரிகளைப் பொருள் பொதிந்த வாக்கியங்களை அப்படியப்படியே எடுத்தாண்டு தங்களுடைய கற்பனையை வளர விடுவதை ஒரு உத்தியாக அனுஷ்டித்து இருக்கிறார்கள்[33] என்கிறார்.

கவிஞர் தங்கம் மூர்த்தியும் தம் படைப்புகளில் திருக்குறள், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், பாரதியார் பாடல்கள் போன்ற நூல்களின் கருத்துகளை, தொடர்களைத் தம் கவிதையில் பல இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

திருக்குறட் கருத்துகளை கல்வி இல்லாதவனின் கண்களைப் புண்கள (க.ந.கா.ப.11) என்றும், நோய்நாடி பிடிக்கும் வள்ளுவர் (க.ந.கா.ப.15) என்றும், இன்பத்துப்பாலில் 250 குறட்பாக்களிலும் (க.ந.கா.ப.17) என்றும், செல்வத்துள் எல்லாம் தலை (க.ந.கா.ப.17) என்றும் பல்வேறு குறட் கருத்துக்களைத் தம்கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.

சிலப்பதிகாரம் பற்றிக் குறிப்பிடுகையில் கோவலன் கொலையுண்டது காலம் தந்த அடிகள் என்றும் பாண்டிய நெடுஞ்செழியன் ‘கெடுக என் ஆயுள்’ என மாண்டது நீதி தேவதை அடித்த அடிகள் என்றும் இது தான் இளங்கோவடிகள் என்றும் கூறி சிலப்பதிகாரத்தை நம் கண்முன்னே கொண்டு வருகிறார். (அ.வா.வி.எ.நி.ப.55)

கம்பர் குறித்து உரைக்கும்போது, சொல்லின் செல்வன் என்று போற்றப்படும் அனுமன் அசோக வனம் சென்று சீதையைக் கண்டு திரும்பிய பின்னர் இராமனைச் சந்திக்கிறான். அப்போது அனுமன் என்ன சொல்லப் போகிறானோ என்ற மனக் கலக்கம் அனைவருக்குமே. அச்சூழலில் அனுமன் ‘கண்டேன் கற்பினுக்கு அணியைக் கண்களால்’ என்று தொடங்கி, ராமனின் மனதில் பால் வார்க்கிறான். இச்செய்தியைக் கவிஞர் ‘மென்மைக் காதல்’ என்னும் தலைப்பில் அமைந்த பாடலில் சீதையைப் பற்றிக் கூறுமிடத்து, சீதை தன் கற்பின் மேன்மையை உலகிற்குச் சொல்லத் தீயில் புகுந்து வருமாறு இராமன் பணித்ததைக் காட்டுகிறார்.

**கண்டேன்**
**கற்பினுக்கணியை**
**என்று**
**அனுமன்**
**சொன்னதைப் போலவே**
**அக்கினியும்**
**சொன்னது.... (க.ந.கா.ப.49)**

என்று பாடி, தனது பன்னூற் புலமையைத் தெற்றெனப் புலப்படுத்துகிறார்.

**பழமொழிகளைக் கையாளுதல்**

‘ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா’ என்பது பழமொழி. இதன் உட்கருத்தானது ஐந்து வயதுள்ள குழந்தைக்கு அதன் இளம் பிராயத்திலேயே நல்ல குணநலன்களைக்கூறிப் பக்குவப்படுத்தி வளர்க்காவிட்டால் அவன் 50 வயதில் வாழ்வில் நல்ல செயல்களுக்கு உரியவனாக, வாழ்க்கைச் சூழலுக்குத் தேவையானவாறு தன் குணங்களை எவ்வாறு மாற்றித் தன்னைப் பக்குவப்படுத்த இயலும்? இயலாது என்பதே பதிலாகும். இப்பழமொழியை,

**ஐந்தில் வளையாதது**
**ஐம்பதில் வளையும்**
**ஐநூறு என்றால் இன்னும் வளையும் (க.ந.கா.ப.55)**

எனக் கையூட்டு காரியம் சாதிப்பதை விளக்குவதற்குக் கையாண்டுள்ளார்.

பாரதியாரின் கொள்கைகளிலும் கருத்துகளிலும் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர் கவிஞர். தம் கவிதைகளில் அவ்வப்போது பாரதியாரின் கருத்துகளை எடுத்தியம்பி உள்ளார்.

பாரதி சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்[34] என்று விண்வெளி ஆராய்ச்சி பற்றிக் குறிப்பிடுவதைக் கவிஞர் தன் கவிதையில் மிகுந்த பெருமையோடு,

**வானூர்திகளை**
**நம் இலக்கியங்கள் தான்**
**முதலில் இயக்கின.**
**ஆகாய விமானங்கள்**
**அதற்குப் பிறகுதான்**
**சந்திர மண்டலத்தியலை**
**பாரதி முதலில் கண்டு தெளிந்தான் (க.ந.கா.ப.106-107)**

என்று பாடுகிறார்.

கல்வி ஒன்றுதான் நம் தேசத்தை, தேசத்து மக்களைக் காக்க வல்லது என்ற உறுதியான கொள்கை கொண்டவன் பாரதி. இதனை,

**“பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம் எங்கள்**
**பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்”**[35]

என்று பெருமிதமாய்ப் பாடினான் . பாரதியின் கனவு இன்று மாறிப்போயுள்ள நிலையை, கல்வியை வியாபாரப் பொருளாக்கிக் காசு பார்க்கும் இழிநிலையைப் பாரதியின் வரிகளாலேயே உணர்ததுபவராய்,

**பள்ளித் தலமனைத்தும்**
**கோயில்கள் செய்தோம் -**
**உண்டியல் (மு.பூ.ரோ.ப.39)**

என வருந்திப் பாடுகிறார்.

அறிவொளித் திட்டம் என்பது நாட்டு மக்களிடையே எழுத்தறிவு பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தும் ஒரு எழுத்தறிவுத் திட்டம். 1990களில் செயல்படுத்தப்பட்ட இத்திட்டத்தின் பயனை விளக்குவதாக அமைந்த கவிஞரின் ‘அறிவிற் சிறந்த கோவில் இல்லை’ என்ற தலைப்பிலான கவிதையில்,

**“தலைவாரி ஊக்கமளித்து**
**பாடசாலைக்குப் போவென**
**பாசம் காட்டியதால்**
**“அறிவொளி”**
**எமக்கு அன்னை (த.மூ.க.ப.43)**

என்கிறார். இக்கவிதை,

**“தலைவாரிப் பூச்சூடி உன்னைப் பாட**
**சாலைக்குப் போவென்று சொன்னாள்**
**உன் அன்னை”**[36]

என்ற பாவேந்தரின் அடிகளை நினைவுபடுத்துகிறது.

மனித வாழ்வில் எல்லோரும் ஏதேனும் ஒரு நோக்கத்தோடு உழைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். இதில் அவரவர் விதிக்கப்பட்ட அளவிற்கு நல்லவராகவும், அல்லவராகவும், வல்லவராகவும் வாய்ப்பற்றவராகவும் வாழ்வைக் கடந்து செல்கிறார்கள் .ஆனால் எல்லோருக்கும் இறுதி என்பது ஒன்று உண்டு என்பதை மறந்தவராகவே பலர் பிறரை வருத்தித்தான் முன்னேறிச் செல்லப் பார்க்கின்றனர். அத்தகையவரைக் கவிஞர், கடவுளுக்கும் நமக்குமான காலப்பத்திரம் ஒன்று உள்ளது. எதற்கும் தப்பியவரும் இதற்குத் தப்பிவிட இயலாது. அக்காலப் பத்திரத்தில் எழுதப்பட்ட சரத்துக்கள் இந்துக்களுக்கு கீதையிலும் இஸ்லாமியர்க்கு குரானிலும் கிறித்தவருக்கு பைபிளிலும் நிரவிக் கிடக்கின்றன (க.ந.கா.ப.152) என்கிறார். இதில் புனித நூல்களை மேற்கோள் காட்டி அனைத்து மதங்களும் போதிப்பது அன்பை மட்டுமே என அறிவுறுத்தி அவ்வாறு அன்பின் அடிப்படையில் வாழ்ந்தால்

**வாழ்க்கை**
**பத்திரமாகும்**
**வரலாற்றில்**
**சித்திரமாகும்** (க.ந.கா.ப.152)

என நல்வாழ்வுக்கு வழி அமைத்துக் காட்டுகிறார்.

**ஆங்கிலக் கலப்பு**

கவிதைகளின் பொருட்சிறப்பிற்காக சில இடங்களில் ஆங்கிலச் சொற்களைக் கலந்து, எழுதுவது கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிஉத்தியாக உள்ளது. அவை பின்வருமாறு

உயிரின் வேர் என்னும் கவிதையில் பேருந்தில் துவங்கும் காதல் அடுத்த **ஸ்டாப்பில்** இறங்கி விடும் (த.மூ.க.ப.53) என்பர்.

அந்த இரண்டுநாட்கள் என்னும் கவிதையில், தொலைக்காட்சிப் பெட்டி பழுதடைந்துள்ள நிலையில் ஏற்படும் மகிழ்ச்சிகுறித்து உரைக்கும் நிலையில் மெக்கானிக், ரிப்பேர் என்னும் சொற்களைக் கையாண்டுள்ளார் (த.மூ.க.ப.81)

ஆரம்பப் பள்ளியில்
**டீச்சரைக்** கிண்டலடித்த
**பஸ்சின்** நெரிசலில் (த.மூ.க.ப.93)

எங்கு கிடைக்கும்
அந்த **~hk;G+**
Eiunghq;Fk; fly; (j.%.f.g.94)

vq;fs; Chpy;
**NuhL** Nghl;lhh;fs;
ey;ykio
vq;fs; Chpy;
**NuhL** Nghltpy;iy (j.%.f.g.115 )

vd;Dk; ftpijfspy; Br;rH> g];> ~hk;g+> NuhL vd Mq;fpyr; nrhw;fis thHj;ijfshff; ifahz;Ls;shH. ,J Nghd;Nw ngz;nzd;why; pay Ak; ,uq;Fk;. (ngh.ngh.k.g.45) vd;gjpy; tof;fpy; cs;s NgAk; ,uq;Fk; vd;gij Mq;fpyr; nrhy;yhf;fp;g; nghUs; Gyg;gLj;Jfpwhh;.

**தொகுப்புரை**

- இலக்கியங்கள் அவை கூறும் கருத்தால் மட்டும் கவின் பெற்றுத் திகழவில்லை. உணர்த்தும் திறத்தாலும் அவை ஒளி பெற்றும் உயிர் பெற்றும் திகழ்கின்றன. இலக்கிய உணர்வு கூறும் பொருளில் இல்லை; உணர்த்தும் திறத்தில் உண்டு என்பதற்கேற்ப கவிஞனின் மொழித் திறமையும் ஆளுமையும் உத்தியைச் சிறப்பாகக் கையாள உதவுகின்றன.
- தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் பல ஹைக்கூ என்னும் குறும்பா வகையின. இச்சிறிய வடிவிலும் எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, அடுக்குத்தொடர், உவமை, உருவகம் என்பன போன்ற பல்வேறு உத்திகளைக் கையாண்டு தம் படைப்புகளைச் சிறக்கச் செய்துள்ளார். இதுமட்டுமன்றி தொடர்நிலைச் செய்யுள் அமைப்பில் புனையப்பட்ட தொடர்நிலைப்பாக்களிலும், இவ்உத்திகளைக் கையாண்டுள்ளார்.
- 'சூர்ப்பனகையுடன் ஒரு சுற்றுப்பயணம்', 'நடிகர் திலகத்திற்கு மரியாதை' போன்ற கவிதைகள் கதைப் பாங்குடன் அமைந்துள்ளன.
- அடுக்கு வினா அமைப்பில் 'வீசிய துண்டுகள்' எனும் தலைப்பில் அடுக்கடுக்காய் வினாக்கணை தொடுத்து வறுமையுற்ற வாக்காளனின் அவலநிலையை விளக்குகிறார்.
- கருத்து வெளிப்பாட்டிலும் கவிதை அமைப்பிலும் உரையாடல் உத்தி சிறந்த இடத்தைப் பெறுகின்றது. பேச்சு மொழியின் ஆளுமையை இவ்வகைக் கவிதைகள் தன்னகத்தே கொண்டுள்ளன.
- இன்றைய கல்வி நிலையங்களின் போக்கைக் கண்டிக்கும் விதமாக 'மூச்சுத்திணறும் சரஸ்வதி தேவி' எனும் தலைப்பிலான கவிதையில், கேள்விகளுக்கு விடை இல்லாமல் சரஸ்வதி தேவியே கலங்குவதாகக் கூறுவது வினா-விடை வடிவ உத்திக்குச் சிறந்த சான்றாகும்.
- வினை, பயன், மெய், உரு, அடுக்குவமை போன்று உவமையின் பல்வேறு வகைகளை உத்திகளாகக் கையாண்டுள்ளார்.
- உருவகங்கள் தொகை உருவகம், விரி உருவகம், இயைபு உருவகம் என்னும் நிலையில் உத்திகளாகக் கைக்கொள்ளப்பெற்றுள்ளன.
- இருண்மை உத்தியும் 'கூடார்த்தம்' எனும் உத்தியும் இவர்தம் கவிதைகளில் காணப்பெறுகின்றன.
- தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் அவர்தம் பன்னூல் புலமையும், பழமொழியும் உத்திகளாக வெளிப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. தொல்காப்பியம், பொருளதிகாரம் நூ.656.
2. நன்னூல், சூ.14.
3. இரா. இராசேந்திரன், புதுக்கவிதை இலக்கணம், நூ.155.
4. சு.பொன்னியின் செல்வன், வைரமுத்து படைப்புகளில் வளமும் வடிவமும், பக்.177-178.
5. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,ப.101.
6. முனைவர் சுபாசு, எது புதுக்கவிதை? ப.83.
7. மேலது.ப.29.
8. மேலது.ப.29.
9. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,ப.94.
10. பாரதியார் கவிதைகள்.ப.158.
11. வைரமுத்து, இதனால் சகலமானவர்களுக்கும், ப.56.
12. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,ப.95.
13. மேலது. ப.96.
14. மீரா, எதிர்காலத் தமிழ்க் கவிதை,ப.51.
15. தொல்காப்பியம்,நூ.538.
16. மா. கோவிந்தராசு புதுக்கவிதைக் கட்டமைப்பு,ப.164.
17. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.210.
18. தொல்காப்பியம், நூ.429.
19. சு.அரங்கராசு, புதுக்கவிதை - ஒரு திறனாய்வு, பக்.286-287.
20. இரா.இராஜேந்திரன், புதுக்கவிதை இலக்கணம், நூ.53.
21. முனைவர் சுபாசு, எது புதுக்கவிதை? பக்.61-62.
22. மா. கோவிந்தராசு புதுக்கவிதைக் கட்டமைப்பு,பக்.131-132.
23. அப்துல் ரகுமான், காற்று என் மனைவி, ப.101.
24. தண்டியலங்காரம்,சூ.34.
25. அப்துல்ரகுமான், சோதிமிகு நவ கவிதை, பக்.54-55.
26. ஜெ.நீதிவாணன், நடையியல், ப.148.
27. தண்டியலங்காரம்,சூ.67.
28. மேலது.சூ.82.
29. மேலது.சூ.48.
30. மா. கோவிந்தராசு புதுக்கவிதைக் கட்டமைப்பு, ப.194.

**31.** கவிஞர் பாலா, புதுக்கவிதை ஒரு பார்வை,ப.148.

**32.** மு.செல்வசேகரன், தமிழ்க் கவிதை வரலாற்றில் புத்தாண்டுக் காலவளர்ச்சி,ப.200.

**33.** வல்லிக்கண்ணன், எழுத்து ப.241.

**34.** பாரதியார் கவிதைகள், ப.159.

**35.** மேலது, ப.157.

**36.** மேலது, ப.160.

## இயல் நான்கு

## தங்கம் மூர்த்தியின் படைப்பாக்க நெறியில் மரபும் புதுமையும்

ஒவ்வொரு காலத்திற்கும் அந்தந்தக் கால வாழ்க்கை முறைகளுக்கு ஏற்பப் புதிய அனுபவங்கள் கிட்டுகின்றன. புதிய வாழ்க்கைத் தேவைக்கு ஏற்ப, புது அறிவு கிட்டுகிறது. புதிய வாழ்க்கை அதன் தேவைக்கு இசையாத, அறிவுக்கு இசையாத முந்தைய அறிவு அனுபவங்களைப் புறக்கணித்து விடுகிறது. அப்போது பழைய மரபு மறைந்து புது மரபு ஒன்று தழைக்கிறது. புதிது புதிதாய் இலக்கியங்கள் தோன்றத் தோன்ற பழைய இலக்கிய மரபுகள் செல்வாக்கு மெல்ல மெல்லக் குறைந்து வருமே தவிர அடியோடு நீங்கி விடுவதில்லை. எனவே பழைய மரபுகள் ஓரளவு இருந்து வர புதிய இலக்கியங்கள் அந்த மரபுகளை ஒட்டியும் ஒட்டாமலும் காலத்திற்கு ஏற்ப அமைந்து வருதல் உண்டு.

செல்வாக்குள்ள பழைய இலக்கியங்கள் பின்னர் வந்த படைப்பாளிகளுக்கு அதைவிட உயர்ந்த அல்லது அதே தரத்ததான படைப்பை உருவாக்கும் ஆர்வத்தைக் கிளர்ந்து எழச் செய்கின்றன. ஒரு படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் பழைய இலக்கிய மரபுகளைப் போற்றுவதும் பழைய இலக்கிய மரபுகளை மறுத்துப் புதியவற்றைப் புகுத்துவதும் அவர்களின் புதிய எண்ணத்தைப் புலப்படுத்துவதாக அமையும். அவ்வகையில் தங்கம் மூர்த்தி கவிதைகளில் காணலாகும் மரபுச் சிந்தனை, காலத்திற்கேற்ப கருத்தியல் மாற்றம் பெற்ற நிலையை இவ்வியல் விளக்குகின்றது.

### மரபு பற்றி அறிஞர்கள் சிந்தனைகள்

'பழமை பாராட்டுவதே மரபின் அடிப்படை மரபு மட்டும் இல்லையானால் ஒருவர் ஆக்கிய கலையை, மற்றவர் அனுபவிக்க முடியாமல் போய்விடும். இலக்கியம், மரபுகளை ஒட்டி நிலைத்திருக்கும் ஒரு கலையாகும்'[1] என்பர் மு.வரதராசனார்.

'இலக்கிய வளர்ச்சிக்குத் தடையாக இருப்பவை தாமே வலியிழந்துவிடும். மரபுகளுக்கு ஏற்ப இலக்கியம் செய்ய வேண்டும் என்பது பொருந்தாது என்றால், அவற்றை எதிர்த்துத் தள்ளிப் புறக்கணித்துத் தான் இலக்கியம் செய்ய வேண்டுமென வலிய முயல்வதும் பொருந்தாது.[2] என்பர் பேராசிரியர் அ.சிதம்பரநாதன்.

'மரபு' என்ற சொல்லாட்சி தொல்காப்பியர் காலத்திலேயே கையாளப்பட்டுள்ளது. தொல்காப்பியர் மரபு என்பதை இயல்களின் தலைப்புகளாக்கி நூன்மரபு(இயல்1)

மொழிமரபு (இயல்2) தொகைமரபு(இயல்3) விளிமரபு(இயல்4) மரபியல் (இயல்5) எனப் பெயரிட்டுள்ளார்.

**‘மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை’[3]**

**‘மரபுவழிப்பட்ட சொல்லி னான’[4]**

‘மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்’[5] என்னும் மரபியல் நூற்பாக்கள் தொல்காப்பியர் மரபிற்கு அளித்திருந்த முக்கியத்துவத்தை எடுத்துரைப்பன.

மரபு என்பது முந்தைய தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், முடிவு, அறிவு ஆகிய அனைத்தும் சேர்ந்தது. கால நீட்சியில் மானுட வர்க்கம் தன் அறிவுத் தேட்டத்தில் அனுபவத் திளைப்பில் உணர்ந்து தெளிந்து உருவாக்கிய முடிவுகள் அவை. வருங்காலத்திற்கென்று இலக்கியமாக, சமயமாக, அறநெறியாக, பிற அறிவுத் துறைகளாக முந்தைய தலைமுறை விட்டுச்சென்ற அனுபவத்திரட்டு தான் மரபு. அறிவுத்தேட்டத்தில் கிடைத்த செல்வம் தான் மரபு[6] என்பர் பாலா.

மரபு என்ற சொல்லை உள்ளடக்கியதாகப் பண்டைய இலக்கியச் செய்திகள் மட்டுமின்றி மக்கள் தங்கள் அன்றாட வாழ்வில் பின்பற்றிய ஒழுகலாறுகள், அனுபவ மொழிகள், அவர்களின் பயன்பாட்டில் இருந்த பண்டைய சாதனங்கள் இவற்றையும் கொள்ளலாம். எனவே கால, களப் பின்னணிக்கு ஏற்ப இலக்கியங்களிலும் கருத்து மாற்றமும் கருத்து மாற்றத்திற்கு ஈடு கொடுக்கும் வகையில் இலக்கியவகை மாற்றமும் நடைபெற்று வருகிறது

**மரபு மாற்றம் குறித்த அறிஞர்கள் சிந்தனைகள்**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பரந்த நிலப்பரப்பும் குறைந்த மக்கள்தொகையுமாய் வாழ்ந்த தமிழ் மக்களின் வாழ்க்கையைச் சங்கக் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன. பின்னர் ஏற்பட்ட அரசியல், சமூக ரீதியிலான மாற்றங்கள் நிறைந்த காலக்கட்டத்தில் பதினெண்கீழ்க்கணக்கு ஆசிரியர்கள் அறம் கூறுதலைத் தம் இலக்கிய நோக்கமாகக் கொண்டனர். வள்ளுவர் போன்ற இலக்கியவாதிகள் சிந்தனை மரபில் ஒரு மாற்றமாக, ‘பரத்தமை ஒழுக்கம்’ பேசிய சங்கக் கோட்பாட்டை ஏற்க விரும்பாதவராக, பரத்தமையைக் கண்டித்து ‘புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு’[7] என்று பாடுவதைக் காண்கிறோம்.

பக்திக் காலத்தில் ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்றோர் பக்திப் பெருக்கில் திளைத்து இறையுணர்வுத் தேடலில் திளைத்தனர். இவ்வாறு ஏற்பட்ட சமயச்

சடங்குகளுக்கான முக்கியத்துவத்தைக் கண்டு வெறுப்புற்ற சித்தர்கள், ‘பாடினால் உன்னைப் பெறலாமே’ என்ற கூற்றிற்கு எதிராகக் என்று கேள்வி எழுப்பினார்கள்.

9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார் சைவம், வைணவம், சமணம் போன்ற சமயப் பூசலில் இருந்து விடுபட்டு சமரச நெறிக்கு அழைப்பு விடுக்கிறார். விடுதலைக் காலத்தில் தோன்றிய பாரதி பாடல்களில் தேசபக்தி என்பதே புதியதொரு கவிப்பொருளாகிறது. பின்னர் வந்த பாரதிதாசனிடம் மொழி உணர்ச்சி பற்றிய கருத்துகள் முதன்மைப்படுகின்றன.

இவ்வாறாக, காலத்திற்குக்காலம் வாழ்க்கையை இன்னதென்று அடையாளம் காட்டும் முயற்சியில் தமிழ்க் கவிஞர்களின் சிந்தனையும் காலந்தோறும் மாறி வந்திருக்கிறது. இத்தகைய சிந்தனை மாற்றங்களை உள்ளடக்கியதுதான் இலக்கிய மரபு ஆகும்.

கவிதையில் ஒரு முறை மரபுகள் அமைந்துவிட்ட பிறகு அடுத்து வரும் பாட்டுகள் கூடிய வரையில் அந்த மரபுகளைப் போற்றியே அமைகின்றன. புதிய உணர்ச்சிகள் எழுந்து புதிய போக்கில் பாடும்போது அம்மரபுகளில் சில கடந்து அமைவதும் உண்டு. ஆகவே, மரபுகள் பெரும்பாலும் பிற்கால இலக்கியங்களுக்கு வழிகாட்டியாகவும், சிறுபான்மை ஏவலாளாகவும் இருந்து வரும். மிகப்பெரும் புலவர்க்கு அதை குற்றேவல் புரியும் அளவிலேயே நிற்கின்றன. அவர்களாலேயே மரபு மாறி அமைகின்றன[8] என்றுரைப்பர் மு வரதராசனார்.

இலக்கிய வளர்ச்சிக்கு மாற்றம் தேவை. ஆனால் அது அடிப்படையையே அகற்றி விடுவதாக அமையக்கூடாது. சிறந்த கவிஞன் தன் மதிநுட்பத்தால் தேவையான சிற்சில மாற்றங்களைச் செய்கிறான். அதனால் இலக்கியப் படைப்பு வலிவும் பொலிவும் ஏரும் எழிலும் பெறுகின்றன. சிலப்பதிகாரம் சங்கப்பாடல் மரபைச் சிறிது மாற்றியுள்ளது. திருக்குறளும் இவ்வாறு மரபை மீறி உள்ளது. ஆனால் இவை மரபை முறிக்கவில்லை. எனவேதான் அவை இன்னும் வாழ்கின்றன[9] என்பர் பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன்.

மரபு மாற்றத்திற்குக் கால வளர்ச்சி, பாடுபொருள் ஒற்றுமை, சமுதாய மாற்றம், புதுமை வேட்கை ஆகியவை காரணங்களாக அமைகின்றன. இம்மரபு மாற்றங்கள் புதிய மரபு, மரபு வளர்ச்சி, மரபுப் பிறழ்ச்சி, மரபு வீழ்ச்சி என்னும் நான்கு நிலைகளில் அமையும் என்பர்.[10] முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை.

இவ்வாறாக, சங்ககாலம் தொட்டு இன்றைய 21 - ஆம் நூற்றாண்டு வரையான கால வெளிகளில் புதிய மரபுகள் பிறப்பதும் பழைய மரபுகள் பிறழ்வதும் மறைவதும் என மக்களின் வாழ்க்கை மாற்றங்களுக்கு ஏற்பக் காலந்தோறும் காலம் புத்தாடை என்னும் புதுப்புது மரபுகளால் கவிஞர்களின் எண்ணங்களின் மூலம் வண்ணங்கள் பலப்பல கொண்டு பரிமளித்து வருவது கண்கூடு.

**இலக்கியக் கருத்து மரபில் புதுமை**

சிலப்பதிகாரத்தில் கண்ணகியைப் பற்றிக் கூறுமிடத்து இளங்கோவடிகள், 'வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்'[11] என அவள் இல்லத்தை விட்டு வேறெங்கும் சென்றறியாதவள் என்ற பொருளில் பாடியிருப்பார். இதே தொடரைக் கவிஞர் இன்றைய மகளிரின் செயல்பாட்டினை விளக்குவதற்கு,

**நடப்பதே இல்லை நம் பெண்கள்**
**வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள் (த.மூ.க.ப.106)**

என்று பயன்படுத்தியுள்ளார். ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் தம் தேவைகளின் அடிப்படையில் பல இடங்களுக்குப் பயணிக்கின்றனர். அவ்வாறு பயணிக்கும் போது பிறரை எதிர்பார்த்து, அதாவது கணவனோ, தந்தையோ, சகோதரனோ தன்னை அவ்விடத்திற்கு அழைத்துச் செல்ல எதிர்பார்த்து நிற்காமல் தாமே வாகனத்தைச் செலுத்துமளவிற்கு ஏதோ ஒரு வாகனத்தை இயக்கப் பழகிப் பயணித்து வருகின்றனர். இத்தகு தற்சார்பு நிலையை விளக்குமிடத்து இலக்கியத்தொடரைக் கவிஞர் கையாளுகின்றார்.

பெண்களை இழிவுபடுத்தும் மடமை என்ற கோட்டை மதிலை இடித்துப் பொடியாகத் தகர்த்து மாய்ப்போம் என்றும், யாரேனும் பண்டைய மரபு, வேத முறை என்று சொல்லி எதிர்க்க விரைந்தெழுந்தால் அவர்களையும் தீயிட்டுக் கொளுத்தி மாய்ப்போம் எனக் கவியரசர் முடியரசனார்[12] வீர முழக்கமிட்டதைப் போலக் கவிஞரும் சிவகாசி ஜெயலெட்சுமி என்பார் குறித்து எழுதிய கவிதையில்,

**ஏ சிவகாசி**
**ஜெயலட்சுமியே!**
**உன் கந்தக பூமியிலிருந்து**
**ஒரு தீக்குச்சியை**
**அனுப்பு!**

**இங்கு கொழுத்துப் போய் இருக்கும்**
**சிலரைக் கொளுத்திப் போடவேண்டும். (பொ.பெ.ம.ப.63)**

என்பர். சிவகாசி தீப்பெட்டித் தொழிற்சாலைக்குப் பேர் ஆனது. அவ்வூர் பெண்ணுக்கு நிகழ்ந்த கொடுமை பற்றித் பாடுவதால் அவளிடமே தீக்குச்சி கேட்பது கருத்துப் புதுமையாகும்.

பெண்ணைக் கண்டால் பேயும் இரங்கும் என்பது பழைய பழமொழி. இப்பழமொழி நிதர்சன வாழ்வில் முற்றிலும் மாறாக இருப்பதை ஒரே வேலை செய்யும் ஆணுக்கு ஒரு விதக் கூலியும் அதே வேலை செய்யும் பெண்ணுக்குக் குறைவான கூலியையும் கொடுக்கும் முறையைக் கண்டிப்பதற்கு அங்கதச் சுவையில், ஆங்கில வார்த்தை கொண்டு

**பெண்ணென்றால்**
**payயும் இறங்கும் (பொ.பெ.ம.ப.45)**

எனக் கருத்தில் புதுமை காட்டுகிறார்.

**அகப்பொருள் மரபில் மாற்றம்**

கற்பு வாழ்வில் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியின் துயரைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். தலைவியைப் பிரிந்து வருந்தும் தலைவனை 'என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து' என்னும் நூலில் கவிஞர் காட்சிப்படுத்துகிறார்.

**குறுஞ்செய்தி வரலையே**
**குரல் இன்னும் கேட்கலையே**
**பெருந்துயரம் என் மனதில்**
**பேரலையாய் வந்ததடி**
**நெடுந்தூரம் போனாயே**
**நெஞ்சமெலாம் பதறுதடி**
**நீ**
**வரும் நாளை எதிர்பார்த்து**
**வார்த்தையெல்லாம் திணறுதடி" (எ.ப.நா.ப.79)**

பொதுவாக, 'வினையே ஆடவர்க்கு உயிரே' எனப் புறநானூறு கூறுமாறு போல ஆடவர் பொருள்வயிற் பிரிவு, வினைவயிற் பிரிவு எனத் தலைவியைப் பிரிந்து

செல்வதும் தலைவி பிரிவாற்றாது புலம்பலும் சங்க இலக்கிய மரபு. ஆனால் கவிஞரோ தலைவி தலைவனைப் பிரிந்து வெகுதூரம் சென்றதாகப் புதுமை காட்டுகிறார்.

அவ்வாறு பிரிந்து சென்ற தலைவி தலைவனுக்குத் தொலைபேசி வாயிலாக பேசவோ அலைபேசி வாயிலாக குறுஞ்செய்தி கூட அனுப்பவோ இல்லை எனத் தலைவன் வருந்துவதாக காலத்திற்கேற்ப மரபு மாற்றுச் சிந்தனையாகப் பாடியுள்ளார்.

தலைவியின் மெய்ப்பாடுகளுள் ஒன்றாகக் 'கண்துயில் மறுத்தலை'[13]த் தொல்காப்பியர் குறிப்பிடுவார். ஆனால் கவிஞரோ அம்மெய்ப்பாட்டைத் தலைவனுக்குரியதாக்கி, தலைவி உறங்குவதற்கு முன் தொலைபேசியில் தலைவனை அழைத்துத் தான் எழுதிய கவிதையைச் சொன்னதாகவும், உடனே தலைவன்,

**கவிதையை அசைபோட்டு**
**புரண்டு புரண்டு**
**படுக்கிறேன் நான் (எ.ப.நா.ப.25)**

என்றும், தலைவன் இருக்கும் தைரியத்தில் தலைவி மட்டும் நன்றாக உறங்குவதாகவும் தலைவனோ தலைவியைக் காக்க வேண்டிய கடப்பாடு மனதை வாட்டுவதால்,

**உன்னை நினைத்தே**
**உறங்காதிருக்கின்றேன்**
**நான் (எ.ப.நா.ப.29)**

என்றும் பாடுவதாக அகப்பொருள் மரபில் மாற்றம் காண்கிறார்.

**பெண்ணியச் சிந்தனையில் புதுமை**

**'**அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு'[14] போன்ற நால்வகைக் குணங்களைப் பெண்மைக்குரியனவாகத் தொல்காப்பியம் உரைக்கின்றது. நாணத்தில் தலைப்பட்ட பெண்மை, அதன் வெளிப்பாடாக நகம் கடித்தல், காலால் நிலத்தில் கோலமிடல் போன்ற செயல்களில் ஈடுபடுவது, காலம் காலமாக சுட்டப்பெறும் கருத்து மரபாகும். கவிஞரோ,

**வெட்கப்பட்டுக் கடிப்பதற்கல்ல**
**நகங்கள்.**
**அண்ணல் அறிவுறுத்தியதும்**
**அதற்கல்ல.**
**நகம் காக்க**

**முகம் காக்க**
**முனைந்ததெல்லாம் போதும்**
**புதுயுகம் காக்க**
**புறப்படு (பொ.பெ.ம.ப.39)**

என்று ஆணையிடுகிறார்.

**தலைப்பிடுவதில் புதுமை**

கவிஞனின் கற்பனை காலம்தோறும் காலச் சூழலைக் கருத்தில் கொண்டு தன் கற்பனைச் சிறகை விரிக்கும் இயல்பினது. மாதம் மும்மாரி பெய்ததென நீர்வளம் பற்றிப் பெருமைப்படும் விதமாக, மக்களின் நல்வாழ்வுக்கு ஆதாரமான உணவுக்கு எவ்விதத் தட்டுப்பாடுமின்றி யாவரும் மகிழ்வுடன் வாழ்ந்தமையை இலக்கியங்கள் இயம்பும். ஆனால் காலமாற்றத்தினால் சுற்றுச் சூழலில் ஏற்பட்ட பாதிப்பின் காரணமாக வானம் பொழிய மறுத்து, பருவம் பொய்த்துப் போன நிலையை உணர்த்தும் விதமாகக் கவிஞர், 'பொய்யெனப் பெய்யும் மழை' எனும் தலைப்பு அமைத்துள்ளார்.

எட்டு கவிஞர்கள் எழுதிய கவிதைகளைத் தொகுத்துக் கவிஞர், அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள் என்ற வித்தியாசமான தலைப்பில் தொகுத்து உரைக்கிறார். பொதுவாக, வானவில் ஏழுநிறம் கொண்டது. இங்கு எட்டுக்கவிஞர்களின் கருத்துகளைத் தொகுத்துரைப்பதால் குறியீட்டுப் புதுமையாக இத்தலைப்பைச் சூட்டியுள்ளார்.

**உலகியல் நிலையில் புதுமை**

பொதுவாக, சிறு வயதில் படிப்பில் ஆர்வம், அக்கறையின்றித் திகழும் குழந்தைகளைக் கண்டிக்கும் பெற்றோர் எப்படியாவது அவர்களைப் படிக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் அவர்களைச் சாம, பேத, தான, தண்ட வழிமுறைகளைப் பயன்படுத்தி, நெறிப்படுத்த முயல்வர். ஆனால் தமது முயற்சியில் தோற்றுப் போகும் சூழலில் பெற்றோர் குழந்தைகளிடம் மிகக் கடுமையாக, "படிப்பு வரவில்லை என்றால் மாடு வாங்கித் தருகிறேன். மாடு மேய்க்கப் போ" எனக் கூறுவது வழக்கம். ஆனால் கவிஞரோ படிப்பது கூட எளிமையானது. மாடு மேய்த்தல் மிகக் கடுமையானது எனும் பொருளில்

**மாடு மேய்த்தல்**
**சிரமம்**

படித்து விடலாம் (ம.கை)

என்று பாடி உலக வழக்கில் இருந்து மாறுபட்டுக் கவிதை யாத்துள்ளார்.

**இதிகாசக் கருத்துகளை எடுத்தாள்வதில் புதுமை**

கம்பராமாயணக் கதைமாந்தர்களான இராமன், சீதை, அனுமன், இலக்குவன், இராவணன், மண்டோதரி, சூர்ப்பனகை போன்றவர்களை, இன்றைய நடைமுறையில் உள்ள மனித இயல்புகளைச் சேர்த்து, வேறுபட்ட கோணத்தில் பல கவிதைகளைப் படைத்துள்ளார் கவிஞர்.

சூர்ப்பனகை தன் கனவில் வந்ததாகக் கற்பனை செய்யும் கவிஞர், அரசியல் நாகரிகம் அறியாத, சபை நாகரிகம் உணராத அரசியல் பிரமுகர்களின் பேச்சைக் கேட்க முடியாத நிலையிருப்பதால், இலக்குவனிடம் கூறி அரசியல்வாதிகளின் நாக்கை அறுக்கச் சொல்வதாக உரைக்கிறார். மேலும் கெட்ட எண்ணம் உடைய சூர்ப்பனகை திருந்திய உள்ளம் கொண்ட நங்கையாக, நீதியை விரும்புபவளாகப் படைக்கப்பட்டுள்ளமை புதுமைச் சிந்தனையாகும். அன்று தன் கற்பையே அணிகலனாகப் பூண்டவள் சீதை. இன்று அச்சீதை காணாமல் போய், நவ நாகரிக மோகத்தில் சிக்குண்டு, அழகு நிலையங்களை நாடி அங்கே அரட்டை அடிக்கும் சீதைகளைத் தான் பார்க்கமுடிகிறது என்கிறார்.

தன் நெஞ்சகத்தில் இராமனைச் சுமந்த அனுமன், தன் நெஞ்சை விட்டு நீங்கிய இராமனை நினைத்து மாரடைப்பில் அவசரப் பிரிவில் அனுமதிக்கப்பட்டிருந்தார் என்று கற்பனை செய்கிறார். அனுமனின் நெஞ்சுக்குள் குடியிருக்கும் அருகதையை இராமன் என்னும் பெயர் சூடியவன் இழந்ததை,

**நான்காவது திருமணத்தின் போது**
**பிடிபட்டு**
**மோசடி வழக்கில் கைதாகி**
**சிறைக்குச் சென்று கொண்டிருந்தான் (க.ந.கா.ப.143)**

என்கிறார். இங்கு இராமன் என்று பெயர் தாங்கியவர்கள் நெறி பிறழ்ந்து வாழும் நிலையை உரைக்கிறார்.

சீதையின் அழகில் பொறாமை கொண்டவளாய், இராமனை அடைய எண்ணி, இலக்குவனால் மூக்கறுபட்ட சூர்ப்பனகையை நல்மனம் கொண்டவளாய்ப் படைத்துப் புதுமை காட்டும் கவிஞர்,

**அதிர்ச்சி மேல்**
**அதிர்ச்சியான**
**சூர்ப்பனகை**
**புண்பட்ட மனதோடு**
**போய் வருகிறேன் என்று கூறிப் புறப்பட்டதாகவும்,**
**போகும் முன் என்னிடம்**
**அங்கங்கே என்**
**அண்ணனின் சாயலில்**
**பலரைப் பார்த்தது தான்**
**ஒரே ஆறுதல் என்றாள். (க.ந.கா.ப.143)**

என்றும் பாடுவதன் மூலம் கவிஞர் சூர்ப்பனகை பாத்திரப்புனைவில் அவள் ஒட்டு மொத்தமாகத் தன் தவறுணர்ந்து, நன்மை தீமை புரிந்த உள்ளத்தினளாய், அண்ணனின் தவறான பிறன்மனை நோக்கும் புன்மையைச் சாடும் மனநிலையினளாய், அண்ணனின் சாயலில் பலரைப் பார்த்ததாகப் புதுமை காட்டியுள்ளார் கவிஞர்.

**உவமை கூறுவதில் புதுமை**

கவிஞர் காதல் பற்றி உரைக்கும் கவிதைகளில் உவமைகளைப் புதுமையாகக் கையாண்டுள்ளார்.

**காதல் -**
**ஒரு அதிநவீன அலைபேசி.**
**பேட்டரியுமில்லாமல்**
**சிம் கார்டுமில்லாமல்**
**வாழ்நாள் முழுவதும்**
**பேசிக்கொண்டே இருக்கலாம் (க.ந.கா.ப.13)**

என்றும்,

**காதல் ஒரு கணிப்பொறி,**
**வன்பொருள் தவிர்த்து**
**மென்பொருள் நிறைந்த**
**மின்னல் உலகைக்**
**கொண்டு வரும்**
**ஜன்னல் பலகை (க.ந.கா.ப.13-14)**

என்றும் காலத்திற்கு ஏற்றவாறு உவமைகளில் புதுமைகளைக் கையாண்டுள்ளார்.

**தொகுப்புரை**

- செல்வாக்குள்ள பழைய இலக்கியங்கள் பின்னர் வந்த படைப்பாளிகளுக்கு அதைவிட உயர்ந்த அல்லது அதே தரத்திலான படைப்பை உருவாக்கும் ஆர்வத்தைக் கிளர்ந்து எழச் செய்கின்றன.
- மரபு என்பது முந்தைய தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், முடிபு, அறிவு ஆகிய அனைத்தும் சேர்ந்தது. புதிய வாழ்க்கை அதன் தேவைக்கு இசையாத, அறிவுக்கு இசையாத, முந்தைய அறிவு அனுபவங்களைப் புறக்கணித்து விடுகிறது. அப்போது பழைய மரபு மறைந்து புது மரபு ஒன்று தழைக்கிறது.
- வாழ்க்கையை இன்னதென்று அடையாளம் காட்டும் முயற்சியில் தமிழ்க் கவிஞர்களின் சிந்தனையும் காலந்தோறும் மாறி வந்திருக்கிறது.
- இச்சிந்தனை மாற்றத்திற்குக் கால வளர்ச்சி, பாடுபொருள் ஒற்றுமை, சமுதாய மாற்றம், புதுமை வேட்கை ஆகியன காரணங்களாக அமைகின்றன.
- கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் இலக்கியக் கருத்து மரபில் புதுமையாக இலக்கியத் தொடரை அப்படியே எடுத்தாண்டு, கருத்தில் மட்டும் புதுமையைப் புகுத்தியுள்ளார்.
- பண்டைய அகப்பொருள் மரபில் மாற்றம் காண்பவராகக் கவிஞர், தலைவியைப் பிரிந்த தலைவன் கண்துயில் மறுத்தல் நிலையில் இருப்பதாகவும் தலைவி அயல்நாட்டிற்குப் பிரிந்து சென்றதால் தலைவன் வருந்தி அவள் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பதாகவும் கால மாற்றத்திற்குத் தக கவிதை புனைந்துள்ளார்.
- பெண்மை என்பது வெட்கப்படுதலுக்கே உரியது என்ற மரபை மாற்றி, புதுயுகம் காக்கப் புறப்படு எனப் பெண்ணியச் சிந்தனையில் புதுமை படைத்துள்ளார்.
- கவிதை நூலுக்குத் தலைப்பிடுவதில் புதுமையாகப் ‘பொய்யெனப் பெய்யும் மழை’, ‘அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள்’ என்ற நூல்களின் பெயர்களை அமைந்துள்ளார்.
- இராமாயணக் கதை மாந்தர்களைப் புதுமையாகப் படைத்து, அவர்களின் குண நலன்களில் மாற்றங்களைக் கற்பித்துப் புதுமை காட்டியுள்ளார்.
- காதலை அதிநவீன அலைபேசியாகவும் கணிப்பொறியாகவும் கவிஞர் உவமித்துள்ளமை அவர்தம் புதுமைப் போக்கிற்குச் சிறந்த சான்றுகளாகும்.

**சான்றெண் விளக்கம்**

1. மு.வரதராசனார், இலக்கிய மரபு, ப.173.
2. டாக்டர் அ. சிதம்பரநாதன், முன்பனிக்காலம், ப.53.
3. தொல்காப்பியம், நூ. 635.
4. மேலது நூ.636.
5. மேலது நூ.637.
6. பாலா, புதுக்கவிதை ஒரு பார்வை, ப.15.
7. திருக்குறள் - 919.
8. மு.வரதராசனார், இலக்கிய மரபு பக்.196-197.
9. பேரா.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக் கலை பக்.60-61.
10. பேரா.சே செந்தமிழ்ப்பாவை, சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள், ப.59.
11. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம்.138.
12. முடியரசனார், கவியரங்கில் முடியரசன், ப.91.
13. தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல். 22
14. மேலது, களவியல், நூ. 8.

**முடிவுரை**

மரபுக் கவிதைகளின் இலக்கணங்களை மீறிக் கவிஞன் தன் உள்ளத்து உணர்வுகளுக்குக் கருத்துச் செறிவூட்டிப் புதுமைப் போக்கில் படைக்கும் இலக்கியம் புதுக்கவிதை ஆகும். இருபதாம் நூற்றாண்டுப் புதுக்கவிதைப் படைப்பாளர்களில் ஒரு சிறந்த படைப்பாளராகத் தன்னை நிலை நிறுத்திய பெருமைக்குரியவர் கவிஞர் தங்கம் மூர்த்தி. தங்கம் மூர்த்தியின் கவிதைகள் குறித்துக் கவிஞர் முத்து நிலவன் கூறும் "ஆழத்தில் அப்துல் ரகுமான், அங்கதத்தில் மீரா, சன ரஞ்சகத்தில் மேத்தா, குரலில் பாலா" என்னுக் கூற்று தங்கம் மூர்த்தியைச் சிறந்த புதுக்கவிதைப் படைப்பாளராக இனம் காட்டும்.

மேலும் ஆங்கிலம், இந்தி, பிரெஞ்சு, மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இவரது கவிதைகள் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளமை இவர்தம் கவிதைகள் பெற்ற இடத்தைப் புலப்படுத்தும்.

புதுக்கவிதை அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா, சித்திரப்பா, குறும்பா, பொதுப்பா என்னும் ஆறு வகைகளில் அமையும் என்பர் இலக்கணிகள். கவிதையின் தொடக்கம், முடிவு ஆகிய அமைப்புகளும் உணர்வு-பொருள்போக்கைத் தடுக்காத ஒலி நயங்களும் புதுக்கவிதையின் கூறுகளாக உள்ளன.

இத்தகு சிறப்பு வாய்ந்த கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகள் குறும்பா (ஹைக்கூ), தொடர்நிலைப்பா, பொதுப்பா என்னும் வடிவங்களில் காணக்கிடக்கின்றன. இதுமட்டுமன்றி அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா போன்ற வடிவங்களில் மிகுதியான கவிதைகள் அமையப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. அவர்தம் முதல் கவிதைத் தொகுப்பு குறும்பா என்னும் ஹ`f;$ tbtpNyNa ntspte;jJ. ,jd;gpd; ,uz;lb Kjy; 259 mb tiuapYk; ftpijfs; gilj;J புதுக்கவிதைக் கவிஞர்களிடமிருந்து சற்று மாறுபடுகிறார். i`f;$ tbtf; ftpijahapDk; njhlh;epiyg;ghthapDk; $wte;j fUj;jpd; mbg;gilapy; RUq;ff; $wp tpsq;f itj;jy; vd;Dk; cj;jpNahL fUjpaJ Kbj;jy; vd;Dk; cj;jp nfhz;L> ftpij gilj;jy; ,th;jk; ftpijf; nfhs;ifahf cs;sJ.

சமூக அவலங்களை எடுத்துரைக்கும் கவிதைகளைக் கருத்துக்கோவைப் பாவடிவிலும், சமூகத்திற்குக் கூறவேண்டிய கருத்துகளைப் பொதுப்பாவடிவிலும் எடுத்துரைத்துள்ளார்.

காதலை மூன்று அடிகளில் சுருங்கக் கூறியவர் 'மலரினும் மெல்லியது' எனும் தலைப்பில் காதலைப்பற்றி 213 அடிகளில் மிக விரிவாக, பல்வேறு கோணங்களில், காதலைக் கரும்பாகவும் கணிப்பொறியாகவும் அதி நவீன அலைபேசியாகவும் காண்கின்றார். மேலும் காதல் நோயாகவும், அந்நோய்க்குத் தானே மருந்தாகவும் விளங்குவதையும் எடுத்துரைக்கின்றார். காதல் செல்வத்துள் எல்லாம் தலையாய செல்வமாகவும் பாவநதிகளைப் புனிதப்படுத்தும் சீவநதியாகவும் கவிஞரால் உருவகிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சமூகத்தில் நிலவும் அவலங்களை விளக்குவதற்கு 206 அடிகளால் ஆன தொடர்நிலைப் பாவைக் கையாண்டுள்ளமை கவிஞரின் வடிவக் கையாளுகையைப் புலப்படுத்தும். மேலும் இயற்கையை மனிதர்கள் சீரழித்து வரும் நிலை கண்டு வருந்தி ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய காற்றைப் பற்றி 233 அடிகளில் தொடர்நிலைப்பா எழுதியுள்ளார். கூறவந்த கருத்திற்கேற்ப வடிவத்தையும் அடிகளையும் கையாளுதல் என்பது தங்கம் மூர்த்தியின் கவிதை வடிவக் கொள்கையாக உள்ளது.

கவிஞர் தங்கம் மூர்த்தி அவர்களின் கவிதைகளில் காணலாகும் பாடுபொருள் இயற்கை, காதல், குடும்பம், சமூகம், தன்உணர்வு என்னும் பொருண்மைகளில் அமைந்துள்ளன.

உலகின் மூலாதாரங்களாகிய ஐம்பெரும்பூதங்கள், அவற்றின் இயக்கம், கடல் மற்றும் நிலத்தில் வாழும் உயிரினங்களின் செயல்கள், அவற்றின் மூலம் மனித குலத்திற்கு அறிவுறுத்தப்படும் செய்திகள் போன்றவை இயற்கை எனும் பாடுபொருளில் விளக்கப்பட்டுள்ளன. மனிதனின் நற்பண்புகளையும் தவிர்க்க வேண்டிய குணங்களையும் இயற்கையோடு ஒப்புமைப்படுத்தி கவிஞர் எடுத்துரைத்துள்ளமை சுட்டுதற்குரியது.

மனிதர்தம் வாழ்வில் இரண்டறக்கலந்த காதல் உணர்வு குறித்தும் பல கவிதைகள் படைத்துள்ளார். இதில் காதலனது மனவுணர்வு காதலியின் நலம்புனைந்துரைத்தல், காதலியின் கடிதத்தைப் பாதுகாப்பதற்காகத் தனக்குப்பிடித்த மழையில் நனையாதிருத்தல், காதலியின் பிரிவால் வருந்துதல், காதல் போயின் சாதல் எனக் காதலின் பல்வேறு பரிணாமங்களையும் கவிதையாக்கியுள்ளார்.

கவிஞரின் குடும்பம் குறித்த பார்வையில் தாய்மையின் பங்களிப்பு, ஒரு தந்தையின் மன உணர்வு, குழந்தைச் செல்வத்தால் பெறும் குதூகலம், காதல் தரும் களிப்பு, இல்வாழ்க்கையில் கிடைக்கும் இன்பம் மற்றும் இடர்கள் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

சமூகப் பார்வையில் திருமணச் சந்தையில் பலிகடாவாக்கப்படும் மங்கையரின் நிலைக்கு இரங்கி, ஆடவரைக் கண்டிக்கும் விதமாக, சமூகத்தில் தான் காண விரும்பும் மாற்றத்தைக் காட்டுகிறார். மணக்கொடை தவிர்த்து மங்கையரை மணம்புரிய ஆடவர் எவரும் ஆயத்தப்படவே இல்லை என்பது கண்டு மனம் கலங்கும் கவிஞர் பெண்களைப் புதுயுகம் படைக்க, புறப்பட அழைக்கிறார். திரைகளில் வரும் வசனங்களுக்குக் கரவொலி எழுப்பும் சமூகம், நிசவாழ்வில் இன்னும் விழிப்புணர்வு பெறாத நிலையைக் கவிதையில் காட்டிச் சமூகத்தின் குற்றத்தைப் புரிய வைக்க முயல்கிறார்.

சமூகத்தில் நிலவும் சுகாதாரக் கேடான சூழல்கள், சாலைகள், மருத்துவமனைகள், பேருந்துகள் எனப் பொதுச் சொத்துக்கள் யாவும் பராமரிப்பின்றி மக்களின் பயன்பாட்டிற்கு ஏற்ற வகையில் இல்லாத சூழல், அரசியல் அவலங்கள், மகளிர் தம் திருமணத்தில் அவர்களை அச்சுறுத்தும் மணக்கொடை, சாதி, மத பேதங்களால் உண்டாகும் பிரச்சினைகள் போன்றவை சமூகம் எனும் தலைப்பில் விளக்கப் பெற்றுள்ளன.

அரசியல் சீர்திருத்தம், சமயச் சார்பற்ற நிலை என்னும் இரண்டும் கை வரப் பெற்றாலே சமுதாயச் சமநீதி கிடைத்து விடும் என்பது கவிஞரின் கொள்கையாக உள்ளது. சமய வேறுபாடற்ற சமுதாயம் காண விரும்பும் கவிஞர் தேவாலயத்துக் கற்கண்டோ, பெருமாள் கோவில் பொங்கலோ, முகமது நபி கொடுத்த சர்க்கரையோ எல்லாமே இனிப்புத்தான் இதில் வேறுபாடில்லை என்கிறார். அரசாங்க அலுவலகங்களில் நடைமுறையிலுள்ள கையூட்டு முறைகளைக் கண்டிப்பதிலும், சாதிக்கரு வளர்க்கும் சாத்தானைத் தண்டிக்க முனைவதிலும் கவிஞர் தனித்துவம் காட்டியுள்ளார்.

மரங்கள், பறவைகள் போன்ற ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை உள்ள உயிரினங்கள் கூடத் தன் பயன்பாட்டால் பிறர்க்கு உதவும் தன்மை, சக உயிர்களை மதிக்கும் போக்கு போன்றவை கவிஞரால் மிகச்சிறப்பாக எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. அ.்.றிணைகளைக்கண்டு உயர் திணையாகிய மனிதர்கள் பாடம் கற்க வேண்டும் என்கிறார் கவிஞர்.

தம் அரிய படைப்புகளால், தன் சீரிய சிந்தனைகளால் உலகிற்குப் பங்களிப்புச் செய்த வள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், பாரதி, காந்தியடிகள் போன்றவர்களைப் பற்றி எழுதியுள்ள கவிதைகள் இன்றைய சமூகத்திற்குப் பெரிதும் பயன்படுவனவாய் உள்ளன. கவிஞரின் தமிழ் மொழிப்பற்றும், தாயகப் பற்றும் அவர் தம் கவிதைகளில்

அழகுற வெளிப்பட்டுள்ளன. புத்தர் மற்றும் காந்தியடிகளின் போதனைகளை உலகம் எடுத்துக் கொள்ளத் தவறிய நிலையைப் போதி மரத்தடியில் ஞானம் பெற்ற புத்தரே அம்மரத்தை வெட்டி விட்டதாகப் பாடுவது புலப்படுத்தும்.

இதிகாசமாந்தர்கள் குறித்த கற்பனையில் சூர்ப்பனகை குறித்த கவிதை அவளைத் திருந்தியவளாகக் காட்டுவதுடன், தன் அண்ணனின் சாயலில் அநேக ஆண்கள் காணக் கிடைப்பதாகக் கூறுவதன் மூலம் சமுதாயம் பாழ்பட்டுள்ள நிலையை எடுத்துரைக்கின்றார். மேலும் பிறன்மனை நோக்காப் பேராண்மை எனும் ஒழுக்க நெறியையும் இதன்வழி வலியுறுத்துகின்றார்.

ஆயுதங்களும், மலர்களும், நதிகளும் தமக்குள் மாநாடுகள் நிகழ்த்தி, மனிதர்கள் கொள்ள வேண்டிய கொள்கை உறுதிகள் பற்றி நமக்கு உரைப்பதாகக் கவிஞர் படைத்துள்ளமை மாந்தர் குலம் மனம் கொள்ள வேண்டிய செய்தியாகும்.

காலந்தோறும் காலம் மட்டும் என்றும் இளமையாய், தன்னைப் புதுப்பித்துக் கொண்டு, சூழலுடன் கைகோர்த்துச் செல்வதைச் சுட்டிக்காட்டும் கவிஞர் இதன்வழி உலகத்தோடு ஒட்ட ஒழுகலின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார்.

இலக்கியங்கள் அவை கூறும் கருத்தால் மட்டும் கவின் பெற்றுத் திகழவில்லை. உணர்த்தும் திறத்தாலும் அவை ஒளி பெற்றும் உயிர் பெற்றும் திகழ்கின்றன. இலக்கிய உணர்வு கூறும் பொருளில் இல்லை; உணர்த்தும் திறத்தில் உண்டு என்பதற்கேற்ப கவிஞனின் மொழித் திறமையும் ஆளுமையும் உத்தியைச் சிறப்பாகக் கையாள உதவுகின்றன.

தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் பல ஹைக்கூ என்னும் குறும்பா வகையின. இச்சிறிய வடிவிலும் எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, அடுக்குத்தொடர், உவமை, உருவகம் என்பன போன்ற பல்வேறு உத்திகளைக் கையாண்டு தம் படைப்புகளைச் சிறக்கச் செய்துள்ளார். இதுமட்டுமன்றி தொடர்நிலைச் செய்யுள் அமைப்பில் புனையப்பட்ட தொடர்நிலைப்பாக்களிலும் இவ்உத்திகளைக் கையாண்டுள்ளார்.

‘சூர்ப்பனகையுடன் ஒரு சுற்றுப்பயணம்’, ‘நடிகர் திலகத்திற்கு மரியாதை’ என்னும் கவிதைகள் கதைப் பாங்குடன் அமைந்துள்ளன.

அடுக்கு வினா அமைப்பில் ‘வீசிய துண்டுகள்’ எனும் தலைப்பில் அடுக்கடுக்காய் வினாக்கணை தொடுத்து வறுமையுற்ற வாக்காளனின் அவலநிலையை விளக்குகிறார்.

கருத்து வெளிப்பாட்டிலும் கவிதை அமைப்பிலும் உரையாடல் உத்தி சிறந்த இடத்தைப் பெறுகின்றது. பேச்சு மொழியின் ஆளுமையை இவ்வகைக் கவிதைகள் தன்னகத்தே கொண்டுள்ளன. காதல் வயப்பட்ட தலைவன், காதலியிடம் தன் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்துவதற்கு இவ்வுரையாடல் உத்தியைக் கையாண்டுள்ளார்.

இன்றைய கல்வி நிலையங்களின் போக்கைக் கண்டிக்கும் விதமாக 'மூச்சுத்திணறும் சரஸ்வதி தேவி' எனும் தலைப்பிலான கவிதையில், கேள்விகளுக்கு விடை இல்லாமல் சரஸ்வதி தேவியே கலங்குவதாகக் கூறுவது வினா-விடை வடிவ உத்திக்குச் சிறந்த சான்றாகும்.

கவிதையின் கருத்தை விளக்க உவமையின் பல்வேறு வகைகளான வினை, பயன், மெய், உரு ஆகியவற்றோடு அடுக்குவமைகளையும் உத்தியாகக் கையாண்டுள்ளார். உருவகங்கள் தொகை உருவகம், விரி உருவகம், இயைபு உருவகம் என்னும் நிலையில் உத்திகளாக் கைக்கொள்ளப்பெற்றுள்ளன.

இருண்மை, 'கூடார்த்தம்' எனும் உத்திகளும் இவர்தம் கவிதைகளில் காணப்பெறுகின்றன.

தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் அவர்தம் பன்னூல் புலமையும், பழமொழியும் உத்திகளாக வெளிப்பட்டுள்ளன. கவிதை அழகியலுக்காகவும், சமூக அவலத்தைச் சாடுவதற்காகவும் ஆங்கில வார்த்தைகளைக் கலந்து எழுதும் முறையை உத்தியாகக் கையாண்டுள்ளார்.

செல்வாக்குள்ள பழைய இலக்கியங்கள் பின்னர் வந்த படைப்பாளிகளுக்கு அதைவிட உயர்ந்த அல்லது அதே தரத்திலான படைப்பை உருவாக்கும் ஆர்வத்தைக் கிளர்ந்து எழச் செய்கின்றன. மரபு என்பது முந்தைய தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், முடிபு, அறிவு ஆகிய அனைத்தும் சேர்ந்தது. புதிய வாழ்க்கை அதன் தேவைக்கு இசையாத, அறிவுக்கு இசையாத, முந்தைய அறிவு அனுபவங்களைப் புறக்கணித்து விடுகிறது. அப்போது பழைய மரபு மறைந்து புது மரபு ஒன்று தழைக்கிறது.

வாழ்க்கையை இன்னதென்று அடையாளம் காட்டும் முயற்சியில் தமிழ்க் கவிஞர்களின் சிந்தனையும் காலந்தோறும் மாறி வந்திருக்கிறது. இச்சிந்தனை மாற்றத்திற்குக் கால வளர்ச்சி, பாடுபொருள் ஒற்றுமை, சமுதாய மாற்றம், புதுமை வேட்கை ஆகியன காரணங்களாக அமைகின்றன.

கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் இலக்கியக் கருத்து மரபில் புதுமையாக இலக்கியத் தொடரை அப்படியே எடுத்தாண்டு, கருத்தில் மட்டும் புதுமையைப் புகுத்தியுள்ளார்.

பண்டைய அகப்பொருள் மரபில் மாற்றம் காண்பவராகக் கவிஞர், தலைவியைப் பிரிந்த தலைவன் கண்துயில் மறுத்தல் நிலையில் இருப்பதாகவும் தலைவி அயல்நாட்டிற்குப் பிரிந்து சென்றதால் தலைவன் வருந்தி அவள் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பதாகவும் கால மாற்றத்திற்குத் தக கவிதை புனைந்துள்ளார்.

பெண்மை என்பது அச்சம், மடம், நாணம் என்னும் குணங்களையே கைக்கொள்ளக் கூடியது என்ற மரபை மாற்றி, புதுயுகம் காக்கப் புறப்படு எனப் பெண்ணியச் சிந்தனையில் புதுமை படைத்துள்ளார்.

கவிதை நூலுக்குத் தலைப்பிடுவதில் புதுமையாகப் ‘பொய்யெனப் பெய்யும் மழை’, ‘அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள்’ என்ற நூல்களின் பெயர்களை அமைந்துள்ளார்.

இராமாயணக் கதை மாந்தர்களைப் புதுமையாகப் படைத்து, அவர்களின் குண நலன்களில் மாற்றங்களைக் கற்பித்துப் புதுமை காட்டியுள்ளார். காதலை அதிநவீன அலைபேசியாகவும் கணிப்பொறியாகவும் கவிஞர் உவமித்துள்ளமை அவர்தம் புதுமைப் போக்கிற்குச் சிறந்த சான்றுகளாகும்.

இக்காலச் சமூகச்சிக்கல்களை அதிகம் மையமிட்டுச் சமூக, அரசியல், பொருளாதாரப் பண்பாட்டுக் களங்களில் புதிய வாழ்வின் அர்த்தத்தேடலை நோக்கி படிப்பவரை அழைத்துச் செல்வது கவிஞர் தங்கம்மூர்த்தியின் கவிதைக் கொள்கையாக அமைந்துள்ளது.

மனிதர்களின் மன உணர்வுகளை மட்டுமன்றி, பிறஉயிரினங்களின் உணர்வுகளைக் காட்சிப்படுத்துவதிலும் கவிஞர் தனி முத்திரை பதித்துள்ளார். எந்தப் பாடுபொருளாக இருந்தாலும் அதை வழக்கமான முறையில் இருந்து மாறுபட்டுப் புதிய கோணத்தில் படுவது கவிஞர் தம் கவிதைக் கொள்கையாக உள்ளது.

இயற்கையை அதன் ஒவ்வொரு பொருளிலும் கண்டு அழகியல் கண்ணோட்டத்தில் வருணிப்பது கவிஞர்களின் மரபு. ஆனால் கவிஞர் தங்கம்மூர்த்தி இயற்கையின் கூறுகளான மரங்கள், மலர்கள், நதிகள் என அனைத்தையும் சமூக அவலத்தைச் சுட்டுவதற்கே பெரிதும் பயன்படுத்தியுள்ளார். இயற்கையில் இறையைக்

காண்பது பண்டைய மரபு. இயற்கையில் சமூகத்தைக் காண்பது கவிஞர் தங்கம் மூர்த்தியின் தனித்தன்மையாக உள்ளது.

**மேலாய்வுக் களங்கள்**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகள் பெரும்பான்மையும் சமூகச் சீர்திருத்தம் சார்ந்து காணப்படுவதால் கவிஞரின் சமூகப் பார்வை குறித்து மேலாய்வு செய்ய இயலும்.

கவிஞரின் படைப்புகளை சமகாலப் பிறகவிஞர்களின் படைப்புகளோடு ஒப்பிட்டு ஒப்பாய்வு மேற்கொள்ளலாம்.

## துணைநூற் பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. **தங்கம் மூர்த்தி. கவிஞர்** **என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து..**
அகரம், மனை எண்:1, நிர்மலா நகர்.
தஞ்சாவூர் - 613 007,
2010.

2. **மேலது** **கவிதையில் நனைந்த காற்று,**
அகரம், மனைஎண்:1, நிர்மலா நகர்.
தஞ்சாவூர் - 613 007,
2012.

3. **மேலது** **பொய்யெனப் பெய்யும் மழை,**
வள்ளல் அழகப்பர் பதிப்பகம்,
மலர்மதி இல்லம்,
காரைக்குடி - 1,
இரண்டாம் பதிப்பு : 2012.

4. **மேலது** **முதலில் பூத்த ரோஜா,**
வள்ளல் அழகப்பர் பதிப்பகம்,
மலர்மதி இல்லம்,
காரைக்குடி - 1,
மூன்றாம் பதிப்பு - 2012.

5. **மேலது** **அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள்,**
அகரம், மனைஎண்:1,நிர்மலா நகர்.
தஞ்சாவூர் - 613 007,
2016.

6. **மேலது** **தங்கம் மூர்த்தி கவிதைகள்,**
வள்ளல் அழகப்பர் பதிப்பகம்,
மலர்மதி இல்லம்,
காரைக்குடி - 1,
மூன்றாம் பதிப்பு : 2017.

7. **மேலது** **தேவதைகளால் தேடப்படுபவன்,**
எண்: 6, முனுசாமி சாலை,
கே.கே.நகர் மேற்கு,
சென்னை - 600 078,
இரண்டாம் பதிப்பு : 2021.

8. **மேலது** **மழையின் கையெழுத்து,**
822, பெரியார் நகர்,
புதுக்கோட்டை - 622 003.

**துணைமைச்சான்றாதாரங்கள்**

1. **அப்துல் ரகுமான்** **காற்று என் மனைவி,**
நேஷனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை,
2003.

2. **மேலது** **சோதிமிகு நவகவிதை,**
நேஷனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை,
2004.

3. **அரங்கராசு, சு.** **தமிழ்ப் புதுக்கவிதை - ஒரு திறனாய்வு,**
மூன்றாம் உலகப் பதிப்பகம்,
கோவை.
2002.

4. **இராசேந்திரன், இரா.** **புதுக்கவிதை இலக்கணம்,**
இதயரோஜா பதிப்பகம்,
கோடம்பாக்கம்,
சென்னை - 24,
2004.

5. **இளவரசு, சோ. (ப.ஆ)** **நன்னூல் விருத்தியுரை**
அழகப்பா பல்கலைக்கழகம்
அழகப்பா நகர்

1981

6. **கருப்பத்தேவன்.உ.** **இலக்கியத் திறனாய்வியலும் இலக்கியக் இயக்கக் கொள்கைகளும்.**
கற்பகவள்ளி பதிப்பகம், 3-1/6 tp];tehjGuk;>
kJiu - 625- 014

7. **கோவிந்தராசு, மா.** **புதுக்கவிதைக் கட்டமைப்பு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்.,
அம்பத்தூர்,
சென்னை - 98,
2011.

8. **கௌமாரீஸ்வரி, எஸ். (தொகு)** **பதிணென்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும்,**
சாரதா பதிப்பகம்,
ஜி - 4 சாந்தி அடுக்ககம்,
சென்னை - 14,
2009.

9. **சிதம்பரநாதன், அ.** **முன்பனிக்காலம்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை - 14,
1951.

10. **சுபாசு** **எது புதுக்கவிதை,**
சுபாலிகா பதிப்பகம்,
குமரன் நகர்,
திருச்சி,
2003.

11. **சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ)** **சங்க இலக்கியம் மூலம் முழுவதும்**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 600 108.
2006.

12. **சுப்பிரமணிய தேசிகர் (உ. ஆ)** — **தண்டியலங்காரம்,**
திருநெல்வேலி தென்னிந்திய, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி,
1938.

13. **சுப்பிரமணியன், ச.வே (உ.ஆ)** — **தொல்காப்பியம் தெளிவுரை,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 108,
1998.

14. **சுப்பையா.அரங்க** — **இலக்கியத் திறனாய்வு : இசங்கள் - கொள்கைகள்,**
பாவை பதிப்பகம்,
142, ஜானி ஜான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014,
2016.

15. **செந்தமிழ்ப்பாவை, சே.** — **சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள்,**
தி பார்க்கர் பதிப்பகம்,
சென்னை - 14.
2007

16. **செயராமன், ந.வீ.** — **புதுக்கவிதையியல்,**
இலக்கியப் பதிப்பகம்,
சென்னை.
2003

17. **ஞானசம்பந்தன், அ.ச.** — **இலக்கியக் கலை,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 18.
1999

18. **ஞானமூர்த்தி. தா.ஏ** — **இலக்கியத் திறனாய்வியல்,**
ஐந்திணை பதிப்பகம்,
சென்னை - 5,
2011.

19. **தமிழண்ணல் (உ.ஆ)** **அகநானூறு,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்,
2004.

20. **நீதிவாணன், ஜெ.** **நடையியல்,**
தெ.பொ.மீ.நினைவு அறக்கட்டளை வெளியீடு,
மதுரை,
2001.

21. **பாக்யமேரி** **வகைமைநோக்கில்-தமிழ் இலக்கிய வரலாறு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்.,
அம்பத்தூர்,
சென்னை- 98,
2008.

22. **பாரதிதாசன்** **பாரதிதாசன் கவிதைகள்,**
அருணா பதிப்பகம்,
சென்னை - 49,
2013.

23. **பாலா** **புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை,**
அகரம் பதிப்பகம்,
கும்பகோணம்,
1981.

24. **ந. பிச்சமுத்து** **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,**
சக்தி வெளியீடு,
சென்னை.
2002

25. **பொன்னியின் செல்வன், சு.** **வைரமுத்து படைப்புகளில் வளமும் வடிவமும்,**
அய்யா நிலையம்,
தஞ்சாவூர்.
2004.

26. **மணிமேகலை இரா** **சங்கத்தமிழ்க்காதல்,**
சிந்து, காரைக்கால் - 609 605,
2006.

27. **மாணிக்கம், அ. (உ.ஆ)** **திருக்குறள் தெளிவுரை,**
தென்றல் நிலையம்,
12பி, மேல சன்னதி,
சிதம்பரம்.
1999.

28. **மாணிக்கம், வ.சுப.** **தமிழ்க்காதல்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் - 608 001,
2002.

29. **மாணிக்கவாசகர், இரா. (உ.ஆ)** **சிலப்பதிகாரம்,**
உமா பதிப்பகம்,
சென்னை.
1995.

30. **மீரா** **எதிர்காலத் தமிழ்க்கவிதை,**
அன்னம் வெளியீடு,
தஞ்சாவூர்.
(2003)

31. **முடியரசனார்** **வள்ளுவர் கோட்டம்,**
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை - 17,
2008.

32. **முத்துச்சண்முகன்** **jkpo; ,yf;fpaf; Nfhl;ghLfs;>**
41-B > rpl;Nfh ,z;l];bhpay; v];Nll;>
mk;gj;J}h;>
nrd;id - 600 098.

**33. மெய்யப்பன், ச. (பதி) தென்றல் நிலையம்,**
12பி, மேல சன்னதி,
சிதம்பரம் - 608 001,
பன்னிரண்டாம் பதிப்பு
2014

**34. மு. வரதராசனார் இலக்கிய மரபு**
பாரி நிலையம்,
சென்னை.
1960.

**35. வல்லிக்கண்ணன் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்,**
அகரம் வெளியீடு,
தஞ்சாவூர்.
(2004)

**36. வைரமுத்து இதனால் சகலமானவர்களுக்கும்,**
சூர்யா வெளியீடு,
சென்னை.
2003.

**அகராதிகள் - நிகண்டுகள்**

**1. இராசேந்திரன், து. (ப.ஆ) - செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்**

பேரகர முதலி முதல் பாகம்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித்
திட்ட இயக்ககம்,
சென்னை - 40.
2007.

**2. சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ) - தமிழ் நிகண்டுகள் தொகுதி - 1**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
2013.

**3. இராமகிருஷ்ணன், எஸ். (ப.ஆ) -** **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,**
க்ரியா,
சென்னை - 41.
1992.

# நேர்காணல்

**கவிஞர் தங்கம் மூர்த்தி அவர்களை, அவர்தம் சொந்தப் பள்ளியான ஸ்ரீ வெங்கடேஸ்வரா மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி, திருக்கோகர்ணத்தில் செவ்வி (பேட்டி) கண்டபோது…**

ஆய்வாளர் : ஐயா, வணக்கம்.

கவிஞர் தங்கம் மூர்த்தி : வணக்கம். வாருங்கள். அமருங்கள்.

ஆய்வாளர் : ஐயா, நான் தங்களின் படைப்புகளை ஆய்வு செய்கின்றேன். தங்களின் படைப்புகள் பற்றியும் தங்களின் கவிதை ஈடுபாடு குறித்தும் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

கவிஞர் தங்கம் மூர்த்தி : கேளுங்கள். என் கருத்துகளைப் பகிர்ந்துகொள்கிறேன்.

ஆய்வாளர் : தங்களுடைய கவிதை ஈடுபாடு எத்தகையது?

கவிஞர் தங்கம் மூர்த்தி : கவிதை ஈடுபாடு பள்ளிக் காலத்திலேயே துவங்கியதுதான். நாட்டு நலப்பணித் திட்டம் போன்ற விழாக்களில் மற்றும் பள்ளிகளில் பங்கேற்ற அனுபவங்களும் எனக்குப் பரிசாகக் கிடைத்த கவிதை நூல்களின் தாக்கமும் என்னைக் கவிதைத் துறைமுகத்துக்கு அழைத்து வந்தன.

ஆய்வாளர் : ஆங்கில இலக்கியத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற தாங்கள் தமிழ்க் கவிதைகள் எழுதுவது குறித்துக் கூறுங்கள்.

கவிஞர் தங்கம் மூர்த்தி : இலக்கியத்திற்கு மொழி வேறுபாடில்லை. இறவாத் தன்மையே இலக்கியத்தின் பேராற்றல். இளங்கலை ஆங்கில இலக்கியம் பயின்றபோது என் பேராசிரியர் இரா. பாலச்சந்திரன் (பாலா) என்னை ஊக்கப்படுத்தினார். தமிழ்ப் புதுக்கவிதை வரலாற்றில் அவருக்குத் தனியிடம் உண்டு. அவர் இருமொழிப் புலமை வாய்ந்தவர். ஆங்கிலத்திலும், தமிழிலும் மிக அழகாகப் பேசக்கூடியவர். அவரது அறிவார்ந்த பயணத்தில் நான் பின் தொடர்ந்தேன். ஆங்கில இலக்கிய நூல்களையும் அதற்கு இணையாகத் தமிழ் இலக்கிய நூல்களையும் வாசித்தது காரணமாக இருக்கலாம்.

ஆய்வாளர் : மரபுக்கவிதை மற்றும் புதுக்கவிதை குறித்துத் தங்கள் கருத்து யாது?

கவிஞர் தங்கம் மூர்த்தி : மரபுக்கவிதை நம் தாய்வழிச் சொந்தம். புதுக்கவிதை புதிய சொந்தம். நம் ஆதித் தமிழின் அழகு மரபுக்கவிதை. புதுக்கவிதை மொழிக்கு நாம் அணிவிக்கும் ஆபரணம். மரபுக்கவிதை இரு கரைகளுக்குள் நடந்து செல்லும் நதி. புதுக்கவிதை என்பது வெள்ளம். மரபுக்கவிதை

சொற்கட்டுகளுக்குள் கட்டப்பட்டிருக்கும். ஒரு சொல் துருத்திக் கொண்டிருப்பினும் இலக்கணப் பிழை வெளிப்பட்டுவிடும். புதுக்கவிதையில் சொற்கள் வடிவக் கூண்டுக்குள் அடங்காது சுதந்திர வெளியில் பறக்கும்.

ஆய்வாளர் : புதுக்கவிதையின் தனித்துவம் யாது?

கவிஞர் தங்கம் மூர்த்தி : புதுக்கவிதையின் தனித்துவமே சுதந்திரம் தான். சிந்தனையில், வடிவத்தில், உள்ளடக்கத்தில் கவிஞனுக்குள்ள பூரண சுதந்திரம் புதுக்கவிதையின் பலம்.

ஆய்வாளர் : தமிழ் இலக்கிய உலகில் தங்களது ஆசானாக யாரை நினைக்கின்றீர்கள்?

கவிஞர் தங்கம் மூர்த்தி : என் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் இரா. பாலச்சந்திரன் என்ற பாலா. 'புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை', 'சர்ரியலிசம்' போன்ற தனிச் சிறப்புள்ள நூல்களைத் தந்தவர்.

ஆய்வாளர் : புதுக்கவிதை வடிவம் பற்றித் தங்களின் கருத்து.

கவிஞர் தங்கம் மூர்த்தி : காலந்தோறும் கவிதைகள் பல மாற்றங்களைக் காணுவதுண்டு. எல்லா மொழிகளிலும் கவிதை வடிவம் காலத்துக்குக் காலம் மாறி வருகிறது. கம்பன் தமிழைப் பாரதி எழுதவில்லை. கம்பனின் இலக்கிய நயமிக்க கவிதைகளுக்கும், பாரதியின் எளிய மொழிக்கும் வேறுபாடுகள் உண்டு. அதன் வழியாகப் புதுக்கவிதை, வசன கவிதை என கவிதைகள் வடிவங்களை மாற்றிக்கொண்டு வலம் வருகின்றன. வடிவ மாற்றங்கள் தவிர்க்க இயலாதவை.

ஆய்வாளர் : கவிஞர்களுக்குரிய அங்கீகாரம் பற்றிக் கூறுங்கள்.

கவிஞர் தங்கம் மூர்த்தி : கவிஞர்களுக்கு உரிய அங்கீகாரம் நம் சூழலில் மிகவும் குறைவு. படைப்பிலக்கியம் எளிதல்ல. படைப்பாளிகள் அவர்கள் வாழும் காலத்திலேயே கொண்டாடப்பட வேண்டும். ஒரு திரை நட்சத்திரத்தைக் கொண்டாடுபவர்கள் கவிஞர்களைக் கண்டுகொள்வதில்லை. கவிஞன் காலத்தைப் பிரதிபலிக்கிறான். காலத்தின் கண்ணாடியாகத் தன்னை மாற்றிக்கொள்கிறான். தன் கற்பனைச் சிறகுகளால் எல்லைகளின்றிப் பறக்கிறான். சமூக அவலங்களைப் படம்பிடிக்கிறான். கவிஞனைக் கௌரவிப்பது என்பது ஒரு சமூகம் தன்னையே கௌரவித்துக் கொள்வதைப் போல.

ஆய்வாளர் : தங்களின் மனம் கவர்ந்த கவிஞர் யார்?

கவிஞர் தங்கம் மூர்த்தி : கவிஞர் ஒருவர் அல்ல. பல கவிஞர்கள். சிற்பி, பாலா, மு.மேத்தா, அப்துல் ரகுமான், மீரா, கல்யாண்ஜி, அ.வெண்ணிலா... என் பட்டியல்

பெரியது.

ஆய்வாளர் : தங்கள் பார்வையில் இன்றைய சமூகம்...

கவிஞர் தங்கம் மூர்த்தி : பொது நலம் குறைந்து சுயநலம் மிகுந்த சமூகம் உருவாகி வருவதைக் கண்டு மனம் வேதனையடைகிறது. சுதந்திரத்தைத் தனது ஒழுக்கத்திற்காகப் பயன்படுத்த வேண்டிய சமூகம், அதனை அநீதிகளுக்குப் பயன்படுத்துகிறது. நேர்மையும் சுயகட்டுப்பாடுகளும் அறமும் ஒரு சமூகத்தில் உயிர்ப்புடன் இருந்திடல் வேண்டும்.

ஆய்வாளர் : வருங்காலப் படைப்பாளர்களுக்கு நீங்கள் கூற விளைவது?

கவிஞர் தங்கம் மூர்த்தி : வாழ்க்கையை, சமூகத்தை, அனுபவங்களைப் படைப்புகளில் உலவ விடுங்கள். படைப்பு எவ்வடிவத்திலும் இருக்கலாம். உங்கள் படைப்பு நாம் வாழும் சமூகத்தை ஓர் அங்குலம் மேலே உயர்த்தக் கூடியதாக இருக்க வேண்டும். தீவிர வாசிப்பு மட்டுமே படைப்பு மேன்மைக்குப் பயன்படும்.

ஆய்வாளர் : தங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி. நன்றி அய்யா.

கவிஞர் தங்கம் மூர்த்தி : எனக்கும் மகிழ்ச்சி. நன்றி.

**அட்டவணை 1 - பாவகையின் அடிப்படையில் கவிதைகளின் எண்ணிக்கை**

| நூலின் பெயர் | குறளடி ஹைக்கூ | அடித் தொடர்பா | சில கருத்துக் கோவைப்பா | பல கருத்துக் கோவைப்பா | தொடர் நிலைப்பா | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| முதலில் பூத்த ரோஜா | பக்.18-86 அனைத்தும் | - | - | - | - | **69** |
| தங்கம் மூர்த்தி கவிதைகள் | ப.40,50,56(2), 63(2),99,112 | **17** | **11** | **13** | **8** | **57** |
| பொய்யெனப் பெய்யும் மழை | ப.25,26,31,41, 42,43,47,48,49, 50,51(2),52(2), 53(2),54 | **4** | **10** | **2** | **5** | **38** |
| என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து | - | **15** | **27** | **8** | **6** | **56** |
| அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள் | ப.55,69 (2வரிகள்) (2) | **1** | **6** | - | **5** | **14** |
| கவிதையில் நனைந்த காற்று | - | - | **4** | **2** | **15** | **21** |
| மழையின் கையெழுத்து | 13 ஹைக்கூ | - | - | - | - | **13** |
| | | | | மொத்தக் கவிதைகள் | | **268** |

அட்டவணை 2 - அடிகளின் எண்ணிக்கை அடிப்படையில் கவிதைப் பகுப்பு

| நூலின் பெயர் | இரண்டு அடிகள் (2) | மூன்று அடிகள் (3) | நான்கு அடிகள் (4) | ஐந்து அடிகள் (5) | ஆறு அடிகள் (6) | ஏழு அடிகள் (7) | எட்டு அடிகள் (8) |
|---|---|---|---|---|---|---|---|
| முதலில் பூத்த ரோஜா (1994) | - | 69 | - | - | - | - | - |
| தங்கம் மூர்த்தி கவிதைகள் (2004) | - | 8 | 1 | 2 | 1 | 3 | 3 |
| பொய்யெனப் பெய்யும் மழை (2006) | - | 17 | - | 1 | - | 2 | - |
| என் பண்டிகையின் நாட்குறிப்பிலிருந்து (2010) | - | - | 5 | 3 | 4 | 2 | 4 |
| மழையின் கையெழுத்து (2013) | - | 13 | - | - | - | - | - |
| அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள் (2017) | 2 | - | 3 | 1 | - | - | - |
| மொத்தக் கவிதைகள் | 2 | 107 | 9 | 7 | 5 | 7 | 7 |

| நூலின் பெயர் | 9 அடிகள் | 10 அடிகள் | 11 அடிகள் | 12 அடிகள் | 13 அடிகள் | 14 அடிகள் | 15 அடிகள் | 16 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | 2 | 1 | - | 1 | - | 1 | 1 | 1 |
| பொபெம (2006) | 2 | 2 | 2 | 1 | 1 | - | - | - |
| ஏபநா (2010) | 3 | 1 | 2 | 4 | 4 | 3 | 2 | - |
| கநகா (2012) | - | 1 | - | 2 | - | - | - | - |
| அவாவிளநி (2017) | - | 1 | 1 | 1 | - | - | 1 | 1 |
| மொத்தக் கவிதைகள் | 7 | 6 | 5 | 9 | 5 | 4 | 4 | 2 |

| நூலின் பெயர் | 17 அடிகள் | 19 அடிகள் | 20 அடிகள் | 21 அடிகள் | 23 அடிகள் | 24 அடிகள் | 25 அடிகள் | 26 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | 2 | 1 | - | 1 | - | 1 | 1 | 1 |
| பொபெம (2006) | 2 | 2 | 2 | 1 | 1 | - | - | - |
| ஏபநா (2010) | 3 | 1 | 2 | 4 | 4 | 3 | 2 | - |
| குநகா (2012) | - | 1 | - | 2 | - | - | - | - |
| அவாவிளநி (2017) | - | 1 | 1 | 1 | - | - | 1 | 1 |
| மொத்தக் கவிதைகள் | 7 | 6 | 5 | 9 | 5 | 4 | 4 | 2 |

| நூலின் பெயர் | 27 அடிகள் | 28 அடிகள் | 29 அடிகள் | 30 அடிகள் | 32 அடிகள் | 33 அடிகள் | 34 அடிகள் | 35 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | 2 | 1 | - | 1 | - | 1 | 1 | 1 |
| பொபெம (2006) | 2 | 2 | 2 | 1 | 1 | - | - | - |
| ஏபநா (2010) | 3 | 1 | 2 | 4 | 4 | 3 | 2 | - |
| குநகா (2012) | - | 1 | - | 2 | - | - | - | - |
| அவாவிளநி (2017) | - | 1 | 1 | 1 | - | - | 1 | 1 |
| மொத்தக் கவிதைகள் | 7 | 6 | 5 | 9 | 5 | 4 | 4 | 2 |

| நூலின் பெயர் | 36 அடிகள் | 37 அடிகள் | 38 அடிகள் | 39 அடிகள் | 40 அடிகள் | 42 அடிகள் | 44 அடிகள் | 46 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | - | - | 3 | - | - | - | - | - |
| பொபெம (2006) | - | - | - | 1 | - | - | - | 1 |
| எபநா (2010) | 2 | 1 | - | - | - | 1 | 1 | - |
| கநகா (2012) | - | - | - | - | 1 | - | - | - |
| அவாவிளநி (2017) | - | - | - | - | - | - | - | - |
| மொத்தக் கவிதைகள் | 2 | 1 | 3 | 1 | 1 | 1 | 1 | 1 |

| நூலின் பெயர் | 47 அடிகள் | 50 அடிகள் | 51 அடிகள் | 54 அடிகள் | 56 அடிகள் | 57 அடிகள் | 61 அடிகள் | 64 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | - | 1 | - | 1 | - | 1 | 1 | - |
| பொபெம (2006) | - | - | 1 | 1 | - | - | - | - |
| ஏபநா (2010) | 2 | - | - | - | - | - | - | - |
| கநகா (2012) | - | - | - | - | 1 | - | - | - |
| அவாவிளநி (2017) | - | - | - | - | - | - | 1 | 1 |
| மொத்தக் கவிதைகள் | 2 | 1 | 1 | 2 | 1 | 1 | 2 | 1 |

| நூலின் பெயர் | 66 அடிகள் | 69 அடிகள் | 83 அடிகள் | 85 அடிகள் | 133 அடிகள் | 135 அடிகள் | 138 அடிகள் | 140 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| தமூக (2004) | - | 1 | - | - | - | - | - | - |
| பொபெம (2006) | - | - | - | 1 | - | - | - | - |
| எபநா (2010) | 1 | - | - | - | - | - | - | - |
| கநகா (2012) | - | - | 1 | - | 1 | 1 | 1 | 2 |
| அவாவிளநி (2017) | - | - | - | - | - | - | - | - |
| மொத்தக் கவிதைகள் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 2 |

| நூலின் பெயர் | 149 அடிகள் | 168 அடிகள் | 178 அடிகள் | 189 அடிகள் | 206 அடிகள் | 213 அடிகள் | 233 அடிகள் | 259 அடிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| கநகா (2012) | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| மொத்தக் கவிதைகள் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |

## அட்டவணை - 3 கவிஞர் தங்கம் மூர்த்தி பயன்படுத்திய உத்திகள்

| | | |
|---|---|---|
| அங்கதம் | : | மு.பூ.ரோ.ப.57 |
| எதுகை | : | க.ந.கா.ப.55<br>பொபெம.ப.32,33,39 |
| மோனை | : | கநகா.ப.69,109<br>பொபெம.ப.41,44 |
| இயைபு | : | கநகா.ப.35,36,52,58,59<br>தமூக.ப.32 |
| சொல்முரண் | : | தமூக.ப.27,28 |
| கருத்து முரண் | : | முபூரோ.ப.21,46,77<br>பொபெம.ப.51<br>தமூக.ப.89,91<br>அவாவிளநி.ப.113 |
| இரட்டைக்கிளவி | : | தமூக.ப.31<br>பொபெம.ப.44 |
| ஒலிக்குறிப்பு | : | தமூக.ப.110 |
| வினா-விடை | : | தமூக.ப.38,39<br>கநகா.ப.119 |
| நாட்டுப்புறத்தாக்கம் | : | எபநா.ப.79 |
| நாடகப்போக்கு | : | எபநா.ப.48 |
| சிறுகதை நடை | : | தமூக.ப.68 |
| உரையாடல் நடை | : | எபநா.ப.81 |
| அடுக்குத்தொடர் | : | தமூக.ப.57,102,112 |
| அடுக்கு வினா | : | தமூக.ப.38,39<br>கநகா.ப.119,120 |
| படிமம் | : | பொபெம.ப.41 |

| | | | |
|---|---|---|---|
| இலக்கண நெறி | | : | தசிதத.ப.34,79 |
| காட்சிப்படுத்தல் | | : | தமூக.ப.50,56<br>எபநா.ப.15,16,52<br>ம.கை.ப.88 |
| வருணனை | | : | தமூக.ப.100 |
| இயைபுக்கற்பனை | | : | தமூக.ப.33 |
| | | | தசிதத.ப.109,110 |
| படைப்புக்கற்பனை | | : | ம.கை.ப.20 |
| கருத்துவிளக்கக் கற்பனை | | : | பொபெம.ப.47<br>எபநா.ப.24 |
| உவமை | 1.வினையுவமை | : | ம.கை.ப.37 |
| | 2.பயனுவமை | : | கநகா.ப.13,104 |
| | 3.மெய் உவமை | : | கநகா.ப.69,155 |
| | 4.உரு உவமை | : | கநகா.ப.45,64,65<br>தமூக.ப.94 |
| | 5.அடுக்கு உவமை | : | கநகா.ப.24,112 |
| தொன்மம் | | : | கநகா.ப.42,99,138 |
| குறியீடு | | : | முபூரோ.ப.21,29,40 |
| இலக்கணை | | : | கநகா.ப.126,127<br>தசிதத.ப.109 |
| உருவகம் | 1.தொகை உருவகம் | : | தமூக.ப.40 |
| | 2.விரி உருவகம் | : | தமூக.ப.40<br>பொபெம.ப.47<br>கநகா.ப.109 |
| | 3.இயைபு உருவகம் | : | எபநா.ப.73<br>தசிதத.ப.51 |

| | | |
|---|---|---|
| அணி நயம் 1.உயர்வு நவிற்சி அணி | : | தமூக.ப.63 |
| 2.வஞ்சப்புகழ்ச்சி அணி | : | தமூக.ப.109 |
| 3.பிறிதுமொழிதல்அணி | : | பொபெம.ப.31 |
| 4.வேற்றுமை அணி | : | கநகா.ப.103 |
| இருண்மை | : | பொபெம.ப.26<br>முபூரோ.ப.84 |
| பன்னூற்புலமை | : | கநகா.ப.11,15,17,49,55,106,107,152<br>அவாவிளநி.ப.55<br>முபூரோ.ப.39<br>தமூக.ப.43 |

## கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதை நூல்கள்












## கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதை நூல்கள்












# கவிஞர் தங்கம் மூர்த்தியின் படைப்பிலக்கியக் கொள்கை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

நா. தனலெட்சுமி
(பதிவு எண்.1742)

**நெறியாளர்**

**பேராசிரியர்.சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப் பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

**(தேசியத் தர நிர்ணயக் குழுவின் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**நவம்பர் - 2021**

## முடிவுரை

மரபுக் கவிதைகளின் இலக்கணங்களை மீறிக் கவிஞன் தன் உள்ளத்து உணர்வுகளுக்குக் கருத்துச் செறிவூட்டிப் புதுமைப் போக்கில் படைக்கும் இலக்கியம் புதுக்கவிதை ஆகும். இருபதாம் நூற்றாண்டுப் புதுக்கவிதைப் படைப்பாளர்களில் ஒரு சிறந்த படைப்பாளராகத் தன்னை நிலை நிறுத்திய பெருமைக்குரியவர் கவிஞர் தங்கம் மூர்த்தி. தங்கம் மூர்த்தியின் கவிதைகள் குறித்துக் கவிஞர் முத்து நிலவன் கூறும் "ஆழத்தில் அப்துல் ரகுமான், அங்கதத்தில் மீரா, சன ரஞ்சகத்தில் மேத்தா, குரலில் பாலா" என்னுக் கூற்று தங்கம் மூர்த்தியைச் சிறந்த புதுக்கவிதைப் படைப்பாளராக இனம் காட்டும்.

மேலும் ஆங்கிலம், இந்தி, பிரெஞ்சு, மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இவரது கவிதைகள் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளமை இவர்தம் கவிதைகள் பெற்ற இடத்தைப் புலப்படுத்தும்.

புதுக்கவிதை அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா, சித்திரப்பா, குறும்பா, பொதுப்பா என்னும் ஆறு வகைகளில் அமையும் என்பர் இலக்கணிகள். கவிதையின் தொடக்கம், முடிவு ஆகிய அமைப்புகளும் உணர்வு-பொருள்போக்கைத் தடுக்காத ஒலி நயங்களும் புதுக்கவிதையின் கூறுகளாக உள்ளன.

இத்தகு சிறப்பு வாய்ந்த கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகள் குறும்பா (ஹைக்கூ), தொடர்நிலைப்பா, பொதுப்பா என்னும் வடிவங்களில் காணக்கிடக்கின்றன. இதுமட்டுமன்றி அடித்தொடர்பா, கருத்துக் கோவைப்பா, தொடர்நிலைப்பா போன்ற வடிவங்களில் மிகுதியான கவிதைகள் அமையப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. அவர்தம் முதல் கவிதைத் தொகுப்பு குறும்பா என்னும் ை`f;$ tbtpNyNa ntspte;jJ. ,jd;gpd; ,uz;lb Kjy; 259 mb tiuapYk; ftpijfs; gilj;J புதுக்கவிதைக் கவிஞர்களிடமிருந்து சற்று மாறுபடுகிறார். i`f;$ tbtf; ftpijahapDk; njhlh;epiyg;ghthapDk; $wte;j fUj;jpd; mbg;gilapy; RUq;ff; $wp tpsq;f itj;jy; vd;Dk; cj;jpNahL fUjpaJ Kbj;jy; vd;Dk; cj;jp nfhz;L> ftpij gilj;jy; ,th;jk; ftpijf; nfhs;ifahf cs;sJ.

சமூக அவலங்களை எடுத்துரைக்கும் கவிதைகளைக் கருத்துக்கோவைப் பாவடிவிலும், சமூகத்திற்குக் கூறவேண்டிய கருத்துகளைப் பொதுப்பாவடிவிலும் எடுத்துரைத்துள்ளார்.

காதலை மூன்று அடிகளில் சுருங்கக் கூறியவர் ‘மலரினும் மெல்லியது’ எனும் தலைப்பில் காதலைப்பற்றி 213 அடிகளில் மிக விரிவாக, பல்வேறு கோணங்களில், காதலைக் கரும்பாகவும் கணிப்பொறியாகவும் அதி நவீன அலைபேசியாகவும் காண்கின்றார். மேலும் காதல் நோயாகவும், அந்நோய்க்குத் தானே மருந்தாகவும் விளங்குவதையும் எடுத்துரைக்கின்றார். காதல் செல்வத்துள் எல்லாம் தலையாய செல்வமாகவும் பாவநதிகளைப் புனிதப்படுத்தும் சீவநதியாகவும் கவிஞரால் உருவகிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சமூகத்தில் நிலவும் அவலங்களை விளக்குவதற்கு 206 அடிகளால் ஆன தொடர்நிலைப் பாவைக் கையாண்டுள்ளமை கவிஞரின் வடிவக் கையாளுகையைப் புலப்படுத்தும். மேலும் இயற்கையை மனிதர்கள் சீரழித்து வரும் நிலை கண்டு வருந்தி ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய காற்றைப் பற்றி 233 அடிகளில் தொடர்நிலைப்பா எழுதியுள்ளார். கூறவந்த கருத்திற்கேற்ப வடிவத்தையும் அடிகளையும் கையாளுதல் என்பது தங்கம் மூர்த்தியின் கவிதை வடிவக் கொள்கையாக உள்ளது.

கவிஞர் தங்கம் மூர்த்தி அவர்களின் கவிதைகளில் காணலாகும் பாடுபொருள் இயற்கை, காதல், குடும்பம், சமூகம், தன்உணர்வு என்னும் பொருண்மைகளில் அமைந்துள்ளன.

உலகின் மூலாதாரங்களாகிய ஐம்பெரும்பூதங்கள், அவற்றின் இயக்கம், கடல் மற்றும் நிலத்தில் வாழும் உயிரினங்களின் செயல்கள், அவற்றின் மூலம் மனித குலத்திற்கு அறிவுறுத்தப்படும் செய்திகள் போன்றவை இயற்கை எனும் பாடுபொருளில் விளக்கப்பட்டுள்ளன. மனிதனின் நற்பண்புகளையும் தவிர்க்க வேண்டிய குணங்களையும் இயற்கையோடு ஒப்புமைப்படுத்தி கவிஞர் எடுத்துரைத்துள்ளமை சுட்டுதற்குரியது.

மனிதர்தம் வாழ்வில் இரண்டறக்கலந்த காதல் உணர்வு குறித்தும் பல கவிதைகள் படைத்துள்ளார். இதில் காதலனது மனவுணர்வு காதலியின் நலம்புனைந்துரைத்தல், காதலியின் கடிதத்தைப் பாதுகாப்பதற்காகத் தனக்குப்பிடித்த மழையில் நனையாதிருத்தல், காதலியின் பிரிவால் வருந்துதல், காதல் போயின் சாதல் எனக் காதலின் பல்வேறு பரிணாமங்களையும் கவிதையாக்கியுள்ளார்.

கவிஞரின் குடும்பம் குறித்த பார்வையில் தாய்மையின் பங்களிப்பு, ஒரு தந்தையின் மன உணர்வு, குழந்தைச் செல்வத்தால் பெறும் குதூகலம், காதல் தரும் களிப்பு, இல்வாழ்க்கையில் கிடைக்கும் இன்பம் மற்றும் இடர்கள் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

சமூகப் பார்வையில் திருமணச் சந்தையில் பலிகடாவாக்கப்படும் மங்கையரின் நிலைக்கு இரங்கி, ஆடவரைக் கண்டிக்கும் விதமாக, சமூகத்தில் தான் காண விரும்பும் மாற்றத்தைக் காட்டுகிறார். மணக்கொடை தவிர்த்து மங்கையரை மணம்புரிய ஆடவர் எவரும் ஆயத்தப்படவே இல்லை என்பது கண்டு மனம் கலங்கும் கவிஞர் பெண்களைப் புதுயுகம் படைக்க, புறப்பட அழைக்கிறார். திரைகளில் வரும் வசனங்களுக்குக் கரவொலி எழுப்பும் சமூகம், நிசவாழ்வில் இன்னும் விழிப்புணர்வு பெறாத நிலையைக் கவிதையில் காட்டிச் சமூகத்தின் குற்றத்தைப் புரிய வைக்க முயல்கிறார்.

சமூகத்தில் நிலவும் சுகாதாரக் கேடான சூழல்கள், சாலைகள், மருத்துவமனைகள், பேருந்துகள் எனப் பொதுச் சொத்துக்கள் யாவும் பராமரிப்பின்றி மக்களின் பயன்பாட்டிற்கு ஏற்ற வகையில் இல்லாத சூழல், அரசியல் அவலங்கள், மகளிர் தம் திருமணத்தில் அவர்களை அச்சுறுத்தும் மணக்கொடை, சாதி, மத பேதங்களால் உண்டாகும் பிரச்சினைகள் போன்றவை சமூகம் எனும் தலைப்பில் விளக்கப் பெற்றுள்ளன.

அரசியல் சீர்திருத்தம், சமயச் சார்பற்ற நிலை என்னும் இரண்டும் கை வரப் பெற்றாலே சமுதாயச் சமநீதி கிடைத்து விடும் என்பது கவிஞரின் கொள்கையாக உள்ளது. சமய வேறுபாடற்ற சமுதாயம் காண விரும்பும் கவிஞர் தேவாலயத்துக் கற்கண்டோ, பெருமாள் கோவில் பொங்கலோ, முகமது நபி கொடுத்த சர்க்கரையோ எல்லாமே இனிப்புத்தான் இதில் வேறுபாடில்லை என்கிறார். அரசாங்க அலுவலகங்களில் நடைமுறையிலுள்ள கையூட்டு முறைகளைக் கண்டிப்பதிலும், சாதிக்கரு வளர்க்கும் சாத்தானைத் தண்டிக்க முனைவதிலும் கவிஞர் தனித்துவம் காட்டியுள்ளார்.

மரங்கள், பறவைகள் போன்ற ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை உள்ள உயிரினங்கள் கூடத் தன் பயன்பாட்டால் பிறர்க்கு உதவும் தன்மை, சக உயிர்களை மதிக்கும் போக்கு போன்றவை கவிஞரால் மிகச்சிறப்பாக எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. அஃறிணைகளைக்கண்டு உயர் திணையாகிய மனிதர்கள் பாடம் கற்க வேண்டும் என்கிறார் கவிஞர்.

தம் அரிய படைப்புகளால், தன் சீரிய சிந்தனைகளால் உலகிற்குப் பங்களிப்புச் செய்த வள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், பாரதி, காந்தியடிகள் போன்றவர்களைப் பற்றி எழுதியுள்ள கவிதைகள் இன்றைய சமூகத்திற்குப் பெரிதும் பயன்படுவனவாய் உள்ளன. கவிஞரின் தமிழ் மொழிப்பற்றும், தாயகப் பற்றும் அவர் தம் கவிதைகளில்

அழகுற வெளிப்பட்டுள்ளன. புத்தர் மற்றும் காந்தியடிகளின் போதனைகளை உலகம் எடுத்துக் கொள்ளத் தவறிய நிலையைப் போதி மரத்தடியில் ஞானம் பெற்ற புத்தரே அம்மரத்தை வெட்டி விட்டதாகப் பாடுவது புலப்படுத்தும்.

இதிகாசமாந்தர்கள் குறித்த கற்பனையில் சூர்ப்பனகை குறித்த கவிதை அவளைத் திருந்தியவளாகக் காட்டுவதுடன், தன் அண்ணனின் சாயலில் அநேக ஆண்கள் காணக் கிடைப்பதாகக் கூறுவதன் மூலம் சமுதாயம் பாழ்பட்டுள்ள நிலையை எடுத்துரைக்கின்றார். மேலும் பிறன்மனை நோக்காப் பேராண்மை எனும் ஒழுக்க நெறியையும் இதன்வழி வலியுறுத்துகின்றார்.

ஆயுதங்களும், மலர்களும், நதிகளும் தமக்குள் மாநாடுகள் நிகழ்த்தி, மனிதர்கள் கொள்ள வேண்டிய கொள்கை உறுதிகள் பற்றி நமக்கு உரைப்பதாகக் கவிஞர் படைத்துள்ளமை மாந்தர் குலம் மனம் கொள்ள வேண்டிய செய்தியாகும்.

காலந்தோறும் காலம் மட்டும் என்றும் இளமையாய், தன்னைப் புதுப்பித்துக் கொண்டு, சூழலுடன் கைகோர்த்துச் செல்வதைச் சுட்டிக்காட்டும் கவிஞர் இதன்வழி உலகத்தோடு ஒட்ட ஒழுகலின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார்.

இலக்கியங்கள் அவை கூறும் கருத்தால் மட்டும் கவின் பெற்றுத் திகழவில்லை. உணர்த்தும் திறத்தாலும் அவை ஒளி பெற்றும் உயிர் பெற்றும் திகழ்கின்றன. இலக்கிய உணர்வு கூறும் பொருளில் இல்லை; உணர்த்தும் திறத்தில் உண்டு என்பதற்கேற்ப கவிஞனின் மொழித் திறமையும் ஆளுமையும் உத்தியைச் சிறப்பாகக் கையாள உதவுகின்றன.

தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் பல ஹைக்கூ என்னும் குறும்பா வகையின. இச்சிறிய வடிவிலும் எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, அடுக்குத்தொடர், உவமை, உருவகம் என்பன போன்ற பல்வேறு உத்திகளைக் கையாண்டு தம் படைப்புகளைச் சிறக்கச் செய்துள்ளார். இதுமட்டுமன்றி தொடர்நிலைச் செய்யுள் அமைப்பில் புனையப்பட்ட தொடர்நிலைப்பாக்களிலும் இவ்உத்திகளைக் கையாண்டுள்ளார்.

'சூர்ப்பனகையுடன் ஒரு சுற்றுப்பயணம்', 'நடிகர் திலகத்திற்கு மரியாதை' என்னும் கவிதைகள் கதைப் பாங்குடன் அமைந்துள்ளன.

அடுக்கு வினா அமைப்பில் 'வீசிய துண்டுகள்' எனும் தலைப்பில் அடுக்கடுக்காய் வினாக்கணை தொடுத்து வறுமையுற்ற வாக்காளனின் அவலநிலையை விளக்குகிறார்.

கருத்து வெளிப்பாட்டிலும் கவிதை அமைப்பிலும் உரையாடல் உத்தி சிறந்த இடத்தைப் பெறுகின்றது. பேச்சு மொழியின் ஆளுமையை இவ்வகைக் கவிதைகள் தன்னகத்தே கொண்டுள்ளன. காதல் வயப்பட்ட தலைவன், காதலியிடம் தன் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்துவதற்கு இவ்வுரையாடல் உத்தியைக் கையாண்டுள்ளார்.

இன்றைய கல்வி நிலையங்களின் போக்கைக் கண்டிக்கும் விதமாக 'மூச்சுத்திணறும் சரஸ்வதி தேவி' எனும் தலைப்பிலான கவிதையில், கேள்விகளுக்கு விடை இல்லாமல் சரஸ்வதி தேவியே கலங்குவதாகக் கூறுவது வினா-விடை வடிவ உத்திக்குச் சிறந்த சான்றாகும்.

கவிதையின் கருத்தை விளக்க உவமையின் பல்வேறு வகைகளான வினை, பயன், மெய், உரு ஆகியவற்றோடு அடுக்குவமைகளையும் உத்தியாகக் கையாண்டுள்ளார். உருவகங்கள் தொகை உருவகம், விரி உருவகம், இயைபு உருவகம் என்னும் நிலையில் உத்திகளாக் கைக்கொள்ளப்பெற்றுள்ளன.

இருண்மை, 'கூடார்த்தம்' எனும் உத்திகளும் இவர்தம் கவிதைகளில் காணப்பெறுகின்றன.

தங்கம் மூர்த்தியின் படைப்புகளில் அவர்தம் பன்னூல் புலமையும், பழமொழியும் உத்திகளாக வெளிப்பட்டுள்ளன. கவிதை அழகியலுக்காகவும், சமூக அவலத்தைச் சாடுவதற்காகவும் ஆங்கில வார்த்தைகளைக் கலந்து எழுதும் முறையை உத்தியாகக் கையாண்டுள்ளார்.

செல்வாக்குள்ள பழைய இலக்கியங்கள் பின்னர் வந்த படைப்பாளிகளுக்கு அதைவிட உயர்ந்த அல்லது அதே தரத்திலான படைப்பை உருவாக்கும் ஆர்வத்தைக் கிளர்ந்து எழச் செய்கின்றன. மரபு என்பது முந்தைய தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், முடிபு, அறிவு ஆகிய அனைத்தும் சேர்ந்தது. புதிய வாழ்க்கை அதன் தேவைக்கு இசையாத, அறிவுக்கு இசையாத, முந்தைய அறிவு அனுபவங்களைப் புறக்கணித்து விடுகிறது. அப்போது பழைய மரபு மறைந்து புது மரபு ஒன்று தழைக்கிறது.

வாழ்க்கையை இன்னதென்று அடையாளம் காட்டும் முயற்சியில் தமிழ்க் கவிஞர்களின் சிந்தனையும் காலந்தோறும் மாறி வந்திருக்கிறது. இச்சிந்தனை மாற்றத்திற்குக் கால வளர்ச்சி, பாடுபொருள் ஒற்றுமை, சமுதாய மாற்றம், புதுமை வேட்கை ஆகியன காரணங்களாக அமைகின்றன.

கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகளில் இலக்கியக் கருத்து மரபில் புதுமையாக இலக்கியத் தொடரை அப்படியே எடுத்தாண்டு, கருத்தில் மட்டும் புதுமையைப் புகுத்தியுள்ளார்.

பண்டைய அகப்பொருள் மரபில் மாற்றம் காண்பவராகக் கவிஞர், தலைவியைப் பிரிந்த தலைவன் கண்துயில் மறுத்தல் நிலையில் இருப்பதாகவும் தலைவி அயல்நாட்டிற்குப் பிரிந்து சென்றதால் தலைவன் வருந்தி அவள் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பதாகவும் கால மாற்றத்திற்குத் தக கவிதை புனைந்துள்ளார்.

பெண்மை என்பது அச்சம், மடம், நாணம் என்னும் குணங்களையே கைக்கொள்ளக் கூடியது என்ற மரபை மாற்றி, புதுயுகம் காக்கப் புறப்படு எனப் பெண்ணியச் சிந்தனையில் புதுமை படைத்துள்ளார்.

கவிதை நூலுக்குத் தலைப்பிடுவதில் புதுமையாகப் ‘பொய்யெனப் பெய்யும் மழை’, ‘அந்த வானவில்லுக்கு எட்டு நிறங்கள்’ என்ற நூல்களின் பெயர்களை அமைந்துள்ளார்.

இராமாயணக் கதை மாந்தர்களைப் புதுமையாகப் படைத்து, அவர்களின் குண நலன்களில் மாற்றங்களைக் கற்பித்துப் புதுமை காட்டியுள்ளார். காதலை அதிநவீன அலைபேசியாகவும் கணிப்பொறியாகவும் கவிஞர் உவமித்துள்ளமை அவர்தம் புதுமைப் போக்கிற்குச் சிறந்த சான்றுகளாகும்.

இக்காலச் சமூகச்சிக்கல்களை அதிகம் மையமிட்டுச் சமூக, அரசியல், பொருளாதாரப் பண்பாட்டுக் களங்களில் புதிய வாழ்வின் அர்த்தத்தேடலை நோக்கி படிப்பவரை அழைத்துச் செல்வது கவிஞர் தங்கம்மூர்த்தியின் கவிதைக் கொள்கையாக அமைந்துள்ளது.

மனிதர்களின் மன உணர்வுகளை மட்டுமன்றி, பிறஉயிரினங்களின் உணர்வுகளைக் காட்சிப்படுத்துவதிலும் கவிஞர் தனி முத்திரை பதித்துள்ளார். எந்தப் பாடுபொருளாக இருந்தாலும் அதை வழக்கமான முறையில் இருந்து மாறுபட்டுப் புதிய கோணத்தில் படுவது கவிஞர் தம் கவிதைக் கொள்கையாக உள்ளது.

இயற்கையை அதன் ஒவ்வொரு பொருளிலும் கண்டு அழகியல் கண்ணோட்டத்தில் வருணிப்பது கவிஞர்களின் மரபு. ஆனால் கவிஞர் தங்கம்மூர்த்தி இயற்கையின் கூறுகளான மரங்கள், மலர்கள், நதிகள் என அனைத்தையும் சமூக அவலத்தைச் சுட்டுவதற்கே பெரிதும் பயன்படுத்தியுள்ளார். இயற்கையில் இறையைக்

காண்பது பண்டைய மரபு. இயற்கையில் சமூகத்தைக் காண்பது கவிஞர் தங்கம் மூர்த்தியின் தனித்தன்மையாக உள்ளது.

**மேலாய்வுக் களங்கள்**

கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதைகள் பெரும்பான்மையும் சமூகச் சீர்திருத்தம் சார்ந்து காணப்படுவதால் கவிஞரின் சமூகப் பார்வை குறித்து மேலாய்வு செய்ய இயலும்.

கவிஞரின் படைப்புகளை சமகாலப் பிறகவிஞர்களின் படைப்புகளோடு ஒப்பிட்டு ஒப்பாய்வு மேற்கொள்ளலாம்.